# அந்தோன் மக்காரென்கோ



# பள்ளிகளில் சோவியத் போதனை— சில பிரச்சினைகள்

# அந்தோன் மக்காரென்கோ

# பள்ளிகளில் சோவியத் போதனை— சில பிரச்சினைகள்

தொகுத்து நூன்முகம் எழுதியவர்:
வி.மி. கோரத்தவ்,
பிஎச்.டி. (போதனைமுறை இயல்).



முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ

# பொருளடக்கம்

## தலைசிறந்த சோவியத் போதனை இயல் நிபுணர் அ. செ. மக்காரென்கோ

''நீங்கள் வியப்பூட்டும் மாமனிதர்'' என்று அந்தோன் செம்யோனவிச் மக்காரென்கோவுக்கு எழுதினார் மக்ஸீம் கோர்க்கி. மக்காரென்கோவின் பல்துறை மேதை உண்மையாகவே பிரமிக்க வைக்கிறது. அவர் சிறந்த போதனை இயல் அறிஞர். போதனை இயல் முனைமுகத்தின் மிக மிகக் கடினமான பகுதியில் பணியாற்றி, நூற்றுக்கணக்கான அகதிச் சிறுவர் சிறுமியரின் உள்ளங்களில் அவர்கள் இழந்துவிட்ட மனித நம்பிக்கையை மீண்டும் தளிர்க்கச் செய்தார். ஆக்க உழைப்பு, அறிவையும் மெய்யான மனிதப் பண்பாட்டையும் பெறுவதற்கான விடா முயற்சி என்னும் நெடுஞ்சாலையில் அவர்கள் முன்னேற வழி வகுத்தார். அவர் அற்புதமான எழுத்தாளர். ''போதனை இயல் காவியம்'' என்னும் நூலை இயற்றியவர். சோவியத் சமூகத்தின் போதனை இயலைக் கலைப்பாங்குடன் ஆழ்ந்து ஆராயும் வாய்ப்பை அவர் சோவியத் இலக்கியத்துக்கு அளித்திருக்கிறார். புது மனிதனை உருவாக்கும் முயற்சியின் மாண்பைத் தெளிவாகப் புலப்படுத்தி இருக்கிறார். ஆழ்ந்த சிந்தனை உள்ள சித்தாந்தகர்த்தரான அவர் போதனை இயலுக்கு அழியாத மரபுச் செல்வத்தை விட்டுச் சென்றிருக்கிறார்.

அந்தோன் செம்யோனவிச் மக்காரென்கோ ஹார்க்கவ் மாநிலத்தைச் சேர்ந்த பெலப்போலியெ என்னும் நகரில் 1888ம் ஆண்டு மார்ச்சு மாதம் 1ம் (புதிய காலண்டர் படி 13ம்) தேதி பிறந்தார். அவருடைய தகப்பனார் இருப்புப் பாதைத் தொழிலாளர். கண்டிப்பும் கருணும் உள்ளவர்.

1905ம் ஆண்டு கிரெமன்சூக் நகரில் போதனை இயல் படிப்பை முடித்தபின், கிரியூக்கவ் தொழிலாளர் குடியிருப்பில் இருந்த ரெயில்வே பள்ளியில் ஆசிரியராக நியமிக்கப்பட்டார் மக்காரென்கோ. தொடக்கப் பள்ளியில் அவர் ஒன்பது ஆண்டுகள் வேலை செய்தார். 1905-1907ல் நடந்த முதலாவது ருஷ்யப் புரட்சியின் பாதிப்பினால் இளைஞர் மக்காரென்கோவின் உலகக் கண்ணோட்டமும் போதனை இயல் பற்றிய கருத்துக்களும் உருவாயிருந்தன. தொடக்கப் பள்ளியில் செய்த வேலை இந்தக் கண்ணோட்டமும் கருத்துக்களும் செப்பமாக அமைவதற்கு முதற் படியாக விளங்கியது. மக்ஸீம் கோர்க்கியின் படைப்புக்கள் இந்த ஆண்டுகளில் மக்காரென்கோவைப் பெரிதும் ஆட்கொண்டன. தமக்கு மார்க்ஸீயப் பிரபஞ்ச உணர்வு ஏற்படக் காரணமாய் இருந்தவர் கோர்க்கி என்று பிற்காலத்தில் மக்காரென்கோ கூறினார்.

போதனை இயல் சித்தாந்தத்தில் தமக்குத் தேர்ச்சி பற்றாது என்பதை உணர்ந்த இளைஞர் மக்காரென்கோ, தமது இருபத்தாறுவது வயதில் ஆசிரியத் தொழிலை நடுவில் விட்டுவிட்டுப் பல்தாவா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார். அசாதாரணத் திறமையுடன் பயின்று தங்கப் பதக்கத்துடன் கல்லூரிப் பயிற்சியை முடித்தார். மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சியின் போது அவர் கிரியூக்கவ் தொடக்கப்பள்ளி ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் தலைவராகப் பணி ஆற்றிக் கொண்டிருந்தார் (இந்தக் கல்லூரியில் எட்டு, ஒன்பது ஆண்டுகள் பயின்று தேறியவர்கள் தொடக்க வகுப்புக்களின் ஆசிரியர்களாக வேலை செய்ய உரிமை பெற்றார்கள்).

மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி மக்களின் பண்பாட்டுக்காகப் பேராட முன் ஒருபோதும் இல்லாத வாய்ப்பு வசதிகளை ஏற்படுத்தியது. பெரும்பாலான பள்ளி ஆசிரியர்கள் போன்றே மக்காரென்கோவும் இந்த வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்வதில் முனைந்தார். தமது வட்டாரத்தில் பொதுக் கல்வி முறையை மாற்றி அமைப்பதில் அவர் மிகுந்த ஊக்கத்துடன் பங்கு கொண்டார்.

நாட்டுக்கு மிகவும் துன்பம் நிறைந்த நாட்கள் தொடங்கின: தலையீட்டாளர்களையும் உள்நாட்டுப் புரட்சி விரோதி

களையும் எதிர்த்துப் போராடுவதில் இளம் சோவியத் குடியரசு தனது சக்திகள் எல்லாவற்றையும் ஈடுபடுத்தியது. உள்நாட்டுப் போர் பல குடும்பங்களின் முறையான வாழ்க்கைப் போக்கைக் குலைத்துவிட்டது. விளைவாக, பல ஆயிரம் சிறுவர் சிறுமியர் அகதிகள் ஆகி விட்டார்கள். குழந்தைகள் நாதியற்றுத் திரிவது பொது வழக்கு ஆகிவிட்டது. குடும்பமும் இருக்க இடமும் பிள்ளைப் பருவ இன்பமும் அற்ற குழந்தைகளைக் காக்கும் பொருட்டு போல்ஷிவிக் கட்சியும் சோவியத் அரசும் தங்கள் சிறந்த ஊழியர்களை அனுப்பின. மக்காரென்கோ மக்கள் கல்வித் துறையின் பல்தாவா மாநிலக்கிளையின் அழைப்பை ஏற்று, குற்றத் தொழிலினரான சிறுவர் சிறுமியர்களுக்காக மக்ஸீம் கோர்க்கியின் பெயரால் ஒரு குடியேற்றத்தை (காலனி) 1920ல் அமைத்தார்.

அந்த நாட்கள் முதல் பதினாறு ஆண்டுக் காலம் கோர்க்கி குடியேற்றத்திலும் த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனிலும் மக்காரென்கோ போதனைப் பயிற்சிச் சோதனைகள் நிகழ்த்தினார். இந்தச் சோதனைகளின் விளைவுகள் பிரமிப்பூட்டுபவையாக இருந்தன. போதனை இயல் பற்றி மக்காரென்கோவின் கருத்துக்கள் படைப்புத் தன்மையுடன் மலர்வதற்கு இந்தக் காலம்தான் அடி கோலியது. சோவியத் போதனை இயலின் அரு நிதியமாகத் திகழ்கின்றன இந்தக் கருத்துக்கள்.

மக்காரென்கோவின் போதனைப் பயிற்சிச் சோதனை தனித்து நிற்கவில்லை. சோவியத் போதனை இயல், நடைமுறை ஆகியவற்றின் வளர்ச்சியில் இன்றியமையாத படியாக விளங்குகிறது அது. சோவியத் கல்விமுறையும் கம்யூனிஸ போதனைப் பயிற்சிச் சித்தாந்தமும் நடைமுறையும் பெற்றுள்ள கோட்பாட்டு வெற்றிகள் இந்தச் சோதனையின் அடிப்படையாக அமைந்துள்ளன. வாழ்க்கையுடனும் கம்யூனிஸக் கட்டுமான நடைமுறையுடனும் கல்விக்கும் போதனைக்கும் உள்ள உறவுகளை வலுப்படுத்தும் கோட்பாடு ஒத்திசைந்த முறையில் கடைப்பிடிக்கப்படுவது இவற்றில் முதன்மையானது.

மனிதனின் மிகப் பெரிய, முக்கியமான போதகன் வாழ்க்கையே ஆகும். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபதுக்களின் தொடக்கத்தில் நிலவிய அசாதாரணமாகக் கடினமான நிலைமைகளில் சோவியத் எதார்த்தத்தின் விறல்மிக்க போதனைப் பாதிப்பை மக்காரென்கோ காண்பதற்கு உதவியது

நன்மை நம்பிக்கை நிறைந்த அவரது திறமை. போதகனின் கடமை நீதி உபதேசங்கள் என்னும் உறுதியற்ற தடை வேலியால் சிறுவர் சிறுமியரை வாழ்க்கையிலிருந்து விலக்கி வைப்பது அல்ல, புது மனிதனைப் பயிற்றுவதற்கு வாழ்க்கையின் அறிவார்ந்த போதனைச் சக்தியைப் பயன்படுத்துவதே என்று மக்காரென்கோ புரிந்து கொண்டார். அதே சமயம், வாழ்க்கையின் நலம் விளைக்கும் பாதிப்பைச் செயலின்றி நம்பி இருப்பதும், அது போதனைப் பயன்களை நல்கும்வரை காத்திருப்பதும் சரி ஆகாது, ஏனெனில் எல்லா வகை வாழ்க்கையும் எப்போதும் தேவையான திசையில் போதனை அளிப்பதில்லை என்பதை அவர் நன்கு உணர்ந்தார்.

குழந்தைகளின் வாழ்க்கை அனைத்தும் போதனை இயல் நோக்கத்துக்குப் பொருந்த ஒழுங்கமைக்கப்பட வேண்டும், கம்யூனிஸ போதனையின் நோக்கங்களுக்கு ஒத்திருக்க வேண்டும் என்று கோரினார் மக்காரென்கோ. அவரது தலைமையில் இயங்கிய த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனுக்கு வருகை தந்த பலர், அது ''வருங்காலக் கூட்டு சமுதாயத்தின் முன்மாதிரி'' என்று கருதியதில் வியப்பில்லை. த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனைச் சேர்ந்தவர்களின் வாழ்க்கை சோவியத் எதார்த்தத்தின் சிறந்த, முன்னே செல்லும் போக்குக்களைத் தன்னகத்தே கொண்டிருக்கும் விதத்தில் போதனை ஆசிரியர்களால் ஒழுங்கமைக்கப்பட்டிருந்தது. எனவேதான் அதில் பயின்றவர்கள் முன்னணியினராகவும் உண்மையான கம்யூனிஸக் கோட்பாடுகளால் உரம் பெற்றவர்களாகவும் திகழ்ந்தார்கள்.

குழந்தைகளின் வாழ்க்கையைப் போதனை இயல் நோக்கத்துக்குப் பொருந்த ஒழுங்கமைப்பதற்கு ஏற்ற போதனை முறையை ஆராய்ந்து தேடிய மக்காரென்கோ அத்தகைய ''ஒரே பொது முறையாக'' இருக்கக் கூடியது கூட்டு சமுதாயமே என்ற முடிவுக்கு வந்தார்.

''நம்முடைய பாதை பழகுமுறைப் பயிற்சி என்ற ஒன்றுதான். கூட்டு சமுதாயம் இத்தகைய பயிற்சிக்கான அரங்கு ஆகும்''* என்று எழுதினார் மக்காரென்கோ.

---

* அ. ஸெ. மக்காரென்கோ. ஏழு பாகங்கள் கொண்ட நூல்திரட்டு. போதனை இயல் அக்காதமிப் பதிப்பகம், மாஸ்கோ, 1958. தொகுதி 2, பக்கம் 181.

குழந்தைகளின் கூட்டு சமுதாயத்தை சோவியத் சமூகத்தின் அடி நிலைக் குழுவாக அமைக்கும் கருத்து அந்தக் காலத்தில் மற்ற போதனை இயலாராலும் ஆதரிக்கப்பட்டது. ஆனால் மக்காரென்கோவின் நூல்களில்தான் இந்தக் கருத்து மேற்கொண்டு விரிவாக்கப்பட்டது. சோவியத் போதனை இயலில் போதிக்கும் கூட்டு சமுதாயம் என்னும் கருத்தை முதன் முதல் வெளியிட்டவர் மக்காரென்கோவே ஆவார். இதை அவர் பின்வருமாறு சித்திரித்தார்:

''போதிக்கும் ஆதர்ச சோவியத் கூட்டு சமுதாயம், சோஷலிஸ முறையில் அமைந்த குழந்தைகளின் கூட்டு சமுதாயமே ஆகும். இது வெகு காலமாகவே உருவாகியுள்ளது. ஓரிடத்தில் குவிந்த பெரிய கூட்டு சமுதாயச் சக்திகளின் அடிப்படையில் பொருளியல் ஆன்மிக வளர்ச்சி பெற்றிருக்கிறது. மரபும் செவ்வையான வடிவமும் பெற்றிருக்கிறது. நுட்பமான போதனை இயல் உத்திகளைக் கருவிகளாகக் கொண்டிருக்கிறது.*

மக்காரென்கோ குழந்தைகளை போதித்து வளர்ப்பதில் கூட்டு சமுதாயத்தின் மிகப் பெரிய பங்கை ஒப்புக்கொண்டதுடன் நின்றுவிடவில்லை. போதிக்கும் கூட்டு சமுதாயம் பற்றிய சித்தாந்தத்தின் அடிப்படைப் பிரச்சினைகளை ஆராய்ந்து அவற்றுக்குத் தீர்வு காண்பதில் அவர் கணிசமான தூரம் முன்னே சென்றார். இதுவே அவர் ஆற்றிய பணி ஆகும். இந்தப் பிரச்சினைகளின் வட்டம் விரிவானது.

முதலாவதாக, கூட்டு சமுதாயம் என்பது தெளிவான வடிவற்றதோ திண்மை இல்லாததோ அல்ல. அதற்குத் திட்டவட்டமான ஸ்தாபன வடிவம் உண்டு. ஒன்றித்த பொதுக் கூட்டு சமுதாயம் அடிநிலைக் கூட்டு சமுதாயங்களாகப் பிரிகிறது. அடிநிலைக் கூட்டு சமுதாயங்களின் வகைகளை மக்காரென்கோ விரிவாக ஆராய்ந்தார். கூட்டு சமுதாயத்தின் வளர்ச்சித் தரத்தைப் பொறுத்து, வெவ்வேறு வகைச் செயல்களில் ஒரே வயதுள்ள அல்லது வெவ்வேறு வயதுகள் கொண்ட குழந்தைகளின் கூட்டுக்கள் உருவாகின்றன. குழந்தைகளது கூட்டு சமுதாயத்தின் சுதந்திரச் செயல்பாட்

---

* அ.ஸெ. மக்காரென்கோ. நூல் திரட்டு, தொகுதி 3, பக்கம் 458.

டையும் சுயநிர்வாகத்தையும் அபிவிருத்தி செய்வதற்காகவும் அதன் ஸ்தாபன அமைப்பை வலுப்படுத்துவதற்காகவும் போதிக்கும் கூட்டு சமுதாயத்தின் முழு அதிகாரம் பெற்ற பிரதிநிதி உறுப்புக்கள் அமைகின்றன. பயிற்சி பெறுவோரின் சுயநிர்வாகத்தை இவ்வாறு வளர்ப்பதன் மூலம் போதகர்கள் கல்வியின்பாலும் உழைப்பின்பாலும் சமூகத்துக்குப் பயன் உள்ள பிற செயல்களின்பாலும் குழந்தைகள் உணர்வும் பொறுப்பும் வாய்ந்த போக்கைக் கடைப்பிடிக்குமாறு செய்கிருர்கள். அதே சமயம் ஒழுங்கமைப்பாளருக்கு உரிய குழந்தைகளின் பண்புகள் வளர்ச்சி பெறுகின்றன, சமூகச் செயலூக்கம் அதிகரிக்கிறது.

கூட்டு சமுதாயத்தில் குழந்தைகள் செய்யும் உள்ளடக்க வளமும் சமூகப் பயன்பாடும் போதனை இயல் நோக்கப் பொருத்தமும் உள்ள எல்லாச் செயல்களும் வழிவழி வந்த மரபுகளால் வலுவடைந்துள்ள கட்டுப்பாட்டினுலும் வாழ்க்கைக் கிரமத்தினுலும் ஒழுங்கமைந்த முறையில் உருவாகின்றன. கட்டுப்பாடு பற்றிய பிரச்சினையை மக்காரென்கோ தம் நூல்களில் தனிப்பட்ட முறையில் ஆராய்கிருர். குழந்தைகளுக்குப் பழகுமுறை பற்றிய தொடக்கப் பண்பாட்டை போதிக்கும் சாதனமே கட்டுப்பாடு என்ற மரபு வழி வந்த விளக்கத்தை அவர் ஏற்கவில்லை. கட்டுப்பாடு என்பது ஒழுக்க நெறிக்கும் அரசியலுக்கும் உரிய வகைப்பிரிவு, போராடுவதற்கும் இடர்களை முயன்று நீக்குவதற்கும் உரிய உணர்வு பூர்வமான கட்டுப்பாடு என்ற கருத்தை அவர் முறைப்படுத்தி இருக்கிருர். கூட்டு சமுதாயமும் சமூகம் அனைத்தும் தனி நபரிடம் உயர்ந்த பண்புகளைக் கோருவதும் தனி நபருக்கு மதிப்பு அளிப்பதுமே இத்தகைய கட்டுப்பாட்டுக்கு ஆதாரம் ஆகும்.

திண்ணமான செயல்கள் நிகழ்கையிலேயே இன்றியமையாத விஷயஞானமும் தேர்ச்சியும் உருவாகின்றன, தனி நபரின் எல்லாப் பண்புகளும் வளர்ச்சி அடைகின்றன, எனவே, ஊக்கமுள்ள செயல் புரிகையிலேயே தனி நபரின் பல்துறை வளர்ச்சி சாத்தியம் ஆகும் என்பதை மக்காரென்கோ புரிந்து கொண்டார். அதனுல்தான் போதிக்கும் கூட்டு சமுதாயத்தினது வாழ்க்கையின் உள்ளடக்கத்துக்கு அவர் மிகப் பெரிய முக்கியத்துவம் அளித்தார்.

கல்விப் பயிற்சியை உற்பத்தி உழைப்புடன் இணைத்ததே மக்காரென்கோவின் தலைமையில் இயங்கிய குழந்தைகள் கூட்டு சமுதாயத்தினது வாழ்க்கையின் அடிப்படையாக விளங்கியது. கல்விப் பயிற்சியை உற்பத்தி உழைப்புடன் இணைப்பதன் வாயிலாக, கல்வியையும் போதனையையும் பற்றிய பல் தொழில் நுணுக்கக் கோட்பாட்டை நடைமுறையில் செயல்படுத்துவதற்காக அந்தக் காலத்தைச் சேர்ந்த பிற பல சோவியத் போதனை இயலார் இடையீடின்றி, விடாப்பிடியாகப் போராடி வந்தார்கள். இந்தப் போராட்டம் மக்காரென்கோவினதும் சிறப்பு இயல்பாகத் திகழ்ந்தது. இந்தக் கோட்பாட்டை ஏறத்தாழ முழுமையாக நடைமுறையில் செயல்படுத்துவதில் வெற்றி பெற்ற மிகச் சில முதல் போதனை இயலாரில் மக்காரென்கோவும் ஒருவர். த்ஸெர்ழின்ஸ்கி கம்யூனில் பொது நடுநிலைக் கல்விப் பள்ளி இயங்கி வந்தது. முழுமையான நடுநிலைக் கல்வி பெறுவது கம்யூனில் வளர்ந்த ஒவ்வொரு சிறுவனுக்கும் சிறுமிக்கும் கட்டாயமான விதியாக இருந்தது. கம்யூனில் புதிதாகச் சேர்ந்தவர்களும் பழைய உறுப்பினர்களும் கல்வி பயின்றதோடு கூடவே அந்தக் காலத்தில் தொழில்நுட்ப நோக்கில் முதல் தரமாக இருந்த தொழில் நிலையத்தில் வேலை செய்து ''பேத்'' என்னும் நிழற்படக் காமிராவும் சிக்கலான மின்சாரக் கருவிகளும் தயாரித்தார்கள். உறுப்பினர்கள் பலர் இரண்டு மூன்று தொழில்களில் உயர்ந்த தேர்ச்சி பெற்றார்கள். திட்டவட்டமான தொழில் ஒன்றில் தேர்ச்சி பெறுவதோ உணவுக்காகத் தொழிலை மேற்கொள்வதோ முக்கியம் அல்ல, போராட்ட வீரனாக, தனது உழைப்பை உணர்வு பூர்வமாகப் பொது நோக்கத்துக்கு வழங்கும் மனிதனாகத் தேர்ச்சி பெறுவதே முக்கியமானது என்று வலியுறுத்தினார் மக்காரென்கோ.

சில போதனை இயலார் உழைப்பின் பாத்திரத்தை மிகையாக மதிப்பிட்டார்கள். எந்த நிலைமைகளில் செய்யப்பட்டாலும் உழைப்பு ஒழுங்கமைக்கும் அடிப்படை என்று அவர்கள் எண்ணினார்கள். எல்லா வகை உழைப்பையும் போதனை இயல் சாதனமாகக் கருதிக் குருட்டுத்தனமாக வழிபடுவதை மக்காரென்கோ தீவிரமாக எதிர்த்தார். அவர் சொன்னார்: ''...கல்வியோடு சேராத உழைப்பு, அரசியல், சமூக போதனையோடு சேராத உழைப்பு, போதனைப் பயனை விளைக்காது.

அது போதனை நோக்கில் உபயோகமற்ற நிகழ்முறையாகவே இருக்கும். நீங்கள் ஒரு மனிதனை எவ்வளவு வேண்டுமானாலும் உழைக்க வைக்கலாம். ஆனால் அதோடு கூடவே அரசியலிலும் ஒழுக்க நெறியிலும் நீங்கள் அவனைப் பயிற்றுவிட்டால், சமூக வாழ்விலும் அரசியல் வாழ்விலும் அவன் பங்கு எடுத்துக் கொள்ளாவிட்டால், இந்த உழைப்பு போதனை நோக்கில் உபயோகம் அற்றதாகவே, நல்ல பயன் விளைக்காததாகவே இருக்கும்.

''பொது அமைப்பின் பகுதி என்ற முறையிலேயே உழைப்பு போதனைக் கருவி ஆக முடியும்.''*

கல்வியும் உழைப்பும் குழந்தைகளின் சமூக உபயோகமான பிற செயல்களும் ஓர் அமைப்பில் வளர்ச்சி பெற்று, ஒழுங்கமைந்த, ஒன்றித்த போதனைச் சமுதாயத்தின் காரியம் ஆகி விடும்போது தான் தேவையான போதனைப் பயன்களைத் தரும் என்ற மக்காரென்கோவின் முடிவு இன்றளவும் உடனடிக் கவனத்துக்கு உரியதாகத் திகழ்கிறது.

போதனை இயல் கருத்துக்களின் இன்னும் ஓர் ஆழ்ந்த குறைபாடு, ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபதுக்களில் சோவியத் கல்வி முறையில் விரிவாகப் பரவி இருந்தது. போதிக்கும் நிகழ்முறையில் ஆசிரியனின் நேர்முகமான ஒழுங்கமைக்கும் பாத்திரத்தைக் குறைத்து மதிப்பிட்டதே இந்தக் குறைபாடு. குழந்தைகளின் சுதந்திரம், சுயநிர்வாகம், இவற்றின் பாத்திரத்தை மிகைப்படுத்தியதன் விளைவாக நேர்ந்தது இது. இந்தக் குறைபாட்டையும் போக்குவதில் மக்காரென்கோ வெற்றி அடைந்தார்.

அந்தக் காலத்தில் போதனை இயலாரிடையே விரிவாகப் பரவி இருந்த இன்னொரு பிரமை, குழந்தைகளுக்கு விளக்கி விவரிக்கும் வேலையின் பாத்திரத்தை மிகையாக மதிப்பிட்டதே ஆகும். முடிவில்லாத உரையாடல்களின் வாயிலாக, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், எல்லா வகையிலும் நீதி புகட்டுவதன் வாயிலாகக் குழந்தைகளின் உணர்வின் மீது செல்வாக்கு செலுத்துவது தங்களுடைய மிக முக்கியமான பொறுப்பு என்று சில ஆசிரியர்கள் எண்ணினார்கள்.

---

* அ. ஸெ. மக்காரென்கோ. நூல்திரட்டு, தொகுதி 5, பக்கம் 112.

மக்காரென்கோ இந்தக் கருத்துக்களை ஆதரிக்கவில்லை. குழந்தைகளின் வாழ்க்கை முழுவதிலும் ஆசிரியர்கள் வழி காட்ட வேண்டும் என அவர் கோரினர். போதனை இயல் சித்தாந்தத்தில், ''ஆசிரியர்களின் கூட்டு சமுதாயம்'', ''ஆசிரியர் செல்வாக்கு விளைக்கும் முறை இயல்'' என்னும் இரண்டு பகுதிகளின் மூலம் இந்தக் கருத்துக்கு அவர் பரு வடிவம் அளித்தார். இந்தப் பகுதிகள் சாராம்சத்தில் புதியவை.

போதிக்கும் கூட்டு சமுதாயத்தை ஒழுங்கமைத்து, குழந்தைகளின் வாழ்க்கை முழுவதிலும் வழி காட்டும் ஒற்றுமையுள்ள ஒன்றித்த ஆசிரியர் சமுதாயம் பற்றி மக்காரென்கோ வெளியிட்டிருக்கும் கருத்து, போதனை நடைமுறை, பள்ளிக் கல்வியின் எதார்த்தம் ஆகியவற்றின் மிக முக்கியமான, உடனடிப் பிரச்சினை ஒன்றைப் பிரதிபலிக்கிறது.

மக்காரென்கோ எழுதினர்: ''எந்தப் போதகனுக்கும் தனிமையில், தன் சொந்தப் பொறுப்பில் செயல்பட உரிமை கிடையாது. போதகர்களின் கூட்டு சமுதாயம் இருக்க வேண்டும். போதகர்கள் கூட்டு சமுதாயமாக எங்கே ஒன்றுசேரவில்லையோ, கூட்டு சமுதாயம் ஒரே வேலைத் திட்டமும் ஒரே தன்மையும் குழந்தைகளை அணுகுவதற்குரிய திட்டவட்டமான ஒரே முறையும் எங்கே கொண்டிருக்கவில்லையோ, அங்கே போதிக்கும் நிகழ்முறை எதுவும் இருக்க முடியாது. எனவேதான் கூட்டு சமுதாயமாக ஒன்றிணைந்தவர்களும் ஒரே கருத்தாலும் ஒரே கோட்பாட்டினுலும் ஒரே வேலைப் பாங்காலும் ஊக்கப்பட்டு ஒன்ருக வேலை செய்பவர்களுமான ஐந்து பலவீனமான போதகர்கள் இருப்பது அவரவர் தம் விருப்பப்படி தனிமையில் வேலை செய்யும் பத்து நல்ல போதகர்கள் இருப்பதை விட மேலானது ஆகும்.''*

ஆசிரியர்களின் கூட்டு சமுதாயத்தை நிறுவுவது, அதன் ஒழுங்கமைப்பு ஆகியவை குறித்த முக்கியப் பிரச்சினைகள் மக்காரென்கோவின் நூல்களில் ஆராயப்பட்டுள்ளன. இத்தகைய கூட்டு சமுதாயத்தின் மிக முக்கிய அடையாளமாகவும் வேலையில் வெற்றிக்கு முதன்மையான நிபந்தனையாகவும்

---

* அ. செ. மக்காரென்கோ. நூல்திரட்டு, தொகுதி 5, பக்கம் 179.

விளங்குவது ஒற்றுமையே. ஒன்றித்த போதனை இயல் தேவைகளை நிறைவேற்றுவது, ஒன்றித்த வேலைத் திட்டத்தைத் தயாரிப்பது, அனைத்துப் பள்ளி ஆசிரியர்களின் கூட்டு சமுதாயத்தை நிறுவுவதையும் ஒழுங்கமைப்பதையும் பற்றிய பொதுப் போக்கை வரையறுப்பது, போதனை ஆசிரியர்கள் மையம் நிலவுவது ஆகியவை இந்த ஒற்றுமைக்கு வகை செய்கின்றன. போதனை நிலையத்தின் இயக்குநரும் தலைவருமே போதனை ஆசிரியர்களின் மையம் ஆவார். போதனை ஆசிரியர்களின் கூட்டு சமுதாயத்தை ஒழுங்கமைப்பதிலும் பள்ளியில் செய்யப்படும் போதனை வேலை அனைத்திற்கும் வழி காட்டுவதிலும் அவருடைய பாத்திரம் அசாதாரணமாகப் பெரியது. மக்காரென்கோவின் கருத்துப்படி இதற்கு முதன்மையான காரணம், இயக்குநர் பள்ளியில் முதலாவது போதகராக விளங்குவதும் எந்த நிலைமைகளிலும் அவர் ''தூய'' நிர்வாகியாகவும் பொருளாதார மேற்பார்வையாளராகவும் இருக்க முடியாது என்பதுமே ஆகும். போதனை ஆசிரியர்களின் கூட்டு சமுதாயத்தின் முழு மதிப்புள்ள தலைமை ஒரு நபரின் தலைமைக் கோட்பாடும் கூட்டுத்துவக் கோட்பாடும் ஒருங்கிசைந்தால்தான் ஏற்பட முடியும். ''பள்ளி இயக்குநரின் போதனை இயல் நிபுணத்துவம் வெறும் நிர்வாகத்திறமையில் அடங்கிவிட முடியாது. இயக்குநர் தம்முடைய மேலாண்மையையும் பொறுப்பையும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கும் அதே சமயத்தில் பள்ளியின் பொதுச் சக்திகளுக்கும் பொது அபிப்பிராயத்துக்கும் ஆசிரியர் சமுதாயத்துக்கும் பள்ளிப் பத்திரிகைக்கும் தனி நபர்களின் முன்முயற்சிக்கும் பள்ளிச் சுய நிர்வாகத்தின் விரிவான அமைப்புக்கும் விசாலமான இடம் அளிப்பதில்தான் இருக்கிறது நிபுணத்துவம்.''*

போதனைச் செல்வாக்குக்கு உரிய, செயல்பாடும் நோக்கப் பொருத்தமும் உள்ள முறை இயலை மக்காரென்கோ உருவாக்கி இருக்கிறார். இது சோவியத் போதனை இயலுக்கு அவர் அளித்துள்ள அரு நிதியமாக விளங்குகிறது. சிறுவன் மீது போதகனின் செல்வாக்கு பற்றிய பணியின் புரிவு இந்த முறை இயலில் கோட்பாட்டு நோக்கில் புதியது ஆகும்.

---

* அ. செ. மக்காரென்கோ. நூல்திரட்டு. தொகுதி 5, பக்கம் 380.

''போதகனது வேலையின் உண்மையான சாரம்... சிறுவனுடன் உங்கள் உரையாடல்களிலோ, அவன்மீது நேரடியான பாதிப்பு நிகழ்த்துவதிலோ இல்லவே இல்லை... சிறுவனது வாழ்க்கையை ஒழுங்கமைப்பதில்தான் இருக்கிறது அது. போதகனின் வேலை முதன்மையாக ஒழுங்கமைப்பாளனின் வேலை ஆகும்'' என்று கூறினார் மக்காரென்கோ.* ஆகவே, பயிற்சி மாணவனின் குறித்த செயலை அல்லது அவனது தனித்தன்மையில் வெளிப்படும் ஒழுக்கநெறி பற்றிய அல்லது வேறு விதப் பண்புகளைத் தூண்டி ஊக்குவது அல்லது தடுத்து நிறுத்துவதே போதனைச் செல்வாக்கு முறைகளின் முதன்மையான நோக்கம் ஆகும். சோவியத் பள்ளிக் கல்வியில் போதனைச் செல்வாக்கு முறைகள், குழந்தைகளையும் இளைஞர்களையும் சமூக உபயோகமானதும் போதனை இயலின் நோக்கத்துக்குப் பொருந்துவதும் ஆன செயலில் ஈடுபடுத்துவதை நோக்கமாகக் கொண்டிருக்கின்றன.

சோவியத் போதனை இயலிலும் நடைமுறையிலும் ஸ்தாபன வடிவில் அமைந்த குழந்தைகள் கூட்டு சமுதாயத்தின் போதனைச் செல்வாக்கை முதன்முதல் கண்டவர்களில் ஒருவர் மக்காரென்கோ. மாணவனின் தனித்தன்மை ஆசிரியரால் மட்டும் இன்றி, குழந்தைகளின் கூட்டு சமுதாயத்தாலும் உருவாக்கப்படுகிறது—இது சிறப்பாக முக்கியமானது—என்பதை அவர் கவனித்தார். குழந்தைகள் மீது ஆசிரியர்களின் நேர்முகச் செல்வாக்கைப் பயிற்றி வளர்க்கும் கூட்டு சமுதாயத்தின் ஒழுங்கமைந்த பாதிப்பாக மாற்றும் வழிகள் கண்டுபிடிக்கப்பட்டது சோவியத் போதனை இயல், நடைமுறை ஆகியவற்றின் அபார சாதனை ஆகும்.

கம்யூனிஸ முறையில் போதிக்கும் சோதனையில் உதித்த போதனைச் செல்வாக்கு முறை இயலின் இன்னொரு முக்கியமான சிறப்பு, போதனை முறைகள் குழந்தைகளின் சமூக உபயோகமான செயல்களுக்கு வெளித் தூண்டல்களாக மட்டும் இருந்து விடாமல், வளர்ச்சி அடைந்து அவர்களுடைய நடத்தையின் உள் தூண்டல்களாகவும் மாறுவது ஆகும், போதிக்கும் கூட்டு சமுதாயத்தின் திறமையான ஒழுங்கமைப்

---

* அ. ஸெ. மக்காரென்கோ. நூல்திரட்டு, தொகுதி 4, பக்கம் 349.

பின் விளைவாக, பயிற்சிப் பாடங்கள் செய்கையில் குழந்தைகள் அளிக்கும் சிக்கலான வாக்குறுதிகளை அவர்களுடைய குழந்தைப் பருவ இன்பத்தின் ஊற்றாகவும் அவர்களுடைய வாழ்க்கைச் செயல்களின் தூண்டுகோலாகவும் மாற்ற முடிகிறது.

மக்காரென்கோ இன்னும் ஒரு முக்கியமான முடிவுக்கும் வந்தார். போதனைச் செல்வாக்கு முறைகள் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்பு உள்ளவை, குழந்தைகளுடன் செய்யப்படும் வேலையின் எல்லா நிலைமைகளையும் சார்ந்தவை என்பது அந்த முடிவு. எந்த ஒரு முறையையும், அதன் எந்த வடிவத்தையும் அவை கையாளப்படும் ஸ்தூல நிலைமையைச் சாராமல் நல்லது அல்லது கெட்டது என்று கூற முடியாது. போதனை குறித்த நிகழ்ச்சிகளையும் மெய் விவரங்களையும் பகுத்தாய்வதில் சிறந்த சோவியத் போதனை இயல் நிபுணரான மக்காரென்கோ கடைப்பிடித்த இயக்க இயல் அணுகு முறை இதில் வெளிப்படுகிறது.

போதனைச் செல்வாக்கு முறைகள் வளர்ச்சி அடைந்து போதிக்கும் கூட்டு சமுதாயத்தின் பொது அபிப்பிராயமாக மாறுகின்றன. போதிப்பதற்கும் சிறுவனின் தனித்தன்மையை உருவாக்குவதற்கும் ஏற்ற மிகப் பயன் விளைக்கும் கருவி ஆகிறது இந்தப் பொது அபிப்பிராயம். இந்தக் கருவியை நடைமுறையில் விரிவாகக் கையாண்டதும் சித்தாந்த நோக்கில் ஆதாரங்களுடன் நிலைநாட்டியதும் மக்காரென்கோ ஆற்றிய பெருந்தொண்டு ஆகும்.

மக்காரென்கோ சென்ற பாதை, பள்ளிகளில் சோவியத் போதனை குறித்த நடைமுறைப் பிரச்சினைகளுக்கு விஞ்ஞான-போதனை இயல் தீர்வுகள் காணும் பாதை ஆகும். இந்தக் காரணத்தால் தான் சிறந்த சோவியத் போதனை இயல் நிபுணரும் புதுமை புனைவோருமான மக்காரென்கோ போதனைத் திறமை குறித்த பிரச்சினைகளை மிகுந்த கவனத்துடன் ஆராய்ந்தார். போதனை ஆசிரியனின் திறமை பிறப்பிலேயே உதிக்கும் மேதையோ போதகன் தற்செயலாகக் கண்டெடுக்கும் புதையலோ அல்ல, முதன்மையாகத் தொழில் துறைப் பண்பு என்று அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வந்தார். மற்ற எந்தத் தொழிலையும் போலவே குழந்தைகளுக்குக் கற்பிக்கும் தொழிலையும் பயில முடியும் என்றார்

அவர். ஆனால் இதற்கு முனைந்து கற்க வேண்டும், போதனை ஆசிரியனுக்கு வேண்டிய பண்புகளைத் தனிமுயற்சியால் வளர்த்துக்கொள்ள வேண்டும், போதனை இயலில் சேமிக்கப் பட்டுள்ள முற்போக்கு அம்சங்கள் எல்லாவற்றையும் விடா முயற்சியுடன் கற்று அவற்றில் தேர்ச்சி பெற வேண்டும், போதிப்பதன் முற்போக்கு அனுபவத்தைக் கூர்ந்த நோக்குடன் ஆராய்ந்து அறிய வேண்டும்.

போதனை இயல் நிபுணத்துவத்தின் முக்கிய அம்சமாக விளங்குவது போதனை ''உத்தி'' ஆகும். குழந்தைகளுடன் கலந்து பழகும் கலை, தெளிவாகக் கருத்தை வெளியிடும் பேச்சுத்திறன், நடிப்பு, சைகைகள் ஆகியவற்றை இந்த உத்தியின் சிறப்பான பகுதிகளாக மக்காரென்கோ குறித்தார். இந்த முக்கியக் கலைகளில் தேர்ச்சி பெறும்படி இளம் ஆசிரியர்களை அவர் கேட்டுக்கொண்டார்.

* * *

மக்காரென்கோவின் போதனை இயல் சோதனைகள் பற்றிப் பேசும் பொழுது''அமைப்பு''என்ற சொல் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. அமைப்பு என்பது மற்றவற்றி லிருந்து ஒதுக்கமான தனித்த ஒன்று என்று அர்த்தப்பட்டால் இந்தச் சொல் சரி அல்ல. ''என்னிடம் தனியான அமைப்பு எதுவும் இல்லை, அமைப்பு—சோவியத் அமைப்பு ஒன்று தான்'' என்று மக்காரென்கோ அடிக்கடி சொல்வார். ஆனால் மக்காரென்கோவின் கருத்துக்களது தொகுதியில் காணப் படும் ஒருங்கிசைவையும் முழுமையையும் தொடர்ந்த பொருத்தத்தையும் கவனத்தில் கொண்டால் ''அமைப்பு'' என்ற சொல் அதை வியப்பூட்டும் அளவுக்குத் துல்லியமாகக் குறிக்கிறது. எல்லாவற்றையும் உட்கொள்ளும் விஞ்ஞானக் கலப்படவாதத்தை மக்காரென்கோ அருவருத்து ஒதுக்கி னார். அவர் எழுதியவையும் கூறியவையும் எல்லாம் அவரால் தீர்க்கமாக ஆலோசிக்கவும் அனுபவத்தில் சரிபார்க்கவும் பட்டவை, மார்க்ஸீய உலகக் கண்ணோட்டத்தின் நோக்கில் ஆராயப்பட்ட பற்பல மெய் விவரங்களிலிருந்து பெறப் பட்டவை. மக்காரென்கோவின் கருத்துக்களது மிக முக்கிய மான மதிப்பு இந்த விஷயத்தில் அடங்கியிருக்கிறது. முன்

னணி சோவியத் போதனை இயல் அனுபவத்தின் எடுத்துக்காட்டான வெளியீடாகத் திகழ்கின்றன இந்தக் கருத்துக்கள்.

அந்தோன் ஸெம்யோனவிச் மக்காரென்கோவின் நூல்கள் சோவியத் பள்ளிக் கல்வி, போதனை இயல் ஆகியவற்றினது வரலாற்றின் பொன் ஏடுகளாகும். இவை வரலாறு மட்டும் அல்ல. வருங்கால போதனை இயலை எழுதத் தாம் தயாராய் இருப்பதாக மக்காரென்கோ கூறினர். போதனை இயல் நிபுணர், போராட்ட வீரர், தேசபக்தர் என்ற முறையில் தம் அருமையான வாழ்க்கை முழுவதாலும் இதை அவர் எழுதியிருக்கிறர்.

மக்காரென்கோவினது வாழ்க்கையின் இறுதி ஆண்டுகள் போதனை இயல், இலக்கியப் பணிகள் செறிந்த ஆண்டுகளாக விளங்கின. இந்தத் தொகுப்பில் அடங்கியுள்ள கட்டுரைகள் இந்தக் காலப்பகுதியில் எழுதப்பட்டவையே.

பள்ளிகளில் சோவியத் போதனை குறித்த பிரச்சினைகள் பற்றிய விரிவுரைகள், ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் மக்கள் கல்விக் கமிஸாரக ஊழியர்களுக்காக மக்காரென்கோவால் 1938ம் ஆண்டு ஜனவரி மாதம் நிகழ்த்தப்பட்டன. மக்காரென்கோவின் படைப்புக்களில் போதனைச் சித்தாந்தம், முறை இயல் ஆகியவற்றின் வளர்ச்சி குறித்த அவரது கருத்துக்களைப் போதிய அளவு முழுமையாகவும் வரிசைக் கிரமமாகவும் விவரிப்பதும் இந்த விரிவுரைத் தொடரின் சிறப்பு ஆகும்.

இதை அடுத்து வெளியிடப்படும் மூன்று கட்டுரைகள் 1938 மார்ச்சுக்கும் 1939 ஜனவரிக்கும் இடைப்பட்ட காலத்தில் நாளிதழ்களுக்காக மக்காரென்கோவால் எழுதப்பட்டன. ''சோவியத் பள்ளியில் போதனை குறித்த பிரச்சினைகள்'', ''பள்ளியில் சுபாவ போதனை'' என்னும் தலைப்புள்ள கட்டுரைகள் வெளியாயின. இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட வாசகர்கள் அவற்றைப் பாராட்டிக் கடிதங்கள் எழுதினர்கள்

அந்தக் காலத்தில் சோவியத் பள்ளிகளில் போதனை வேலையில் எழுந்த உடனடிப் பிரச்சினைகளை இந்தக் கட்டுரைகள் ஆராய்கின்றன. அவற்றின் விமர்சன அம்புகள் தங்கள் கூர்மையை இழந்து விட்டன. ஏனெனில் அவற்றில் குறிக்கப்

படும் குறைகள் சோவியத் நாட்டின் பெரும்பாலான பள்ளிகளில் அகற்றப்பட்டுவிட்டன. ஆயினும் ஒழுக்க நெறி போதனைக்குரிய வழிகள், போதிக்கும் கூட்டு சமுதாயம் ஆகியவற்றையும் இன்னும் பலவற்றையும் குறித்த கருத்துக்கள் இன்றளவும் முக்கியமானவையாக விளங்குகின்றன.

பள்ளி ஆசிரியர்கள் இன்றும் மக்காரென்கோவின் கட்டுரைகளை மீண்டும் மீண்டும் படிக்கிறார்கள். போதிக்கும் நடைமுறை குறித்த பல உடனடிப் பிரச்சினைகளுக்கு விடைகள், சிறந்த போதனை இயல் நிபுணர் மக்காரென்கோவின் சிந்தனைகளில் அவர்களுக்குக் கிடைக்கின்றன.

**வி.மி. கோரத்தவ்,**
*பிஎச்.டி., போதனை இயல்*

# பள்ளிகளில் சோவியத் போதனை குறித்த பிரச்சினைகள்

---

## விரிவுரை ஒன்று

### போதனையின் முறைகள்

*நாம் போதனை என்னும் விஷயம் பற்றிப் பேசுவோம். ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள், தோழர்களே. நான் நடை முறை முனைமுக ஊழியன். ஆகையால் என்னுடைய சொற்களில் நடைமுறையின் பக்கம் ஓரளவு சாய்வு இருக்கத்தான் செய்யும். ஆனால், நடைமுறை ஊழியர்கள் விஞ்ஞானக் கருத்துக்களில் குறிப்பிடத் தக்க திருத்தங்களைப் புகுத்தும் காலப் பகுதியில் நாம் வாழ்கிறோம் என்று நினைக்கிறேன். இத்தகைய ஊழியர்கள் நம் சோவியத் யூனியனில் ஸ்தஹானவியர்கள்* என அழைக்கப்படுகிறார்கள். ஸ்தஹானவியர்கள், நடைமுறை முனைமுக ஊழியர்கள், பல அடிப்படைக் கருத்துக்களில் எத்தனை நிறைய மாறுதல்களைப் புகுத்தி இருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம். இந்த மாற்றங்கள் நம்முடைய விஞ்ஞானங்களை விட அதிகத் துல்லியமானவை கூட. உழைப்பின் உற்பத்தித் திறனிலும் உழைக்கும் தொழிலாளியின் வேலையிலும் தனிப்பட்ட திறமையிலும் எத்தனை நிறையப் புதிய ரெக்கார்டுகளை ஸ்தஹான*

---

** முன்னணித் தொழிலாளர்களும் உற்பத்தியில் புதுமை புனைவோரும் ஸ்தஹானவியர்கள் என அழைக்கப்படுகிறார்கள். இந்தச் சொல் அலெக்ஸேய் ஸ்தஹானவ் என்னும் தனேத்ஸ்க் சுரங்கத் தொழிலாளரின் பெயரின் அடியாகப் பிறந்தது. உழைப்பின் புதிய ஒழுங்கமைப்பின் உதவியால் இவர் 1935ல், அப்போது நிலவிய அளவுமானத்துக்குப் பதினான்கு மடங்கு அதிக நிலக்கரி வெட்டி எடுத்தார்.—*
ப-ர்.

வியர்கள் ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்பதும் நமக்குத் தெரிந்ததே. உற்பத்தித் திறனில் இந்த அதிகரிப்பு தொழிலாளியின் சக்தியை வெறுமே அதிக அளவில் செலவிடுவதன் வாயிலாக அல்ல, வேலையின்பால் புதிய அணுகுமுறையை, புதிய தர்க்கத்தை மேற்கொள்வதன் வாயிலாக, உழைப்பின் அம்சங்களைப் புது விதமாக ஒழுங்கு படுத்துவதன் மூலம் பெறப்படுகிறது. ஆகவே புதுமைகள் புனைதல், தேட்டம், கண்டுபிடிப்பு என்னும் முறையின் உதவியால் உழைப்பின் உற்பத்தித் திறன் அதிகமாக்கப் படுகிறது.

நமது உற்பத்தித் துறை—போதனைத் துறை—சோவியத் நாடு அனைத்துக்கும் பொதுவான இந்த இயக்கத்திலிருந்து எவ்வகையிலும் விலகி இருக்கமுடியாது. நம்முடைய துறையிலும் புதுமை புனைவது இன்றியமையாதது—நான் வாழ்நாள் முழுவதும் இந்தக் கருத்தை உறுதியாகக் கொண்டிருந்தேன். தனித் தனி அம்சங்களில் கூட, சில்லறை விஷயங்களில் கூடப் புதுமை புனைவது இன்றியமையாதது. அம்சங்களின் தொகுப்பில், அமைப்பில், அமைப்பின் பகுதிகளில் இது இன்னும் அவசியம். இம்மாதிரிக் கண்டுபிடிப்புக்கள் சித்தாந்தத் துறை ஊழியர்களால் மட்டும் அல்ல, சர்வ சாதாரண ஊழியர்களாலும், உதாரணமாக என் போன்றவர்களாலும் செய்யப்பட முடியும். ஆகையால் நான் விசேஷமாகக் கூச்சப்படாமல் என்னுடைய சோதனையையும் அந்தச் சோதனையால் பெறப்பட்ட முடிவுகளையும் பற்றிக் கூற முன்வந்திருக்கிறேன். சித்தாந்தத்தின் குறிப்பிட்ட சாதனைகளில் நடைமுறை ஊழியன் புகுத்தும் திருத்தத்துக்கு உள்ள அதே முக்கியத்துவம் இந்தச் சோதனைக்கும் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன்.

உங்களுடன் பேசுவதற்கு என்னிடம் என்ன விஷயம் இருக்கிறது?

நாதியற்ற குழந்தைகளுடன் வேலை செய்வதில் நான் தனித் தேர்ச்சி பெற்றவன் என்று பலர் நினைக்கிறார்கள். இது உண்மை அல்ல. நான் மொத்தம் முப்பத்திரண்டு ஆண்டுகள் வேலை செய்திருக்கிறேன். இவற்றில் பதினாறு ஆண்டுகள் பள்ளியிலும் பதினாறு ஆண்டுகள் அகதிச் சிறுவர் சிறுமியரிடையிலும் பணி ஆற்றியுள்ளேன். பள்ளியில் பணி ஆற்றிய காலமெல்லாம் நான் விசேஷ நிலைமைகளில் வேலை

செய்தேன். தொழிலாளர் பிரதிநிதிகளுடையவும் கட்சிப் பிரதிநிதிகளுடையவும் இடையருத செல்வாக்கில் இருந்த தொழிற்சாலைப் பள்ளியில் வேலை செய்தேன்.

இவ்வாறே அகதிக் குழந்தைகளுடன் நான் செய்த வேலையும் நாதியற்ற குழந்தைகளுக்கான தனிப்பட்ட வேலையாக இருக்கவே இல்லை. முதலாவதாக, அகதிகளுடன் வேலை தொடங்கிய நாட்கள் முதலே, அகதிக் குழந்தைகள் விஷயத்தில் தனிப்பட்ட முறைகள் எவற்றையும் கையாள்வது தேவை இல்லை என்ற கருத்தை வேலைக் கொள்கையாக வைத்துக் கொண்டேன். இரண்டாவதாக, அகதிக் குழந்தைகளை மிகக் குறுகிய காலத்திற்குள் சாதாரண நிலைமைக்குக் கொண்டு வர எனக்கு வாய்த்தது. அதன்பின் சாதாரணக் குழந்தைகளிடம் போன்றே அவர்களிடமும் பழக முடிந்தது.

ஹார்க்கவ் நகர் அருகே, உள்துறை மக்கள் கமிஸாரகத்தின் த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் என்னுடைய வேலையின் கடைசிக் காலப் பகுதியில் என் மேற்பார்வையில் இருந்தவர்கள் சாதாரணச் சிறுவர் சிறுமியர். அவர்கள் பத்தாண்டுக் கல்வி பெற்றுர்கள். நமது சாதாரணப் பள்ளியின் சிறுவர் சிறுமியர் எந்தக் குறிக்கோள்களை அடைய விரும்பி முயல்வார்களோ, அவற்றை அடையவே அவர்களும் விரும்பி முயன்றுர்கள். இந்த சமுதாயத்தில் இருந்த முன்னுள் அகதிக் குழந்தைகள் சாதாரணக் குழந்தைகளிலிருந்து எவ்வகையிலும் வேறுபடவில்லை. அவர்களிடம் ஏதாவது வேறுபாடு காணப்பட்டது என்றுல், அது மற்றக் குழந்தைகளை விட அவர்கள் மேம்பட்டவர்களாய் இருந்ததுதான். ஏனென்றுல், த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனின் உழைப்பு சமுதாய வாழ்க்கை, குடும்ப வாழ்க்கையுடன் ஒப்பிட்டால் கூட, எத்தனையோ அதிக போதனைச் செல்வாக்குகள் நிகழ்த்தி இருந்தது. எனவே என்னுடைய நடைமுறை முடிவுகள், கடினமான அகதிக் குழந்தைகளுக்கு மாத்திரம் அல்ல, எல்லா விதக் குழந்தைகள் சமுதாயத்துக்கும், போதனை முனைமுகத்தில் பணியாற்றும் எந்த ஊழியருக்கும் பொருந்தக் கூடும்.

இது என்னுடைய முதல் குறிப்பு. இதைக் கவனத்தில் வைத்துக் கொள்ளும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

என்னுடைய நடைமுறை போதனை இயல் தர்க்கத்தின் தன்மை பற்றிச் சில வார்த்தைகள்.

நான் சில கருத்துக்களை உறுதியாகப் பற்றிக் கொண்டிருக்கிறேன். இவை சிரமமின்றி, விரைவாக எனக்கு ஏற்பட்டு விடவில்லை. மிகுந்த துன்பம் அளித்த சந்தேகங்களும் தவறுகளும் நிறைந்த பல கட்டங்களைக் கடந்தபின் நான் சில முடிவுகளுக்கு வந்தேன். உங்களில் சிலருக்கு இந்த முடிவுகள் விந்தையானவையாகப் படலாம். ஆனால் அவற்றுக்குப் போதிய சான்றுகள் என்னிடம் உள்ளன. ஆதலால் நான் அவற்றைக் கூச்சம் இன்றி அறிவிக்க முடியும். இந்த முடிவுகளில் சில சித்தாந்தத் தன்மை உள்ளவை. என்னுடைய சொந்தச் சோதனைகளை விவரிக்கத் தொடங்கு முன் இந்த முடிவுகளைச் சுருக்கமாகக் குறிப்பிட்டு விடுகிறேன்.

போதனை இயலின் தன்மை பற்றிய பிரச்சினையே முதன்மையாக அக்கறைக்கு உரியது. போதனை வேலைக்குத் தனியான முறைஇயல் எதுவும் தேவை இல்லை, கற்பிக்கும் முறை இயல், பாட விஷயம் பற்றிய முறைஇயல்; போதனைக் கருத்து அனைத்தையும் உள்ளடக்கி இருக்க வேண்டும் என்ற எண்ணம் நம் காலத்து போதனை இயல் சிந்தனையாளர்கள் இடையிலும் நம் போதனை இயல் வேலையை ஒழுங்கமைப்பவர்கள் சிலர் இடையிலும் நிலவுகிறது. நான் இதை ஒப்புக்கொள்ள மாட்டேன். போதனைத் துறை—வெறுமே போதித்து வளர்க்கும் துறை—சில சந்தர்ப்பங்களில் கல்வி பயிற்றும் முறை இயலிலிருந்து வேறுபட்ட துறை என்று நான் கருதுகிறேன்.

எனது இந்தக் கருத்தைச் சிறப்பாக உறுதிப்படுத்துவது எது? பின் வருவதுதான். சோவியத் நாட்டில் போதனை பெறுபவர்கள் குழந்தைகள் மட்டும் அல்ல, பள்ளி மாணவர்கள் மட்டும் அல்ல. ஒவ்வொரு பிரஜையும் ஒவ்வோர் அடியிலும் போதனை பெறுகிறான். தனிப்பட ஏற்படுத்தப் பட்ட வடிவங்களிலோ அல்லது விரிவான சமூகச் செல்வாக்கு வடிவங்களிலோ அவன் போதனை பெறுகிறான். நம் நாட்டில் ஒவ்வொரு செயலும் ஒவ்வோர் இயக்கமும் ஒவ்வொரு நிகழ்முறையும் தனிப்பட்ட பணிகளை மட்டும் இன்றி போதனைப் பணிகளையும் எப்போதும் உடன் கொண்டிருக்கிறது. அண்மையில் நடந்த சுப்ரீம் சோவியத் தேர்தல்களை நினைவுபடுத்திக்

கொள்வதே போதுமானது.* அப்போது நடந்தேறியது மிகப் பெரிய போதனை வேலை. கோடானுகோடி மக்களை, போதனை வேலையிலிருந்து ஒதுங்கியிருந்தவர்கள் போன்ற மக்களைக் கூடப் பாதித்தது இது. மிகவும் செயலற்றவர்களைக் கூட அது முன்னே கொண்டுவந்து ஊக்கத்துடன் செயலில் ஈடுபட வைத்தது. செஞ்சேனை செய்த சிறப்பாக வெற்றிகரமான போதனை வேலையை அழுத்திக் கூறுகிறேன். செஞ்சேனையில் பணியாற்றிய ஒவ்வொருவனும் அதிலிருந்து புது மனிதனுகத் திரும்புகிறுன் என்பதை நீங்கள் நன்ருக அறிவீர்கள். அவன் புதிய போர்க்கலை அறிவும் புதிய அரசியல் அறிவும் பெறுவதுடன், புதிய தன்மையும் புதிய திறமைகளும் புது வகைப் பழகுமுறைகளும் பெற்றுத் திரும்புகிறுன் என்பது உங்களுக்குத் தெரியும். இது எல்லாம் மிக விரிவான சோவியத் சோஷலிஸ போதனை வேலை. தனது பாங்கிலும் பாணியிலும் முயற்சிகளிலும் ஒன்ருனது இது.

திட்டவட்டமான போதனை, முறையைக் கருவியாகக் கொண்டது. சோவியத் ஆட்சியின் இருபது ஆண்டுக் காலமாகச் செயல்பட்டு வரும் இந்த முறையின் விளைவுகளை இப்போது தொகுத்துரைக்க முடியும். நமது பள்ளிகள், கல்லூரிகள், வேறு வகை நிறுவனங்கள், அதாவது குழந்தைகளின் தோட்டப் பள்ளிகள், குழந்தைகள் இல்லங்கள் ஆகியவை பெற்றுள்ள போதனை வெற்றிகளின் பெருத்த அனுபவத்தையும் இதோடு சேர்த்துக் கொண்டால், போதனை வேலையில் நாம் மிக விரிந்த அனுபவம் பெற்றிருக்கிருேம் என்பதைக் காணலாம்.

வெகு காலமாகச் சரிபார்த்து நிலைநாட்டவும் துல்லியமாக முறைப்படுத்தவும் பட்டுள்ள போதனை உத்திகளின் தொகுப்பையும், நமது கட்சி, இளங் கம்யூனிஸ்டுகள் சங்கம் ஆகியவற்றின் கூற்றுக்களையும் வரையறுப்புக்களையும் தோழர் லெனினுடைய உரைகளையும் நாம் எடுத்துக் கொண்டால் சோவியத் யூனியனில் போதனை வேலையின் எல்லாத் தேற்றங்

---

* சோவியத் யூனியனின் புதிய அரசியல் சட்டத்தின் அடிப்படையில் நாட்டின் சுப்ரீம் சோவியத்துக்கு முதல் தேர்தல்கள் 1937 டிசம்பரில் நடந்தன. சோவியத் நாட்டில் சோஷலிஸத்தின் வெற்றியைச் சட்டரீதியாக உறுதிப் படுத்தியது இந்த அரசியல் சட்டம்.

களும் மூலவுண்மைகளும் அடங்கிய பெரிய சட்டத் தொகுப்பை உண்மையில் இப்போது பெற்றிருக்கிறோம்.

தனிப்பட்ட முறையில் நான் போதனை நோக்கத்தையே நடப்பில் முதன்மையாகக் கொள்ள வேண்டி வந்தது: சட்டத்தை மீறுவோர் எனப்படுபவர்களை நல்வழிப்படுத்தும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. எனவே போதித்துப் பயிற்றுவதே என் முதல் கடமை ஆயிற்று. கல்வி கற்பிக்கும் பணியை ஒருவரும் எனக்கு அளிக்கக் கூட இல்லை. என்னிடம் சில சிறுவர்களும் சிறுமியரும் ஒப்படைக்கப் பட்டார்கள். இவர்கள் சட்டங்களை மீறியவர்கள். பழைய நோக்கில், குற்றத் தொழிலினர். மிகத் துலக்கமான, அபாய முள்ள சுபாவச் சிறப்புத் தன்மைகள் கொண்டவர்கள் இந்தச் சிறுவர்களும் சிறுமிகளும். இந்த சுபாவத்தை மாற்றுவதே என் முதன்மைக் குறிக்கோள் ஆயிற்று.

இது தனிப்பட்ட போதனை வேலை, முக்கியமாக உழைப்புப் பயிற்சி என்று ஆரம்பத்தில் தோன்றியது. இந்த நிலையை நான் சிறிது காலத்துக்கே மேற்கொண்டிருந்தேன். ஆனால் கம்யூனில் இருந்த என் சக ஊழியர்கள் சிலர் நெடுங்காலம் இதே போக்கைக் கடைப்பிடித்தார்கள். சில கம்யூன்களில், உள்துறைக் கமிஸாரகத்தைச் சேர்ந்தவற்றில் கூட (அதன் முந்திய தலைமையில்), இந்தப் போக்கே மேலோங்கி இருந்தது.

இந்தப் போக்கு, முற்றிலும் சரியானதாகத் தோன்றிய ஒரு கருத்தின் படி கடைப்பிடிக்கப்பட்டது. ஒருவன் விரும் பினால் பள்ளியில் படிக்கலாம், விருப்பம் இல்லாதவன் படிக் காமல் இருக்கலாம் என்பது அந்தக் கருத்து. நடப்பில் இதன் விளைவாக ஒருவரும் ஆழ்ந்த முறையில் கல்வி கற்கவில்லை. வகுப்பில் ஒருவனுக்கு ஏதேனும் தோல்வி ஏற்பட்டதுமே அவன் படிக்க விரும்பாதிருக்கும் தன் உரிமையைச் செயல் படுத்த முடிந்தது.

உழைப்புக் குடியேற்றங்களின் அமைப்பில் பள்ளி சக்தி யுள்ள போதனைக் கருவியாக விளங்குகிறது என்ற உறுதி எனக்கு விரைவில் ஏற்பட்டது. பள்ளி போதனைக் கருவி என்ற கோட்பாட்டை வலியுறுத்தியதற்காக அண்மை ஆண்டுகளில் உழைப்புக் குடியேற்றத் துறை ஊழியர்கள் சிலரால் நான் தொல்லைப்படுத்தப் பட்டேன். அண்மையில் நான் முழுமை

யான பத்தாண்டுக் கல்வி அளிக்கும் பள்ளியை ஆதாரமாகக் கொண்டேன். சுபாவத்தை மாற்றும் போதனை, தீய பழக்கங்கள் மறுபடி தலைதூக்க மாட்டா என்று உத்தரவாதம் அளிக்கும் போதனை முழுமையான நடுத்தரக் கல்வி அளிக்கப் பட்டால்தான் சாத்தியம் ஆகும் என்பது என் உறுதியான நம்பிக்கை. இருந்தாலும், போதனை வேலையின் முறை இயல், கல்வி கற்பிக்கும் வேலையின் தர்க்கத்தை ஒப்புநோக்கில் சாராத தனிப்பட்ட தர்க்கப் போக்கு உள்ளது என்ற கருத்தை நான் இப்போதும் கொண்டிருக்கிறேன். போதனை முறை இயல், கல்வி கற்பிக்கும் முறை இயல் இரண்டும் போதனை இயலின் இரண்டு பகுதிகள், ஓரளவு சுதந்திரமான தனிப் பகுதிகள் என்பது என் அபிப்பிராயம். இந்தப் பகுதிகள் உறுப்பு நோக்கில் இணைந்திருக்க வேண்டும் என்பது கூறாமலே விளங்கும். வகுப்பில் செய்யப்படும் எல்லா வித வேலையும் எப்போதும் போதித்து வளர்க்கும் வேலையாகவே விளங்குகிறது என்பதும் தானே பெறப்படும். ஆனால் கல்வி கற்பிப்பதே போதனை வேலை என்று கருதுவது சாத்தியம் அல்ல என நான் எண்ணுகிறேன். மேலே இதை இன்னும் விரிவாக விளக்குவேன்.

இப்போது, போதனை முறைஇயலின் அடிப்படையாக எதை எடுத்துக் கொள்ளலாம் என்பது பற்றிச் சில வார்த்தைகள்.

முதலாவதாக, போதனை வேலையின் முறைஇயலை அதற்கு நெருங்கிய விஞ்ஞானங்களின் கருத்துக்களைக் கொண்டு உருவாக்குவது கூடாது என்பது என் உறுதியான எண்ணம். உளவியல், உயிரியல் போன்ற இந்த விஞ்ஞானங்கள், சிறப்பாக, பாவ்லவின் ஆராய்ச்சிகளுக்குப் பிறகு உயிரியல், எவ்வளவோ செப்பம் ஆக்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மையே. ஆயினும், இந்த விஞ்ஞானங்களின் விவரங்களை ஆதாரமாகக் கொண்டு போதனைக் கருவிகள் குறித்த நேர் முடிவுகள் செய்ய நமக்கு உரிமை கிடையாது. இந்த விஞ்ஞானங்கள் போதனை வேலையில் மிகப் பெருத்த முக்கியத்துவம் பெற வேண்டும். ஆனால் முடிவு செய்வதற்குரிய முதனிலை என்ற வகையில் அல்ல, நம்முடைய நடைமுறைச் சாதனைகளைச் சரிபார்ப்பதற்கு ஏற்ற கருத்துக்கள் என்ற வகையில்,

இது தவிர, போதனைக் கருவி அனுபவத்திலிருந்தே உரு

வாக்கப்பட முடியும் (உளவியல், உயிரியல் முதலியவை போன்ற விஞ்ஞானங்களின் கருத்துக்களால் சரிபார்க்கவும் உறுதியாக்கவும் படவும் முடியும்) என்று நான் நினைக்கிறேன்.

எனது இந்த எண்ணத்துக்கு ஆதாரம் பின்வருவது: போதனை இயல், அதிலும் போதனைச் சித்தாந்தம் முதன்மையாக நடைமுறை நோக்கப் பொருத்தம் உள்ள விஞ்ஞானம். ஒருவனுக்கு வெறுமே போதிக்க நம்மால் முடியாது. திட்டவட்டமான அரசியல் குறிக்கோளை வைத்துக் கொள்ளாமல் போதனை வேலை நடத்த நமக்கு உரிமை கிடையாது. தெளிவான, விரிவான, விவரமாகத் தெரிந்த குறிக்கோள் இல்லாத போதனை வேலை, அரசியல் தன்மை அற்ற போதனையாக இருக்கும். இந்தக் கருத்தை உறுதிப்படுத்தும் சான்றுகள் நமது சோவியத் சமூக வாழ்க்கையில் ஒவ்வோர் அடியிலும் நமக்கு எதிர்ப்படுகின்றன. செஞ்சேனை, போதனை வேலையில் பெருத்த, பிரமாண்டமான, உலக வரலாற்றில் கூட அசாதாரணமான வெற்றிகள் பெற்றிருக்கிறது. செஞ்சேனையின் போதனை வேலை எப்போதும் முழுக்க முழுக்க நோக்கப் பொருத்தம் கொண்டிருக்கிறது. செஞ்சேனையின் போதகர்கள் தாங்கள் போதித்து உருவாக்க விரும்புவது எத்தகைய மனிதனை, தாங்கள் அடைய விரும்புவது எதை என்று எப்போதும் அறிந்திருக்கிறார்கள். குறிக்கோளை நோக்கிச் செல்லாத போதனை இயல் சித்தாந்தத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குவது அண்மையில் அடக்கம் செய்யப்பட்ட குழந்தை இயல்.* இந்த அர்த்தத்தில் குழந்தை இயலை சோவியத் போதனை நோக்கங்களுக்கு முற்றிலும் எதிர்நிலையானது எனக் கருதலாம். குழந்தை இயல் என்பது குறிக்கோள் அற்ற போதனை வேலை.

போதனை வேலையின் குறிக்கோள் எதிலிருந்து தோன்ற முடியும்? நமது சமூகத்தின் தேவைகளிலிருந்து, சோவியத் மக்களின் விழைவுகளிலிருந்து, நமது புரட்சியின் நோக்கங்களிலும் பணிகளிலும் இருந்து, நம்முடைய போராட்டத்தின்

---

* குழந்தை இயல் (paedology)—குழந்தைகளின் போதனை பற்றிய போலி விஞ்ஞானம். குழந்தைகளின் உயிரியல், சமூக நிலைகள் விதியினால் உருவாக்கப்படுபவை என்றும் பிறப்பிலேயே மரபுரிமையாகக் கிடைப்பவை என்றும் மாற்ற முடியாதவை என்றும் இது வலிந்துரைத்தது.—ப-ர்.

நோக்கங்களிலும் பணிகளிலும் இருந்து தோன்றுகிறது அது. எனவேதான் குறிக்கோள்களை உருவாக்குவது உயிரியலின் அடிப்படையிலோ உளவியலின் அடிப்படையிலோ அல்ல, நமது சமூக வரலாற்றின், நமது சமூக வாழ்வின் அடிப்படையிலேயே முடியும்.

தவிரவும், போதனை முறையை உறுதிப்படுத்துவதற்கு உயிரியலையும் உளவியலையும் ஆதாரமாகக் கொள்வது தற்போது இயலாது என்று நான் நினைக்கிறேன். இந்த விஞ்ஞானங்கள் வளர்ச்சி அடைந்து வருகின்றன. வரும் பத்தாண்டுகளில், உயிரியலும் உளவியலும் தனி மனிதனின் நடத்தை குறித்த துல்லியமான வரையறுப்புக்களைத் தர முடியலாம். அப்போது நாம் இந்த விஞ்ஞானங்களை அதிகமாகச் சார்ந்திருக்க முடியும். உயிரியல், உளவியல் சித்தாந்தங்களின் நோக்கங்கள்பாலும் விவரங்கள்பாலும் நமது சமூக விஞ்ஞானங்களின் போக்கு, சோஷலிஸ போதனைக்கு உரிய நமது சமூகக் குறிக்கோள்களின் போக்கு எப்போதும் மாறிக் கொண்டு இருக்க வேண்டும். நமது போதனை வேலையில் உளவியலும் உயிரியலும் இடையறாத பங்கு கொள்ளும் வகையில் கூட இந்தப் போக்கு மாறலாம். ஆனாலும் ஒரு விஷயத்தில் நான் உறுதி கொண்டிருக்கிறேன்: உளவியலில் இருந்தோ, உயிரியலில் இருந்தோ பகுப்பு அனுமான முறையிலோ சாதாரணத் தர்க்கத்தின் வெறும் பொது அனுமான முடிபு வாயிலாகவோ, போதனைச் சாதனம் பெறுவது முடியாது. போதனைச் சாதனம் முதன்மையாக நமது சமூக, அரசியல் குறிக்கோள்களிலிருந்தே பெறப்பட வேண்டும் என்று ஏற்கனவே கூறிவிட்டேன்.

குறிக்கோள் துறையில், நோக்கப் பொருத்தத்தின் துறையில் போதனைச் சித்தாந்தம் முதன்மையாகத் தவறு செய்து விட்டது என்பது என் உறுதியான எண்ணம். நம்முடைய போதனை வேலையின் எல்லாத் தவறுகளும், எல்லாப் பிறழ்ச்சிகளும் நோக்கப் பொருத்தத் தர்க்கத் துறையிலேயே எப்போதும் நிகழ்ந்து வந்துள்ளன. குறியீடாக இவற்றைத் தவறுகள் என்றே கூறுவோம்.

போதனைச் சித்தாந்தத்தில் இந்தத் தவறுகளின் மூன்று வகைகளை நான் காண்கிறேன்: முதலாவது பகுப்பு அனுமானக் கூற்றுகளின் வகை, இரண்டாவது ஒழுக்க நெறி பற்றிய

குருட்டு வழிபாட்டு வகை, மூன்றாவது தனித்த சாதன வகை.

இத்தகைய தவறுகளை நீக்கும் போராட்டத்தில் நான் என் வேலைக் காலத்தில் மிகுந்த துன்பங்கள் பட்டேன். ஏதேனும் ஒரு சாதனம் கைக்கொள்ளப்படும், பின்பு அதன் விளைவு இப்படி இருக்கும் என்று வலியுறுத்தப்படும். உதாரணமாக, உங்கள் அனைவருக்கும் தெரிந்த சாதனத் தொகுதியின் வரலாற்றை எடுத்துக்கொள்வோம். கல்வி பயிற்றுவதற்கான தொகுதி முறை என்னும் சாதனம் சிபாரிசு செய்யப்பட்டது. கல்வி பயிற்றும் இந்த முறை நல்ல பயன்கள் விளைக்கும் என்று அனுமானமாக, தர்க்க ரீதியாக வலிந்து கூறப்பட்டது.

தொகுதிமுறை நல்ல பயன்கள் விளைக்கும் என்ற ஆராய்ச்சி, அனுபவத்தால் சரி பார்க்கப்படும் வரை நிலைத்திருந்தது. விளைவு கட்டாயம் நல்லதாகவே இருக்கும், உளப்பாங்கின் மறைவிடங்களில் எங்கோ நல்ல விளைவு ஒளிந்திருக்கும் என்ற எண்ணம் நிலைத்திருந்தது.

பகட்டு அற்ற நடைமுறை ஊழியர்கள் இந்த நல்ல விளைவைக் காட்டுங்கள் என்று கோரிய போது எங்கள் கோரிக்கை மறுக்கப்பட்டது. ''மனிதனுடைய உள்ளத்தைத் திறந்து காட்ட எங்களால் எப்படி முடியும்? அங்கே நல்ல பயன் இருந்து ஆக வேண்டும். இது தொகுதியான ஒருங்கிசைவு, பகுதிகளின் இணைவு. பாடத்தின் தனிப் பகுதிகளின் இணைவு. இது மனிதனுடைய உள்ளத்தில் நல்ல பயனைக் கட்டாயம் படியும்'' என்று சொல்லப்பட்டது.

எனவே, இந்த விஷயத்தைச் சோதனையால் சரி பார்க்கத் தர்க்கரீதியாக இடமே இல்லை என்று ஆயிற்று. விளைந்தது பின்வரும் சுழல்: சாதனம் நல்லது, ஆகையால் விளைவு நல்லதாய் இருக்க வேண்டும். விளைவு நல்லது என்பதால் சாதனம் நல்லதாகவே இருக்கும்.

சோதனைத் தர்க்கம் அல்ல, பகுப்புமுறை அனுமானத் தர்க்கம் மேலோங்கி இருந்ததால் விளைந்த இத்தகைய தவறுகள் மிகப் பல.

ஒழுக்கநெறிக் குருட்டு வழிபாடு எனப் படுவதனாலும் மிகப் பல தவறுகள் நேர்ந்தன. உழைப்பு போதனை இத்தகைய தவறுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும்.

இந்த மாதிரித் தவறு செய்தவர்களில் நானும் ஒருவன். உழைப்பு என்னும் சொல்லிலேயே மிக இனியது, நமக்கு மிகவும் புனிதமானது, நல்லது என்று மெய்ப்பிக்கப்பட்டது அடங்கி இருக்கிறது. ஆகையால் உழைப்பு போதனையும் முற்றிலும் துல்லியமானது, திட்டவட்டமானது, சரியானது என்று நாம் நினைத்தோம். உழைப்பு என்னும் சொல்லில் சரியான, செவ்வையான ஒரே தர்க்கம் எதுவும் அடங்கி இருக்கவில்லை என்பது பிற்பாடு தெரிய வந்தது. உழைப்பு என்பது, தனக்கு வேண்டியவற்றைத் தானே செய்து கொள்ளும் எளிய உழைப்பாக முதலில் புரிந்து கொள்ளப்பட்டது. பின்னர், நோக்கம் அற்ற, உற்பத்தித் தன்மை இல்லாத உழைப்புச் செயல்முறையாக, தசைகளின் ஆற்றலைச் செலவிடும் பயிற்சியாக அர்த்தம் செய்து கொள்ளப்பட்டது. உழைப்பு என்ற சொல் நமது தர்க்கத்தின் மீது வீசிய ஒளியில் அது பிழை படவே முடியாதது என்று தோன்றியது. உண்மையில் பிழைபட முடியாதது எதுவும் இல்லை என்பது ஒவ்வோர் அடியிலும் புலப்பட்டது. ஆயினும் நாம் இந்தச் சொல்லின் ஒழுக்கநெறி ஆற்றலில் கொண்டிருந்த அளவற்ற நம்பிக்கை காரணமாகத் தர்க்கமும் நமக்குப் புனிதமாகத் தோன்றலாயிற்று. ஒரு சொல்லின் ஒழுக்கநெறி வண்ணத்திலிருந்து எந்த ஒரு சாதனத்தையும் பெறுவது சாத்தியம் இல்லை, போதனையில் கையாளப்படும் போது உழைப்பு பல்வேறு விதங்களில் ஒழுங்கமைக்கப்படலாம், ஒவ்வொரு தனி சந்தர்ப்பத்திலும் வெவ்வேறு பயன்களைத் தரலாம் என்று என் அனுபவமும் பள்ளி ஆசிரியத் தோழர்கள் பலரின் அனுபவமும் காட்டின. எப்படியும், கல்வியோடு சேராத உழைப்பு, அரசியல், சமூக போதனையோடு சேராத உழைப்பு, போதனைப் பயனை விளைக்காது. நீங்கள் ஒரு மனிதனை எவ்வளவு வேண்டுமானாலும் உழைக்க வைக்கலாம். ஆனால் அதோடு கூடவே அரசியலிலும் ஒழுக்கநெறியிலும் நீங்கள் அவனைப் பயிற்றுவிட்டால், சமூக வாழ்விலும் அரசியல் வாழ்விலும் அவன் பங்கு எடுத்துக்கொள்ளாவிட்டால், இந்த உழைப்பு போதனை நோக்கில் உபயோகம் அற்றதாகவே, நல்ல பயன் விளைக்காததாகவே இருக்கும்.

பொது அமைப்பின் பகுதி என்ற முறையிலேயே உழைப்பு போதனைக் கருவி ஆக முடியும்.

முடிவாக, இன்னும் ஒரு தவறு. இது தனித்த சாதன வகையைச் சேர்ந்தது. ஒரு குறித்த சாதனம் ஒரு குறித்த கட்டாயமான விளைவை ஏற்படுத்தும் என்று மிக அடிக்கடி கூறப்படுகிறது. போதனை இயல் நூல்களிலும் சஞ்சிகைகளிலும் அடிக்கடி வெளியிடப்பட்டதும் முதல் பார்வைக்கு சந்தேகத்திற்கு இடமே அற்றதாகத் தோன்றியதுமான ஒரு கூற்றை—தண்டனை பற்றிய கூற்றை—எடுத்துக்கொள்வோம். தண்டனை அடிமையைப் போதித்துப் பயிற்றுகிறது என்பது எவ்வகை ஐயப்பாட்டுக்கும் உள்ளாகாத துல்லியமான வெளிப்படை உண்மை. ஆனால் இந்தக் கூற்றில் நாம் குறிப்பிட்ட மூன்று தவறுகளும் ஒருங்கே இருந்தன. பகுப்பு முறை அனுமான முற்கூற்று என்ற தவறும் ஒழுக்கநெறிக் குருட்டு வழிபாடு என்ற தவறும் இதில் இருந்தன. தண்டனை என்ற சொல்லின் வண்ணத்திலிருந்தே தொடங்கியது தர்க்கம். முடிவாக, தனித்த சாதனம்—தண்டனை அடிமையைப் போதித்துப் பயிற்றுகிறது—என்ற தவறும் இருந்தது. எந்த சாதனமும் அமைப்பிலிருந்து தனியாக எடுத்து ஆராயப்படலாகாது என்பது என் உறுதியான கருத்து. மொத்தத்தில் எந்த ஒரு சாதனமும், அதை நாம் மற்ற சாதனங்களிலிருந்து, முழு அமைப்பிலிருந்து, செல்வாக்குகளின் முழுத் தொகுதியிலிருந்து தனியாக ஆராய்வோமானால் நல்லதாகவோ கெட்டதாகவோ ஏற்கப்பட முடியாது. தண்டனை அடிமையைப் போதித்துப் பயிற்றக் கூடும், சில வேளைகளில் மிக நல்ல மனிதனைக் கூட, மிகவும் சுதந்திரமான, பெருமிதம் உள்ள மனிதனைக் கூட, போதித்துப் பயிற்றக் கூடும். எனது நடைமுறை வேலையில், மனிதப் பண்பையும் பெருமிதத்தையும் உருவாக்கும் பணி எதிர்ப்பட்டபோது, தண்டனையின் மூல மாகவும் நான் இந்த நோக்கத்தை நிறைவேற்றியது உண்டு.

எந்த சந்தர்ப்பங்களில் தண்டனை மனிதப் பண்பை உருவாக்க உதவுகிறது என்பதைப் பின்பு சொல்கிறேன். ஒன்று மட்டும் நிச்சயம்: இத்தகைய விளைவு குறித்த சூழ்நிலையில் மட்டுமே, அதாவது, மற்ற சாதனங்களின் குறித்த சூழலிலும் வளர்ச்சியின் குறித்த கட்டத்திலும் மட்டுமே ஏற்பட முடியும். கல்வி பயிற்றுவதற்கான எந்த சாதனமும், எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட சாதனம் கூட—அறிவு

றுத்தல், விளக்கி விவரித்தல், உரையாடல், சமூகச் செல் வாக்கு ஆகியவை நம் நாட்டில் இத்தகையனவாக வழக்க மாக எண்ணப்படுகின்றன—எப்போதும் முழுமையாக நற் பயன் விளைப்பது என்று ஒப்புக்கொள்ளப்பட முடியாது. மிக நல்ல சாதனம் கூடச் சில சந்தர்ப்பங்களில் கட்டாயமாக மிகக் கெட்டதாகிவிடும். கூட்டுச் செல்வாக்கு, தனி மனிதன் மீது கூட்டு சமுதாயத்தின் செல்வாக்கு போன்ற சாதனத் தைக் கூட எடுத்துக் கொள்ளுங்கள். சில வேளைகளில் இது நல்லதாக இருக்கும், வேறு சில வேளைகளில் கெட்டதாக இருக்கும். தனிப்பட்ட செல்வாக்கை, போதனை ஆசிரியன் போதனை மாணவனுடன் தனிமையில் நடத்தும் நேர்முக உரையாடலை எடுத்துக்கொள்ளுங்கள். சில வேளைகளில் இது நல்ல பயன் விளைக்கும், வேறு சில வேளைகளில் தீமை உண்டாக்கும். சாதனங்களின் முழு அமைப்பிலிருந்து தனியாக எடுக்கப்பட்ட எந்த ஒரு சாதனத்தையும் நன்மை செய்வதா அல்லது தீமை செய்வதா என்ற நோக்கில் ஆராய்வது சரி அல்ல. முடிவாக, சாதனங்களின் எந்த அமைப்பும் நிலையான அமைப்பு என்று சிபாரிசு செய்யப்பட முடியாது.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூன் கூட்டு சமுதாயத்தின் வரலாற்றை இப்போது நான் நினைவுபடுத்திக் கொள்கிறேன். அது 1928ம் ஆண்டில் எட்டாவது வகுப்புக்கு உட்பட்ட சிறுவர் சிறுமியரின் கூட்டு சமுதாயமாகத் தொடங்கி வளர்ந்தது. ஆரோக்கியமும் மகிழ்வும் நிறைந்த சமுதாயம் அது. ஆனால் 1935ம் ஆண்டில் இருந்த சமுதாயம் அல்ல அது. 1935ல் இந்த சமுதாயம் 20 வயதுவரை உள்ள இளைஞர்கள் அடங்கி யதாக இருந்தது. பெரிய இளங் கம்யூனிஸ்டுகள் ஸ்தாபனத் தைக் கொண்டிருந்தது. இத்தகைய சமுதாயத்துக்கு முற்றி லும் வேறு வகையான போதனை முறை தேவைப்பட்டது என்பது கூறாமலே விளங்கும்.

நாம் ஒரு சாதாரண சோவியத் பள்ளியை எடுத்துக் கொண்டு நல்ல ஆசிரியர்கள், ஒழுங்கமைப்பாளர்கள், போதனை நிபுணர்கள் பொறுப்பில் அதை ஒப்படைப்பதாகவும் இந்தப் பள்ளி இருபது ஆண்டுகள் நடப்பதாகவும் வைத்துக் கொள்வோம். இந்த இருபது ஆண்டுக் காலத்தில் நல்ல ஆசிரியர்களின் கைகளில் அது சிறந்த முன்னேற்றம் அடை யும். எனவே போதனை முறை தொடக்கத்திலும் முடிவிலும்

ஒன்றுக்கு ஒன்று பெரிதும் வேறுபடும். இது என்னுடைய உறுதியான நம்பிக்கை.

மொத்தத்தில் போதனை இயல் மிகுந்த இயக்கத் தன்மையும் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற மாறுதல்களும் கொண்ட, சிக்கலான, பல்வகைப்பட்ட விஞ்ஞானம். இந்தக் கூற்றுதான் எனது போதனை நம்பிக்கையின் ஆதாரச் சின்னமாக விளங்குகிறது. நான் எல்லாவற்றையும் சோதனை செய்து சரிபார்த்து விட்டேன் என்று சொல்லவில்லை. கிடையவே கிடையாது. எத்தனையோ விஷயங்கள் எனக்கு இன்னும் தெளிவுபடவில்லை, சரியாக விளங்கவில்லை. ஆனாலும் என் கருத்தை வேலைக்குரிய புனைவுகோள் என்ற வகையில் நான் வலியுறுத்துகிறேன். எப்படியும் இதைச் சரி பார்ப்பது அவசியம். தனிப்பட்ட முறையில் எனக்கு என் அனுபவத்தின் மூலம் இது நிரூபிக்கப்பட்டு விட்டது. ஆனால் பெரிய சோவியத் சமூக அனுபவத்தின் வாயிலாக இது சரி பார்க்கப்பட வேண்டும். ஆயினும் நான் சொன்னதில் உள்ள தர்க்கம் நம்முடைய சிறந்த சோவியத் பள்ளிகளின் அனுபவத்துக்கும் நம்முடைய மிகப் பலவான சிறந்த குழந்தைகள் சமுதாயங்கள், குழந்தைப் பருவம் கடந்தவர்களின் சமுதாயங்கள் ஆகியவற்றின் அனுபவத்துக்கும் முரண்படவில்லை என்பது என் திடமான நம்பிக்கை.

இவைதாம் நான் குறிப்பிட விரும்பிய பொதுவான தொடக்கக் கருத்துக்கள்.

இப்போது யாவற்றிலும் முக்கியமான பிரச்சினைக்கு, போதனையின் குறிக்கோள்களை ஏற்படுத்துவது பற்றிய பிரச்சினைக்கு வருவோம். குறிக்கோள்கள் யாரால், எப்படி, எப்போது ஏற்படுத்தப்பட முடியும்? போதனைக் குறிக்கோள்கள் என்பவைதாம் என்ன?

போதனைக் குறிக்கோள் என்பது மனிதனுடைய தனித் தன்மையை உருவாக்கும் வேலைத் திட்டம், மனிதனுடைய சுபாவத்தைப் பண்படுத்தும் வேலைத் திட்டம் என்று நான் அர்த்தப்படுத்திக் கொள்கிறேன். தவிர, சுபாவம் என்ற சொல்லின் பொருளில் தனித் தன்மையின் உள்ளடக்கம் முழுவதையும் நான் சேர்த்துக்கொள்கிறேன். அதாவது வெளியே புலனாகும் சுபாவச் சிறப்புக்கள், உள்ளார்ந்த பற்றுறுதி, அரசியல் போதனை, பொருளறிவு எல்லாவற்றையும்—

மனிதனது தனித்தன்மையில் அடங்கியவை யாவற்றையும்—சுபாவம் என்ற சொல் குறிப்பதாக நான் அர்த்தப்படுத்திக் கொள்கிறேன். ஆசிரியர்களான நாம் மனிதனது தனித் தன்மை பற்றிய இத்தகைய வேலைத் திட்டத்தை வைத்துக் கொண்டு அதை நிறைவேற்ற முயல வேண்டும்.

எனது நடைமுறை வேலையில் இம்மாதிரி வேலைத் திட்டம் இல்லாமல் இருக்க என்னால் முடியவில்லை. அனுபவத்தைப் போன்று மனிதனுக்குப் படிப்பினை நல்குவது எதுவும் இல்லை. ஒரு காலத்தில் அதே த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் சில நூறு பெயர் என் பொறுப்பில் விடப்பட்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரிடமும் சுபாவத்தின் ஆழ்ந்த, அபாயமுள்ள போக்குக்களையும் ஆழமாக வேரூன்றிவிட்ட பழக்கங்களையும் நான் கண்டேன். இவர்களுடைய சுபாவம் எத்தகையதாய் இருக்க வேண்டும்? இந்தப் பையனை அல்லது பெண்ணைத் தகுதி யுள்ள பிரஜை ஆக்குவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? இவ்வாறு சிந்தனை செய்வது எனக்கு அவசியம் ஆயிற்று. தீர்க்கமாக ஆலோசித்தபோது, இந்தக் கேள்விக்கு இரண் டொரு சொற்களில் விடை அளிப்பது இயலாது என்பதைக் கண்டேன். நல்ல சோவியத் பிரஜை ஆக்குவது என்ற முடிவு எனக்கு வழி காட்டவில்லை. மனிதனது தனித்தன்மை பற்றிய இன்னும் விரிவான வேலைத் திட்டத்தை நான் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. தனித்தன்மை பற்றிய வேலைத் திட்டத்தை அணுகியதும் எனக்குப் பின்வரும் பிரச்சினை எதிர்ப்பட்டது: தனித்தன்மை பற்றிய இந்த வேலைத் திட்டம் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டுமா? ஒவ்வொரு தனிநபரையும் நான் ஒரே வேலைத் திட்டத்தில், ஒரே அளவுத்தரத்தில் புகுத்தவும் இந்த அளவுத்தரத்தைப் பெறமுயலவும் வேண்டுமா? அவ்வாறு செய்வதற்குத் தனிநப ரின் சிறப்பை, பிரத்தியேகமான பண்புகளை, தனித்தன்மையின் விசேஷ அழகை நான் பலி கொடுக்க வேண்டும். பலி கொடுக் காவிட்டால் என்ன வேலைத் திட்டம் என்னிடம் இருக்க முடி யும்? இந்தப் பிரச்சினைக்கு எளிதாக, பொதுப்படையாகத் தீர்வு காண என்னால் முடியவில்லை. ஆனால் நடைமுறையில் பத்து ஆண்டுக் காலத்தில் இந்தப் பிரச்சினை என்வரையில் தீர்க்கப்பட்டு விட்டது.

ஆம், ''அளவுத்தரம் உள்ள'' பொதுவான திட்டமும் இருக்க வேண்டும், ஒவ்வொரு தனிநபருக்கும் ஏற்ப அதில் திருத்தமும் செய்யப்படவேண்டும் என்பதை எனது போதனை வேலையில் நான் கண்டேன். என் போதனை மாணவன் துணிவுள்ள மனிதன் ஆகவேண்டுமா, அல்லது நான் அவனைக் கோழை ஆக்க வேண்டுமா என்ற கேள்வி எனக்கு எழ வில்லை. ஒவ்வொரு மாணவனும் துணிவும் வீரமும் நேர்மை யும் உழைப்புப் பற்றும் கொண்ட தேசபக்தன் ஆக வேண்டும் என்ற ஒரே ''அளவுத்தரத்தை'' இங்கே நான் அனுமதித் தேன். ஆனால் இயற்கைத் திறமை போன்ற, தனித்தன்மை யின் மென்மையான பகுதியை அணுகும்போது என்ன செய் வது? இயற்கைத் திறமையை எதிர்ப்படும் போது, அதன் விஷயத்தில் சில வேளைகளில் அளவுகடந்த சந்தேகங்களுக்கு உள்ளாக நேரிடுகிறது. இத்தகைய சந்தர்ப்பம் எனக்கு நேர்ந்தது: ஒரு பையன் பத்தாவது வகுப்புப் படிப்பை முடித்துவிட்டான். அவன் குலப்பெயர் தெரென்தியூக். அவன் மிக நன்றாகப் படித்தான், எல்லா விஷயங்களிலும் ஐந்து மார்க்குகள் வாங்கினான் (எங்கள் பள்ளியில் மிக உயர்ந்த மதிப் பெண் ஐந்து என்ற முறை வழக்கில் இருந்தது). பின்னர் இயந்திர நுணுக்க இயல் கல்லூரியில் சேர விரும்பினான். ஆனால் அவனிடம் பெருத்த கலைத் திறமை இயல்பாக அமைந் திருந்ததை நான் முன்பே தெரிந்து கொண்டிருந்தேன். அதி லும் அசாதாரண நிறைவு உள்ள நகைச்சுவை நடிப்புத் திறமை. மிக நுட்பமான, சமயோசித சாமர்த்தியம் வாய்ந்த, அருமையான குரல் வன்மையும் வளமான உணர்ச்சி வெளியீடும் கொண்ட, கூர்ந்த அறிவுள்ள நகைச்சுவை நடிகன் அவன். நடிப்புத் துறையில் அவன் சிறப்பாக ஒளி வீசுவான், ஆனால் இயந்திர நுணுக்கக் கல்லூரியில் அவன் சரா சரி மாணவனாகவே இருப்பான் என்பதை நான் கண்டேன். ஆனால் அந்தக் காலத்தில் இருந்த பொது ஆர்வம் காரண மாக என்னுடைய சிறுவர்கள் எல்லோருமே பொறி இயலார் ஆக ஆசைப்பட்டார்கள். பள்ளி ஆசிரியன் ஆகலாமே என்று பேச்சைத் தொடங்கினால் மாணவர்கள் ஒளிவு மறைவு இன்றி ஏளனமாகச் சிரித்தார்கள். ''நானே விரும்பி, வேண்டு மென்றே ஆசிரியர் வேலைக்குப் போவதா, என்ன இது?'' என் றார்கள். ''சரி நடிகன் ஆகு.'' ''அட, நீங்கள் என்ன ஒன்று?

3*

நடிப்பு ஒரு வேலையோடு சேர்த்தியா?'' என்று கேட்டார்கள். ஆக, அந்தப் பையன் இயந்திர நுணுக்கக் கல்லூரியில் சேர்ந்தான். ஓர் அருமையான நடிகனை நாம் இழக்கிறோம் என்ற ஆழ்ந்த உறுதியுள்ள எண்ணம் எனக்கு ஏற்பட்டது. ஆயினும் நான் விட்டுக் கொடுத்தேன், அவனுடைய விருப்பத்தை முறிக்க எனக்கு உரிமை கிடையாது என்ற காரணத்தால்...

ஆனால் என்னால் தாங்க முடியவில்லை. அவன் ஆறு மாதம் கல்லூரியில் படித்தான். எங்கள் நாடகக் குழுவில் பங்கு கொண்டான். நான் மறுபடி மறுபடி சிந்தனை செய்து ஒரு முடிவுக்கு வந்தேன். கம்யூன்காரர்களின் கூட்டத்தில் அவனை அழைத்தேன். தெரென்தியூக் கட்டுப்பாட்டுக்குக் கீழ்ப்படியாமல் இயந்திர நுணுக்கக் கல்லூரியில் சேர்ந்து விட்டான் என்று குறை கூற விரும்புவதாகச் சொன்னேன். ''உனக்கு வெட்கமாய் இல்லையா? உன்னிடம் ஒன்று சொன்னால் நீ அதைக் கேட்க மாட்டேன் என்கிறாயே'' என்று சாடினார்கள் கூட்டத்தினர். ''அவனை இயந்திர நுணுக்கக் கல்லூரியிலிருந்து விலக்கி, நாடகமன்றத் தொழில் பள்ளியில் சேர்ப்பது'' என்று தீர்மானம் நிறைவேற்றினார்கள். அவன் ஏக்கமே உருவாய் வளைய வந்தான். ஆனால் சமுதாயத்தில் கல்விச் சம்பளமும் விடுதியில் இருப்பிடமும் பெற்றபடியால் சமுதாயத்திற்குக் கீழ்ப்படியாமல் இருக்க அவனால் முடியவில்லை. இப்போது அவன் சிறந்த நடிகன். சோவியத் தூரக் கிழக்கில் உள்ள சிறந்த நாடக மன்றம் ஒன்றில் நடிக்கிறான். மற்றவர்கள் பத்து ஆண்டுகளில் அடையும் முன்னேற்றத்தை இரண்டே ஆண்டுகளில் அடைந்து விட்டான். இப்போது அவன் என்னிடம் மிகுந்த நன்றி பாராட்டுகிறான்.

ஆயினும், இப்போது இத்தகைய பிரச்சினை எனக்கு எதிர்ப்பட்டால், அதைத் தீர்க்க நான் அஞ்சுவேன். யார் கண்டார்கள், கட்டாயப்படுத்துவதற்கு எனக்கு என்ன உரிமை? ஆகவே, மாணவனின் விருப்பத்தை இவ்வாறு முறிக்கும் உரிமை பற்றிய பிரச்சினை என் விஷயத்தில் தீர்வு காணப்படாத ஒன்று. ஆனால், சுபாவத்தின் போக்கில் தலையிட்டு அதை வேண்டிய திசையில் திருப்புவதற்கு போதனை ஆசிரியனுக்கு உரிமை உண்டா, அல்லது அவன் இந்த சுபாவத்தின் போக்கைச் செயலின்றிப் பார்த்துக் கொண்டிருக்கவேண்டுமா

என்ற கேள்வி ஒவ்வொரு போதனை ஆசிரியனுக்கும் எதிர்ப்படும் என்று நான் ஆழ்ந்த உறுதி கொண்டிருக்கிறேன். ஆசிரியனுக்கு உரிமை உண்டு என்றே இந்தப் பிரச்சினை முடிவு செய்யப்பட வேண்டும் என நான் நினைக்கிறேன். ஆனால் இவ்வாறு தலையிடுவது எப்படி? ஒவ்வொரு தனி சந்தர்ப்பத்திலும் இந்த விஷயம் தனிநபருக்கு ஏற்ப முடிவு செய்யப்பட வேண்டும். ஏனென்றால், உரிமை பெற்றிருப்பது ஒரு விஷயம், அதைக் கையாளத் திறமை கொண்டிருப்பது வேறு விஷயம். இவை இரண்டு வெவ்வேறு பிரச்சினைகள். சுபாவத்தின் போக்கை எப்படித் திசை திருப்புவது என்று நம் பள்ளி ஆசிரியர்களுக்குக் கற்பிக்கும் விதத்தில் நம் ஊழியர்களுக்கு வருங்காலத்தில் பயிற்சி அளிக்கப்படுவது பெரிதும் சாத்தியமே. மண்டை எலும்புகளின் அறுவை முறை மருத்துவர்களுக்குக் கற்பிக்கப்படுகிறது அல்லவா? நம்முடைய நிலைமைகளில், இந்தக் ''கபால அறுவையை'' எப்படிச் செய்வது என்று போதனை ஆசிரியர்களுக்குக் கற்பிக்கப்படலாம். நான் செய்ததைக் காட்டிலும் அதிக நய நுட்பத்துடன், அதிக வெற்றிகரமாக இதைச் செய்ய அவர்கள் பயிற்றப்படலாம். ஆனால் மனிதனுடைய தனித்துவத்தின் பண்புகளையும் அதன் இயல்பான ஈடுபாடுகளையு திறமைகளையும் ஊன்றிக் கவனிந்து, அந்தத் தனித்தன்மையை அதற்குத் தேவையான திசையில் செலுத்துவது எப்படி என்பதையே அவர்கள் கற்பார்கள்.

என்னுடைய அனுபவத்திலும் என் சக ஊழியர்களின் அனுபவத்திலும் போதனை வேலையில் அதிக வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்ட நடைமுறை வடிவங்களை இப்போது விளக்கி விவரிப்போம். போதனை வேலையின் முதன்மையான வடிவம் கூட்டு சமுதாயம் என்று நான் எண்ணுகிறேன். கூட்டு சமுதாயம் பற்றி போதனை இயல் நூல்களில் நிறைய எழுதப்பட்டிருப்பது போலத் தோன்றினாலும் உள்ளத்தில் பதியும்படி அவ்வளவு விளக்கமாக எழுதப்படவில்லை.

கூட்டு சமுதாயம் என்பது என்ன? சமுதாயத்தில் நமது தலையீட்டின் எல்லைகள் யாவை? இப்போது நான் மிகநிறையப் பள்ளிகளைப் பார்வையிடுகிறேன்—இங்கே மாஸ்கோவிலும் கீவ் நகரத்திலும். மாணவர் சமுதாயத்தை நான் எப்போதும் காண்பதில்லை. வகுப்பு மாணவர் சமுதாயத்தைப் பார்க்கச் சில வேளைகளில் வாய்க்கிறது. ஆனால் பள்ளி

மாணவர் சமுதாயத்தைக் காண எனக்கு அனேகமாக ஒரு போதுமே வாய்க்கவில்லே.

என்றாலும் என் தோழர்களாலும் போதித்து வளர்க்கப் பட்ட என்னுடைய கூட்டு சமுதாயம் பற்றி இப்போது உங் களுக்கு எளிய சொற்களில் கூறுகிறேன். ஒரு விஷயத்தைக் கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்: நான் பள்ளி நிலைமை களிலிருந்து வேறான நிலைமைகளில் இருந்தேன். ஏனென்றால் என் மாணவர்கள் பொது விடுதியில் வசித்தார்கள், உற்பத்தி வேலை செய்தார்கள். மிகப் பெரும்பாலான மாணவர்கள் குடும்பங்கள் இல்லாதவர்களாக இருந்தார்கள். அதாவது அவர்களுக்கு வேறு சமுதாயம் எதுவும் இல்லை. விளைவாக, கூட்டு சமுதாய போதனைக்கு வேண்டிய சாதனங்கள், பள்ளி களில் இருப்பதைவிட அதிகமாக என்னிடம் இருந்தன. ஆனால் என்னிடம் மேம்பட்ட நிலைமைகள் இருந்தன என்ற ஒரே காரணத்தால் விட்டுக் கொடுக்க நான் தயாராய் இல்லை. ஒரு காலத்தில் என்னிடமும் பள்ளி இருந்தது—ரயில் பெட்டித் தொழிற்சாலையைச் சேர்ந்த பள்ளி. ஆனாலும் அங்கே பள்ளி மாணவர்கள் சமுதாயத்தை நான் உருவாக்கி இருந்தேன்.

கல்வித் துறை மக்கள் கமிஸாரகத்தின் பழைய தலைமை யால் ஒரு காலத்தில் வகுக்கபபட்ட பள்ளி நடைமுறையில் மிக விந்தையான நிகழ்ச்சிகளைக் காண்கிறேன். என் போதனை இயல் உள்ளத்துக்கு அறவே விளங்காதவை இவை. உதாரண மாக, நேற்று நான் ஒரு பண்பாட்டு, ஓய்வுப் பூங்காவுக்குப் போயிருந்தேன். வட்டார முன்னோடிச் சிறுவர் மாளிகை இந்தப் பூங்காவில் இருக்கிறது. வட்டாரத்தில் பாவ்லிக் மரோஸவ்* பெயர் கொண்ட தனியான முன்னோடி இல்லம் இருக்கிறது. இதே வட்டாரத்தில் 13 பள்ளிகன் உள்ளன. பள்ளி, முன்னோடிகள் மாளிகை, பாவ்லிக் மரோஸவ் பெயர் கொண்ட இல்லம், இந்த மூன்று நிறுவனங்களும் குழந்தைகளை

---

* முன்னோடிச் சிறுவன். கூட்டுப் பண்ணை அமைப்புக் காலத்தில் தன் கிராமத்தில் பணக்கார விவசாயிகளான குலாக்குகளை எதிர்த்துத் தன்னலம் அற்ற போராட்டம் நடத்தியவன். 1932ல் குலாக்குகளின் கொள்ளைக் கூட்டத் தால் மிருகத்தனமாகக் கொல்லப்பட்டான்.—ப-ர்.

வெவ்வேறு சமுதாயங்களாக வெவ்வேறு திசைகளில் இழுப்பதை நேற்று நான் கண்டேன். குழந்தைகளுக்குக் கூட்டு சமுதாயம் இல்லை. பள்ளியில் சிறுவன் ஒரு சமுதாயத்தில் இருக்கிறான், குடும்பத்தில் வேறு சமுதாயத்திலும் முன்னோடிகள் மாளிகையில் மூன்றாம் சமுதாயத்திலும் பாவ்லிக் மரோஸவ் முன்னோடிகள் இல்லத்தில் நான்காவது சமுதாயத்திலும் இருக்கிறான். சமுதாயங்களுக்கு நடுவே அவன் ஊடாடுகிறான். காலையில் ஒன்றையும் மாலையில் வேறு ஒன்றையும் மதியத்தில் பின்னும் ஒன்றையும் அவன் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். நேற்று நான் ஒரு நிகழ்ச்சியைக் கண்டேன்: முன்னோடிகள் மாளிகையில் நடனக் குழு இருக்கிறது. அது பழங்காலப் பாணியில் ''ரித்மீச்சிஸ்கி'' (தாளக் கட்டு உள்ளது) என்ற பெயர் 'கொண்டிருக்கிறது. அதில் சேர்ந்தவர்கள் வெறுமே நடனம் ஆடிக்கொண்டிருந்தார்கள். ''எங்கள் பெண்களை ரித்மீச்சிஸ்கி குழுவில் நடனம் ஆட விட மாட்டோம்'' என்று கூறினான் ஒரு பள்ளியின் இளங் கம்யூனிஸ்டுகள் சங்க அமைப்பாளன். பள்ளி இயக்குநர் ஆத்திரத்துடன் மார்பில் அறைந்து கொண்டு ''எப்படி இருக்கிறது பார்த்தீர்களா! இளங் கம்யூனிஸ்டுகள் சங்க அமைப்பாளன் விட மாட்டேன் என்கிறான்!'' என்று இரைந்தார். அவர் இளங் கம்யூனிஸ்டுகள் சங்க அமைப்பாளனை சமூக விசாரணை மன்றத்துக்கு இழுத்தார். ''இப்படி நடந்தது, பாருங்கள் இவன் செய்வதை'' என்றார். இளங் கம்யூனிஸ்டுகள் சங்க அமைப்பாளன் தான் பிடித்ததை விடவில்லை. ''விட மாட்டேன்!'' என்றான். மோதல் நிகழ்ந்தது. எங்கள் கம்யூனில் நடந்த இதே மாதிரி மோதலை நான் நினைவுபடுத்திக் கொண்டேன். எங்கள் கம்யூனில் மிகப் பல்வகையான குழுக்கள், மிக ஆழ்ந்த முறையில் செயல்பட்டு வந்தன. எங்களுக்குச் சொந்தமாக உண்மையான கிளைடர் விமானங்கள் இருந்தன, குதிரைப் படைப் பிரிவு இருந்தது... ஒரு பையன், மிகவும் நல்ல பையன், முன்னோடி, எங்கள் முன்னோடி நிறுவனத்தின் சார்பில் ஹார்க்கவ் முன்னோடிச் சிறுவர் மாளிகைக்குப் போய், வட துருவ ஆராய்ச்சிகளில் பங்கு கொண்டு சிறந்த பணி ஆற்றினான். முன்னோடிச் சிறுவர் மாளிகை மற்றச் சிறுவர்களுடன் மூர்மன்ஸ்க் சென்று வரும் பயணப் பரிசை அவனுக்கு அளித்தது. மீஷா பெக்கெர் என்னும் இந்தச் சிறுவன், தான்

மூர்மன்ஸ்க் செல்லப் போவதாக எங்கள் கம்யூனில் அறிவித்தான்.

''எங்கே போகிறுய்?'' என்று கேட்டான் கம்யூனின் முது நிலை உறுப்பினன் ஒருவன்.

''மூர்மன்ஸ்க்.''

''உன்னை யார் அனுமதிப்பார்கள்?''

''எனக்குப் பயண வசதி தந்திருக்கிறது முன்னேடிச் சிறுவர் மாளிகை!''

பொதுக் கூட்டத்தில் கம்யூனின் முதுநிலை உறுப்பினர்கள் சொன்னுர்கள்:

''தனக்குப் பயண வசதி தருபவர்கள் யார், தான் எங்கே போகிறுன் என்று மீஷா பெக்கெர் சொல்லட்டும்.''

மீஷா கூறினுன்:

''ஆமாம், நான் வட துருவ ஆராய்ச்சியின் பொருட்டு மூர்மன்ஸ்க் போகிறேன். முன்னேடிச் சிறுவர் மாளிகை என்னை அனுப்புகிறது.''

''முன்னேடிச் சிறுவர் மாளிகை உன்னை எப்படி அனுப்பலாம்? நாளைக்கே நாங்கள் உன்னை ஆப்பிரிக்காவுக்கு அனுப்பக் கூடும். முதலாவதாக, வோல்கா பிரதேசத்தில் நடைப் பயணம் செய்ய நமது கம்யூன் திட்டமிட்டிருக்கிறது. நீ பயணக் குழுவில் கிளாரினெட் வாசிக்கப் போகிறுய். இரண்டாவதாக, நீ வாசிக்காவிட்டாலும் கூட, நீ சுயநல வேட்டை ஆடுகிறுய். இங்கேயும் வேலை செய்கிறுய், அங்கேயும் வேலை செய்கிறுய். கூடாது, நீ எங்கும் போகக் கூடாது. முன்னேடிச் சிறுவர் மாளிகையில் வழங்கும் பரிசுகளை ஏற்றுக் கொள்ளலாமா கூடாதா என்று கம்யூன் பொதுக் கூட்டத்தில் நீ முன்கூட்டிக் கேட்டிருக்க வேண்டும்.''

இப்படி ஒரே கூச்சல்.

மீஷா கூட்டத்தாருக்குக் கீழ்ப்படிந்தான். ஆனுல் முன்னேடிச் சிறுவர் நிறுவனமும் இளங் கம்யூனிஸ்டுகள் சங்கமும் முன்னேடிச் சிறுவர் மாளிகையும் இந்தத் தகவலைத் தெரிந்து கொண்டன: ''த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் என்ன நடக்கிறது? நாங்கள் ஒருவனை வட துருவப் பயணத்துக்கு அனுப்புகிறேம், அவர்களோ, 'வோல்கா பிரதேசத்தில் கால் நடைப் பயணம் நடப்பதால் நீ கிளாரினெட் வாசிப்பாய்' என்கிறுர்கள். இது என்ன?'' விவகாரம் உக்ரேனிய இளங் கம்யூனிஸ்டுகள் சங்க

மத்தியக் கமிட்டிவரை போயிற்று. ஆனால் பிரச்சினை நடைமுறையில் தீர்க்கப்பட்டு விட்டது. ஏனென்றால் கம்யூனின் இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவனம் பின்வருமாறு கூறிவிட்டது: ''மீஷா போகத்தான் வேண்டும் என்றால் நாங்கள் அவனை வலுக்கட்டாயமாகத் தடுக்க மாட்டோம். அவனுக்குக் கல்விச் சம்பளம் முதலியன கொடுப்போம். அவன் முன்னோடிச் சிறுவர் மாளிகையின் உறுப்பினன் ஆகி அங்கே போய்விடட்டும்... எங்களுக்குத் தேவைப்பட்டால், வேண்டியவனை நாங்களே வட துருவத்துக்கு அவசியமான ஆராய்ச்சி நடத்த அனுப்பி வைப்போம், வட துருவத்தைப் பயன்பாட்டுக்குக் கொண்டுவர உதவுவோம். தற்போதைக்கு, இந்தக் காலப் பகுதியில் இது எங்கள் வேலைத் திட்டத்தில் இல்லை. என்னவோ ஷ்மித்,* ஷ்மித் என்று கதைக்கிறீர்களே. என்ன பிரமாதம்—ஷ்மித் வட துருவத்துக்குப் போகிறாராக்கும். ஆனால் சோவியத் மக்கள் எல்லாரும் வட துருவத்துக்குப் போகவில்லையே. ஆகவே, ஒவ்வொருவனும் வட துருவத்துக்குப் போக வேண்டும் என்று நிரூபிக்க முடியாது.''

மீஷா ஆட்சேபிக்க விரும்பினான் போலும். ஆனால் கம்யூன்காரர்கள், ''போதும், கொஞ்சம் கூச்சல் போட்டாய், இப்போது வாயை மூடு'' என்று சொல்லி விட்டார்கள். ''எனக்கே போக இஷ்டம் இல்லை'' என்றான் மீஷா.

இப்போது இன்னொரு விஷயம். மாஸ்கோ நகர்ப் புறத்தில் உள்ள சில சிறுவர் முகாம்களுக்கு நான் போயிருந்தேன். இவை நல்ல முகாம்கள். அவற்றில் இருப்பது இன்பமானது. இவை உடல் நலத்தைச் சீர்படுத்தும் நிலையங்கள் என்பதிலும் சந்தேகம் இல்லை. ஆனால் இந்த முகாம்களில் வெவ்வேறு பள்ளிகளைச் சேர்ந்த குழந்தைகள் குழுமி இருந்ததைக் கண்டு நான் வியப்பு அடைந்தேன். எனக்கு இது புரியவில்லை. இங்கே போதனை ஒருங்கிசைவு ஒரு வகையில் சிதைக்கப்படுவதாக நான் எண்ணுகிறேன். சிறுவன் ஒரு குறித்த பள்ளி சமுதாயத்தைச் சேர்ந்திருக்கிறான். கோடை காலத்தை அவன் கலப்பு சமுதாயத்தில் கழிக்கிறான். அவனுடைய

---

* ஒ. யூ. ஷ்மித், பிரபல சோவியத் விஞ்ஞானி, பூகோள இயல் அறிஞர், வட துருவ ஆராய்ச்சியாளர்.—ப-ர்.

பள்ளி சமுதாயம் அவனுடைய கோடைகால ஓய்வை ஒழுங் கமைப்பதில் எவ்விதப் பங்கும் எடுத்துக் கொள்வதில்லை என்பதே இதன் பொருள். முன்னோடிச் சிறுவர் மாளிகையிலும் பிற இடங்களிலும், நான் சொன்னது போல, உராய்வும் பூசலும் விளைகின்றன. இந்தப் பூசல் எப்படி ஏற்படுகிறது என்பது எனக்குப் புரிகிறது.

சரியான, சோவியத் போதனை, ஒன்றித்த, வலுவான, செல்வாக்குள்ள சமுதாயங்களை நிறுவுவதன் வாயிலாக ஒழுங்கமைக்கப்பட வேண்டும். பள்ளி, எல்லா போதனை நிகழ்முறைகளும் ஒழுங்கமைக்கப் பட்டுள்ள ஒன்றித்த சமுதாயமாக இருக்க வேண்டும். இந்த சமுதாயத்தின் தனி உறுப்பினன் தான் அதைச் சார்ந்திருப்பதை உணர வேண்டும், சமுதாயத்தின் நலன்களுக்கு விசுவாசம் கடைப்பிடிக்க வேண்டும், இந்த நலன்களைக் காக்க வேண்டும், இந்த நலன்களை உயர்வாக மதிக்க வேண்டும். சமுதாயத்தின் ஒவ்வோர் உறுப்பினனும் தன் சமுதாயத்தின் பலத்தையும் வளத்தையும் பயன்படுத்தாமல், தனக்கு அதிக வசதியும் உபயோகமும் உள்ளவர்களைத் தேடிக்கொள்ளலாம் என்ற நிலைமை, சரியானது அல்ல என்று நான் கருதுகிறேன். இதனால் விளையும் பயன்கள் யாவை? முன்னோடிச் சிறுவர் மாளிகைகள் எல்லா நகரங்களிலும் நன்றாக வேலை செய்கின்றன. மாஸ்கோவில் மிக நன்றாக இயங்குகின்றன. முன்னோடிச் சிறுவர் மாளிகைகளின் ஊழியர்களையும் அவற்றின் வேலை முறைகளையும் மிகப் பல விஷயங்களில் பாராட்ட வேண்டும், அவை இவ்வளவு நன்றாக வேலை செய்கின்றன, நமது சமூகம் அவை இவ்வளவு நன்றாக வேலை செய்ய உதவுகிறது என்றாலும் சில பள்ளிகள் எல்லா வித அதிகப்படி வேலையையும் தட்டிக் கழிப்பதற்கு இவற்றின் நற்பணி உதவுகிறது. முன்னோடிச் சிறுவர் மாளிகைகளில் உள்ளவை போன்ற வட்டங்கள் பல பள்ளிகளில் இல்லை. மொத்தத்தில், பாடத் திட்டத்துக்கு மிகையான எல்லா வேலையும் பள்ளிக்கு வெளியிலேயே நடக்கிறது. அதிலிருந்து விலகி இருக்கத் தனக்கு உரிமை உண்டு என்று பள்ளி நினைக்கிறது. சாக்குப் போக்குகளோ எளிதில் கிடைத்து விடுகின்றன: எங்களிடம் ஹால் இல்லை, எங்களுக்குப் பணம் ஒதுக்கப்படவில்லை, தனித் தேர்ச்சி பெற்ற ஊழியர் எங்களிடம் இல்லை முதலியவை. போதனைச் செயல்

முறை அனைத்தும் ஒழுங்கமைப் பட்டிருக்கும் சமுதாயத்தையே நான் ஆதரிக்கிறேன்.

வலிமையும் விறலும் சாதன வசதிகளும் நேர்த்தியான போதனை முறைகளும் உள்ள சமுதாயங்களின் அமைப்பை நான் சொந்தத்தில் எண்ணிப் பார்க்கிறேன். ஆனால் இவை சமுதாய ஒழுங்கமைப்பின் வெளிச் சட்டங்கள் மட்டுமே...

இதே முன்னோடிச் சிறுவர் மாளிகை, சிறுவர் கழகம், பள்ளியோடு கூடவே இயங்கலாம். ஆனால் அதில் வேலையைப் பள்ளியே ஒழுங்கமைக்க வேண்டும். பள்ளிகளே இந்த வேலைக்குப் பொறுப்பு ஏற்க வேண்டும். அங்கே வேலையில் அவை ஒன்றுசேர வேண்டும். ரித்மீச்சிஸ்கி வட்டத்தின் நடனத்தில் தன் பள்ளிப் பெண்கள் பங்கு கொள்வதை எதிர்த்த இளங்கம்யூனிஸ்டுகள் ஸ்தாபன ஒழுங்கமைப் பாளன் சொன்னது சரியே. இளங் கம்யூனிஸ்டுகள் ஸ்தாபன ஒழுங்கமைப்பாளன் தனது சமுதாயத்துக் குழந்தைகளின் போதனைக்குப் பொறுப்பாளி என்றால், தன் குழந்தைகள் முன்னோடிச் சிறுவர் மாளிகையில் என்ன செய்கிறார்கள் என்று தெரிந்து கொள்ளவும் அதற்குப் பொறுப்பு ஏற்கவும் அவன் கடமைப்பட்டவன். பரஸ்பரப் பொறுப்பிலும் ஒரே நபரின் தலைமையிலும் இணையாத வெவ்வேறு நிறுவனங் களுக்கும் நபர்களுக்கும் இடையே போதனைச் செயல்முறை பங்கிடப்படுவதால் நல்ல பயன் விளைய முடியாது.

நேர்த்தியான சாதன வசதிகளும் போதனை முறைகளும் கொண்ட ஒன்றித்த குழந்தைகள் சமுதாயத்தை அமைப்ப தற்கு அதிகப் பணம் செலவாகும் என்பது எனக்குப் புரி கிறது. ஆனால் குழந்தைகள் சமுதாயங்கள் அதிகப் பாங் குடன் அமைக்கப்படுவதால் பணத்தை ஓரளவு சிக்கனப் படுத்த முடியலாம்.

இவை எல்லாம் சமுதாயங்களின் வலைப் பின்னலையே பொறுத்தவை. சுருங்கக் கூறின், குழந்தைகளின் போதனையை வழிகாட்டி நடத்தும் ஒன்றித்த குழந்தைகள் சமுதாயமாகப் பள்ளியே விளங்க வேண்டும் என்று நான் வற்புறுத்த விரும்புகிறேன். மற்ற எல்லா நிறுவனங்களும் பள்ளிக்குக் கீழ்ப்பட்டு இருக்க வேண்டும்...

சமுதாயத்தின் முன் குறிக்கோள் இல்லாவிட்டால் அதை ஒழுங்கமைக்கும் முறையைக் காண்பது இயலாது என்று

நான் உறுதியாக எண்ணுகிறேன். ஒவ்வொரு சமுதாயத் துக்கும் முன் சமுதாயம் அனைத்துக்கும் உரிய பொதுக் குறிக்கோள் தனி வகுப்புக்கு முன் அல்ல, கட்டாயமாகப் பள்ளி அனைத்தின் முன்பும்—வைக்கப்பட வேண்டும்.

என் சமுதாயத்தில் 500 பெயர் இருந்தார்கள். எட்டு முதல் பதினெட்டு வயது வரை உள்ள குழந்தைகள், அதாவது, முதல் வகுப்பு முதல் பத்தாவது வகுப்பு வரை உள்ள மாணவர்கள் இவர்களில் இருந்தார்கள். மிகப் பல சிறப்புத் தன்மைகளில் இவர்கள் ஒருவருக்கு ஒருவர் வேறுபட்டிருந் தார்கள். முதலாவதாக, பெரிய மாணவர்கள் அதிகக் கல்விப் பயிற்சியும் உற்பத்தித் தொழிலில் அதிகத் தேர்ச்சியும் அதிகப் பண்பாடும் கொண்டிருந்தார்கள். சின்னவர்கள் அகதி நிலைக்கு அதிகம் நெருங்கியவர்களாக, எழுத்தறிவு அற்றவர் களாக இருந்தார்கள். முடிவாக அவர்கள் வெறும் குழந்தை களாக இருந்தார்கள். இருந்தாலும் இந்த ஐந்நூறு பெயரும் எனது வேலைக் காலத்தின் இறுதி ஆண்டுகளில் உண்மையாக வே ஒன்றித்த சமுதாயமாக விளங்கினார்கள். சமுதாயத்தின் எந்த ஓர் உறுப்பினனதும் உரிமைகளையும் எந்த ஒரு கம்யூன் உறுப்பினனதும் வாக்கு உரிமையையும் பறிக்க நான் ஒருதரம் கூட முற்படவில்லை—உறுப்பினனுடைய வயதும் வளர்ச்சியும் எத்தகையதாய் இருந்தாலும். கம்யூன் உறுப்பினர்களின் பொதுக் கூட்டம் உண்மையிலேயே எதார்த்தமான ஆளும் உறுப்பாக விளங்கியது.

சமுதாயத்தின் ஆளும் உறுப்பு என்ற முறையில் இந்தப் பொதுக் கூட்டத்தை என்னுடைய விமர்சகர்களும் தலைமை அதிகாரிகளும் ஆட்சேபித்தார்கள், சந்தேகித்தார்கள். இவ்வளவு பெரிய கூட்டம் பிரச்சினைகளைத் தீர்க்கும்படி விடக் கூடாது, சமுதாயத்துக்கு வழிகாட்டி இயக்கும் பொறுப்பைக் குழந்தைகளின் கும்பலிடம் ஒப்படைப்பது தகாது என்றார்கள். இது சரிதான். ஆனால், இது குழந்தை களின் கும்பலாக இல்லாமல் சமுதாய உறுப்பினர்களின் பொதுக் கூட்டமாக இருக்கும் நிலையை ஏற்படுத்த முயல வேண்டும் என்பதே நான் சொல்வதன் உட்கிடை.

கும்பலைப் பொதுக் கூட்டமாக மாற்றுவதற்கு எண்ணற்ற வழிகளும் சாதனங்களும் உள்ளன. இதைச் செயற்கை யாகவோ ஒரே மாதத்திலோ செய்துவிட முடியாது. இந்த

விஷயத்தில் விரைவாகப் பயன்கள் பெறும் போட்டி எப்போதும் துன்பமாகவே முடியும். எவ்வித சமுதாயமும் இல்லாத ஒரு பள்ளியை எடுத்துக் கொள்வோம். அதில் எல்லாம் ஒன்றிலிருந்து மற்றது தனித்து இருக்கிறது. அதிகமாய்ப் போனால் ஒவ்வொரு வகுப்பும் தனித்த வாழ்க்கை நடத்துகிறது, நாம் வீதியில் சாதாரணமாக எதிர்ப்படுபவர்களைச் சந்திப்பது போல் பிற வகுப்புக்களைச் சந்திக்கிறது. இத்தகைய பள்ளியை நாம் எடுத்துக்கொண்டால், குழந்தைகளின் இந்த உருவற்ற கும்பலை சமுதாயமாக மாற்றுவதற்கு, சந்தேகம் இன்றி நீண்ட காலம் (ஓர் ஆண்டோ இரண்டு ஆண்டுகளோ அல்ல), விடாப்பிடியாக, பொறுமையுடன் வேலை செய்ய வேண்டி இருக்கும். ஆனால் சமுதாயம் ஒரு தரம் அமைந்து விட்டால், அது பாதுகாக்கப்பட்டால், அதை, அதன் போக்கைக் கவனமாகப் பார்வையிட்டு வந்தால், இந்த மாதிரி சமுதாயம் நெடுங்காலம் நிலைத்திருக்கும். இத்தகைய சமுதாயம், சிறப்பாகச் சிறுவர் சிறுமியர் எட்டு, பத்து ஆண்டுகள் இருக்கும் பள்ளியில் விலைமதிப்பற்ற, வளம் மிக்க போதனைக் கருவியாக இருக்கும்...

குழந்தைகள் சமுதாயத்தின் ஆற்றல் மிகப் பெரிது. அதைவிடப் பெரிய ஆற்றல் அநேகமாக எதிலும் இல்லை. ஆனால் இத்தகைய சமுதாயத்தைக் குலைப்பது எளிது. ஒரு சில தவறுகள், தலைமையில் ஒரு சில மாற்றங்கள் சமுதாயத்தைக் கும்பலாக மாற்றிவிடக் கூடும். ஆனால் சமுதாயம் எவ்வளவு நீண்ட காலம் நிலவுகிறதோ அவ்வளவு அதிக வலு அடையும், அதன் வாழ்க்கை அவ்வளவு அதிகமாக நீடிக்க முடியும்.

நான் சிறப்பாக வலியுறுத்த விரும்பிய ஒரு விஷயத்தை இங்கே நாம் அணுகுகிறோம். அதுதான் மரபு. சமுதாயத்தை மரபு போன்று வலுப்படுத்துவது எதுவும் இல்லை. மரபுகளை ஏற்படுத்துவதும் அவற்றைப் பாதுகாப்பதும் போதனை வேலையின் மிக முக்கியப் பணி ஆகும். மரபுகள் இல்லாத பள்ளி, சோவியத் பள்ளி, நல்ல பள்ளியாக இருக்க முடியாது. நான் பார்வையிட்ட சிறந்த பள்ளிகள், மாஸ்கோவிலும் கூடத் தான், மரபுகளைத் திரட்டி வைத்திருந்த பள்ளிகளே ஆகும். மரபு என்பது என்ன? மரபுகளையும் சிலர் எதிர்த்ததை நான் கண்டிருக்கிறேன். ''எந்தச் சட்டமும், எந்த விதியும் அறி

வார்ந்ததாக, தர்க்க ரீதியில் புரியக் கூடியதாக இருக்க வேண்டும். நீங்களோ, அறிவுக்கு ஒத்த தன்மையையும் தர்க்கத்தையும் இழந்துவிட்ட மரபை அனுமதிக்கிறீர்கள்'' என்று நமது முதிய போதனைத் துறை அலுவலர்கள் கூறினர்கள். நான் மரபை அனுமதித்தது உண்மையே. உதாரணமாக, நான் இளைஞனுகவும் என்னிடம் வேலை குறைவாகவும் இருந்தபோது, கம்யூனில் நான் ஒவ்வொரு நாளும் காலை ஆறு மணிக்கு எழுந்து எல்லாவற்றையும் சரி பார்ப்பேன், அதாவது பிரிவின் முறைவேலைக் கமாண்டருடன் உறங்கறைக்குப் போவேன். அங்கே நான் இராணுவ முறையில் வரவேற்கப்படுவேன். பிரிவு உறுப்பினர்களையும் நாளின் தொடக்கத்தில் பிரிவின் நிலைமையையும் நான் சரிபார்ப்பேன். அந்த சமயத்தில் நான் கம்யூன் இயக்குநனுக ஏற்கப்படுவேன். இயக்குநன் என்ற முறையில் அந்த சந்தர்ப்பங்களில் எல்லா வித விசாரணைகளும் நடத்தவும் தண்டனைகள் விதிக்கவும் என்னுல் முடிந்தது. கம்யூனில் என்னைத் தவிர வேறு எவருக்கும் தண்டனை விதிக்கும் உரிமை இல்லை, அதாவது பொதுக் கூட்டங்களை விட்டு விட்டால். நாளடைவில் ஒவ்வொரு நாளும் சரி பார்ப்பது எனக்கு இயலாது போயிற்று. மறு நாள் சரி பார்க்க என்னுல் முடியாது என்றும் முறைவேலைக் கமாண்டர் இந்தப் பொறுப்பை நிறைவேற்றுவார் என்றும் முதல் நாள் அறிவித்தேன்.

காலக்கிரமத்தில் இதுவே வழக்கம் ஆகிவிட்டது. புதிய மரபு ஏற்பட்டது: சரி பார்க்கும் நேரத்தில் முறைவேலைக் கமாண்டர் கம்யூன் இயக்குநர் வடிவில் ஏற்கப்பட்டார். தொடக்கத்தில் இது புரியக் கூடியதாய் இருந்தது, பின்பு இதன் காரணம் மறைந்து விட்டது. முறைவேலைக் கமாண்டருக்கு தண்டனை விதிக்கும் உரிமை உண்டு என்பதைப் புதிய உறுப்பினர் அறிந்து கொண்டார்கள், ஆனுல் ஏன் என்பது அவர்களுக்குப் புரியவில்லை. பழைய உறுப்பினர்களுக்குக் காரணம் தெரிந்திருந்தது. ''இரண்டு நாள் மட்டி வேலை செய்வாய்!'' என்று தண்டனை விதிப்பார் கமாண்டர் ''ஆகட்டும்!'' என்று பதில் சொல்வான் தண்டனை பெற்றவன். பகலிலோ இரவிலோ வேறு வேளைகளில் கமாண்டர் இம்மாதிரி தண்டனை விதித்தால், ''நீர் யார் தண்டனை விதிப்பதற்கு?'' என்று அவரைக் கேட்டிருப்பார்கள். இந்த

மரபு நிலைத்து விட்டது, கம்யூனை வெகுவாக வலுப்படுத்திற்று.

இதுபோலவே தனது தர்க்கத்தை இழந்து விட்ட இன்னொரு மரபைக் குறிப்பிடுகிறேன். வெகு காலத்துக்கு முன்பு ஏற்பட்டது ஒரு மோதல். முறைவேலைக் கமாண்டர் மாலையில் அறிக்கை செய்து கொண்ட போது, ''இவனேவ் மதியத்தில் கட்டுப்பாட்டை மீறினன்'' என்று தெரிவித்தான். ''கிடையவே கிடையாது, நான் மீறவில்லை'' என்ருன் இவனேவ். நான் விவகாரத்தை விசாரித்துச் சரி பார்த்தபின், என் கருத்துப்படி இவனேவ் கட்டுப்பாட்டை மீறவில்லை என்று கூறினேன். மற்றவர்களும் என் கருத்தை ஆதரித்தார்கள். முறைவேலைக் கமாண்டரோ, தான் பிடித்ததை விடவில்லை. நான் விவகாரத்தை மேலே தொடராமல் விட்டு விட்டேன். முறைவேலைக் கமாண்டர் என் முடிவு பற்றிப் பொதுக் கூட்டத்தில் முறையிட்டான். ''என் சொற்களைச் சரி பார்க்கத் தோழர் மக்காரென்கோவுக்கு உரிமை இருக்கவில்லை. நான் அவர் காதில் கிசுகிசுக்கவில்லையே. 'அட்டென்ஷனில்' நின்று 'சல்யூட்' அடித்து மற்ற எல்லாக் கமாண்டர்களதும் முன்னிலையில் அறிக்கை செய்து கொண்டேன். என் அறிக்கையில் அவருக்கு நம்பிக்கை இல்லை என்ருல் என்னிடம் முறைவேலையையும் அவர் ஒப்படைத்திருக்கக் கூடாது. என்னுடைய ஒவ்வொரு அறிக்கையையும் விசாரித்துச் சாட்சிகளின் வாக்கு மூலங்கள் வாயிலாக அவர் சரிபார்க்கப் போகிருர் என்ருல், நான் எதற்காக முறைவேலை செய்ய வேண்டும்?'' என்று கூறினன் அவன்.

''தோழர் மக்காரென்கோ செய்தது சரி அல்ல. முறைவேலைக் கமாண்டரின் அறிக்கையைச் சரிபார்க்கக் கூடாது. அவன் காதில் கிசுகிசுத்தால் வேண்டுமானுல் சரி பார்க்கலாம்'' என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது பொதுக் கூட்டம். அதன்பின் பத்து ஆண்டுக் காலம் இதுவே சட்டமாக இருந்தது. நாள் முழுவதும் ஒருவன் என்ன வேண்டுமானுலும் சொல்லலாம். ஆனுல் அறிக்கை செய்யப்படும்போது அதுவே உண்மை. கமாண்டர் 'சல்யூட்' அடிக்கையில் கையை உயர்த்தினன் என்ருல் அவன் சொல்வதே சரி, அதுவே உண்மை என்று அர்த்தம். ஒருவன் குற்றமே செய்யாவிட்டாலும் கமாண்டர் பிழை செய்து விட்டான் என்று மனதுக்குள்

நினைத்துக் கொள்ளலாமே தவிர வெளியே சொல்லப் படாது.

இந்த அருமையான மரபு நிலைத்து விடவே, வேலை செய்வது எளிதாயிற்று. முதலாவதாக, முறைவேலைக் கமாண்டர் எவனும் பொய் சொல்லத் துணியவில்லை, ஏனென்றால் மற்றவர்கள் தன்னைக் கட்டாயம் நம்புவார்கள் என்று அவன் அறிந்திருந்தான். இரண்டாவதாக, சரி பார்ப்பதில் நேரத்தையும் சக்தியையும் செலவிட வேண்டி இருக்கவில்லை. முறைவேலைக் கமாண்டர் உண்மையாகவே தவறு செய்திருக்கலாம். ஆயினும் குற்றம் சாட்டப்பட்ட அப்பாவி கீழ்ப்படிந்தே ஆக வேண்டி இருந்தது. ஒரு தடவை ஓர் இளங் கம்யூனிஸ்ட், இது என்ன விதி, இதை மாற்ற வேண்டும் என்று பேச்சு எடுத்தான். "நான் வேலைக்கு வர மெய்யாகவே நேரம் தாழ்த்தவில்லை, ஆனால் நான் பத்து நிமிடங்கள் நேரம் தாழ்த்ததாக முறைவேலைக் கமாண்டர் தன் அறிக்கையில் சொன்னான், விஷயம் சரி பார்க்கப்படாது என்று என்னிடம் கூறினான்" என்றான். "ஒரு வேளை நீ சொல்வதே சரியாய் இருக்கலாம், உண்மையாகவே நீ உளியை எடுக்கப்போயிருக்கலாம். ஆனால் உன்னுடைய நியாயத்தை விடக் கட்டுப்பாடும் முறைவேலைக் கமாண்டர் மேல் நம்பிக்கையும் உனக்கும் எங்களுக்கும் அதிக மதிப்பு உள்ளது. ஆகவே நீ உன் நியாயத்தைத் தியாகம் செய்துவிடு. ஒவ்வொரு முறைவேலைக் கமாண்டர் சொல்வதையும் நாங்கள் சரி பார்ப்பது என்றால் அவன் முறைவேலைக் கமாண்டர் அல்ல, குற்றேவல் செய்பவன் என்று ஆகிவிடும். எங்களுக்கு வேண்டியவன் முறைவேலைக் கமாண்டர்" என்று அவனுக்கு விளக்கினோம். எனது கம்யூனில் இத்தகைய மரபுகள் மிக நிறைய, நூற்றுக் கணக்கில் இருந்தன. அவை எல்லாவற்றையும் நானே அறிந்திருக்கவில்லை, ஆனால் பையன்கள் அறிந்திருந்தார்கள். அவர்களும் எழுத்து வடிவில் அல்ல, உள்ளுணர்வு வாயிலாக, உணர்கொம்புகளால் தெரிந்து கொண்டிருந்தார்கள். "இப்படிச் செய்ய வேண்டும்" என்பார்கள். "ஏன் இப்படிச் செய்ய வேண்டும்?" "ஏனென்றால் பெரியவர்கள் இப்படிச் செய்கிறார்கள்." பெரியவர்களின் இந்த அனுபவம், பெரியவர்களின் தர்க்கத்துக்கு மரியாதை, கம்யூனை நிறுவுவதில் அவர்கள் எடுத்துக் கொண்ட சிரமத்துக்கு மரியாதை,

எல்லாவற்றுக்கும் மேல் சமுதாயத்தினுடையவும் அதன் அதிகாரிகளுடையவும் உரிமைகளுக்கு மரியாதை—இவை சமுதாயத்தின் மகத்தான உயர் பண்புகள். மரபுகள் சந்தேகமின்றி இவற்றுக்கு ஆதரவாய் இருக்கின்றன. இத்தகைய மரபுகள் மாணவர்களின் வாழ்க்கைக்கு அணி செய்கின்றன. இத்தகைய மரபுகளின் தொகுப்பில் வாழ்கையில் மாணவர்கள் தங்களுக்கே தனிப்பட உரிய சமுதாயச் சட்டத்தின் நிலைமையில் இருப்பதாக உணர்கிறார்கள், அதைக் குறித்துப் பெருமை கொள்கிறார்கள். அதை மேம்படுத்த முயல்கிறார்கள்.

இத்தகைய மரபுகள் இல்லாமல் சரியான சோவியத் போதனை அசாத்தியம் என்று நான் எண்ணுகிறேன். ஏன்? தன் உயர்பண்பை மதிப்பதும் தன் சமுதாய வடிவத்தை உணர்வதுமான விறல் மிக்க சமுதாயம் இல்லாவிட்டால் சரியான போதனை அளிப்பது இயலாது.

எத்தனை எத்தனையோ அக்கறைக்குரிய மரபுகளை நான் குறிப்பிட முடியும். காட்டாகச் சிலவற்றை எடுத்துக் கூறுகிறேன். இதோ ஒரு மரபு, வேடிக்கையானது கூட. துப்புரவுக் குழுவின்* முறைவேலை உறுப்பினர் நாள்தோறும் முறைவேலை செய்வார், கையில் செஞ்சிலுவைச் சின்னம் அணிந்திருப்பார். அவருக்குப் பெருத்த அதிகாரம், சர்வாதிகாரியின் அதிகாரம் உண்டு. அவர் எந்த இளங் கம்யூனிஸ்டையும் கம்யூன் உறுப்பினனையும் சாப்பாட்டு மேஜை அருகிருந்து எழுந்து கை கழுவிக் கொண்டு வரும்படி சொல்லலாம். அவ்வாறு சொல்லப்பட்டவன் கீழ்ப்படிய வேண்டும். பொறி இயலாளர், சக ஊழியர், ஆசிரியர், எவருடைய இருப்பிடத்துக்குள்ளும் போகவும் இன்ன ஆசிரியரின் இருப்பிடத்தில் அழுக்கு இருக்கிறது என்று பொதுக் கூட்டத்தில் அறிவிக்கவும் துப்புரவுக் குழு முறை வேலை உறுப்பினருக்கு உரிமை உண்டு. எந்த மாதிரி அழுக்கு என்று தெளிவுபடுத்தவே வேண்டாம் எனத் தீர்மானிக்கப்பட்டிருந்தது. இன்னார் வீட்டில் ஜன்னல் குறட்டில் புழுதி, இன்னார் வீட்டில் தண்ணீர் கொட்டியிருக்கிறது, இன்னார் வீட்டில் நாற்காலியின்

* துப்புரவுக் குழுவின் முறைவேலை உறுப்பினர் கம்யூனில் துப்புரவுக்குப் பொறுப்பாளர்.—ப-ர்.

முதுகுப் புறம் தூசி என்று விளக்க வேண்டியதில்லை. விவரமாக அறிக்கை செய்ய வேண்டாம், முறைக்கேட்டை வருணிக்க வேண்டாம், அழுக்கு என்ற ஒரு சொல்லைக் கூறினால் போதும் என்பது தீர்மானம். இந்த முறைக்கேட்டை நீக்கும் நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு இந்த ஒரு சொல்லே போதியதாக இருந்தது. இத்தகைய ''சர்வாதிகாரி'' பதவிக்குப் பெண்களே தேர்ந்தெடுக்கப்படுவது மரபு ஆகிவிட்டது. இந்த மரபு எப்படி ஏற்பட்டதோ அறியேன். ஆனால் எப்போதும் சிறுமியே, கட்டாயமாக வயதில் சிறியவளும் துப்புரவைக் கடைப்பிடிப்பவளுமான பெண்ணே தேர்ந்தெடுக்கப்பட்டாள். உதாரணமாக, ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கலாம் என்று சொன்னால், ''நீங்கள் என்ன, அவளுக்குப் பதினேழு வயது ஆகி விட்டதே'' என்ற மறுப்பு வரும். பதினேழு வயதுப் பெண்ணைத் துப்புரவுக் குழுவின் உறுப்பினளாக ஏன் தேர்ந்தெடுக்கக் கூடாது என்பது ஒருவருக்கும் புரியாது. ''போன தடவை அவள் வெளியே போனபோது அவளுடைய காலுறை நெகிழ்ந்து நழுவிற்று—அதனால் அவளை உறுப்பினள் ஆக்கக் கூடாது.'' சிறுமிதான் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பது ஏன்? பையனால் எப்போதும் தன் ஆடை உடைகளையும் பிறவற்றையும் வேண்டிய அளவு துப்புரவாக வைத்திருக்க முடியாதாம், தவிர, பெண்கள் ஆண்களை விடக் கடுமையானவர்கள் என்று தர்க்கம் சொல்லுகிறதாம். யாரையும் விட மாட்டேன் என்று ஒரு பெண் சொன்னால் நண்பனோ, பகைவனோ எவனையும் விட மாட்டாளாம். நான் இந்தக் கருத்தை எதிர்த்துப் போராடினேன்: ''உங்களுக்கு வெட்கமாய் இல்லையா? ஆண்களுக்கு இந்த உரிமையை அளிக்க ஏன் மறுக்கிறீர்கள்? ஒருத்தி துப்புரவானவள் அல்லது துப்பரவு இல்லாதவள் என்பதற்கு என்ன அர்த்தம்?'' என்று வாதித்தேன். மற்றவர்கள் என் கருத்துக்கு இசைந்தார்கள். ஆனால் தேர்தல் வந்ததும் நான் ஒரு இளங் கம்யூனிஸ்ட் பெண்ணின் பெயரைப் பிரேரித்த போது எல்லோரும் எதிர்த்தார்கள், முன்னோடிச் சிறுமி வேண்டும் என்றார்கள். அவர்கள் பிரேரித்த முன்னோடிச் சிறுமியோ, பச்சைக் குழந்தை. இந்த வேலையை அவளிடம் ஒப்படைக்கலாமா? ''இல்லை, அவள் இதற்கு ஏற்றவள்'' என்றார்கள்.

இந்தத் துப்புரவுக் குழுவினர் கொடியவர்கள். அவர்கள் படுத்திய பாட்டில் பிழைத்திருப்பதே அசாத்தியம் ஆகி விட்டது. இம்மாதிரிப் பன்னிரண்டு வயதுச் சிறுமி நாள் முழுதும் எவரையும் நிம்மதியாய் இருக்க விடவில்லை—சாப்பாட்டு நேரத்திலும், வேலையிடத்திலும், உறங்கறையிலும், எங்குமே. ''வாழ்வதே கடினம் ஆகி விட்டது. தூங்கும் அறையில் புழுதியைத் தேடு தேடு என்று தேடுகிறுள். புழுதியோ, எங்கும் இல்லை'' என்று அவளைக் கடிந்து கொண்டார்கள் மற்றவர்கள். அவள் நாற்காலியைத் திருப்பி, ''இது என்னவாம்?'' என்று கேட்டாள்.

''தலை மயிர் ஒட்டிக் கொண்டிருக்கிறது.''

பதினைந்தாம் எண் உறங்கறையில் அழுக்கு என்று அவள் அறிக்கையில் எழுதினுள். அது உண்மை ஆகையால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. நீனு என்னும் அந்தச் சிறுமி சொன்னுள்: ''நீ தலை வாரிக் கொண்டாய். உன் தலைமயிர் பறந்தது. அதனுல் என்ன, நான் உன் குற்றத்தை மறைக்க வேண்டுமோ?'' இத்தகைய சிறுமி அறிக்கை படிக்கும்போது வளர்ந்த பையன்கள் அவளை வியந்து பார்ப்பார்கள். இத்தனை இருப்பிடங்களைச் சுற்றிப் பார்த்தேன், இத்தனை தகவல்கள் தெரிவித்தேன் என்று அவள் சொல்லுவாள். ''நல்ல வேலையா?'' ''நல்ல வேலைதான்.'' இளைஞர்கள் தாங்கள் அவளால் துன்பப்பட்டதை மறந்து அவளையே மறுமுறை தேர்ந்தெடுப்பார்கள்.

இது மரபு. யாவரிலும் அதிகமாகச் சடங்கு பார்ப்பவர்களும் எல்லோரிலும் துப்புரவு உள்ளவர்களும் நேர்மை உள்ளவர்களும் எந்தக் கவர்ச்சிக்கும்—இருதய சம்பந்தமான கவர்ச்சிக்கோ வேறு கவர்ச்சிக்கோ—உள்ளாகாதவர்களும் ஆகிய சின்னஞ் சிறுமிகளிடமே இந்த மாதிரி வேலை ஒப்படைக்கப்பட வேண்டும் என்று சமுதாயம் உணர்ந்தது. இந்த மரபு ஆழமாக வேரூன்றிவிட்டதால் இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவனக் கமிட்டியில் கூட, ''வேண்டாம், இந்தப் பெண் உதவ மாட்டாள். கிளாவா என்பவளைக் கொடுங்கள். அவள் சின்னவள், துப்புரவு உள்ளவள். அவள் வேலை செய்வாள்'' என்றுர்கள்.

குழந்தைகள் இத்தகைய மரபுகளை ஏற்படுத்துவதில் வியப்பூட்டும் திறமை கொண்டவர்கள்.

ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்ள வேண்டும்: மரபை ஏற்படுத்துவதில் ஒரு வகையான உளமார்ந்த பழமைப் பற்றைப் பயன்படுத்த வேண்டி இருக்கிறது. இது நல்ல மாதிரியான பழமைப் பற்று. அதாவது நேற்றைய தினத்தின்மேல் நம்பிக்கை, ஒரு வகை மதிப்பை ஏற்படுத்தியவர்களும் எனது இன்றைய சஞ்சல புத்தி அந்த மதிப்பைத் தகர்த்துவிடக் கூடாது என்று விரும்பியவர்களுமான நம் தோழர்கள் மீது நம்பிக்கை இது.

இத்தகைய மரபுகளில் நான் சிறப்பாக மதிப்பது விளையாட்டுக்களை இராணுவப் பாங்கில் நடத்தும் மரபு...படைப் பிரிவின் சட்டத்தை அப்படியே திரும்பக் கையாள்வதாக இது இருக்கவே கூடாது. அதையே பின்பற்றுவதாக, காப்பி அடிப்பதாக இருக்கவே கூடாது.

சில இளம் போதனை ஆசிரியர்கள் ஓயாமல் அணிநடை நடத்துவதை விரும்புகிறார்கள். சாப்பாட்டு அறைக்குப் போகும்போது அணிநடை, வேலைக்குப் போகும்போது அணிநடை, எப்போதும் அணிநடை. நான் இதை எதிர்க்கிறேன். இது அழகாய் இல்லை, தேவையும் இல்லை. ஆனால் இராணுவ வாழ்க்கையில், சிறப்பாகச் செஞ்சேனையினரின் வாழ்க்கையில் அழகானவை, மனிதர்களை ஈர்ப்பவை நிறைய இருக்கின்றன. இந்தக் கலையுணர்ச்சி பயன் உள்ளது என்று என் வேலையின் போது நான் மேலும் மேலும் உறுதி கொண்டேன். இந்த ''இராணுவப் பாங்கை'' இன்னும் அழகுபடுத்தவும் அதை அதிகக் குழந்தைத் தன்மை உள்ளது ஆக்கவும் மேலும் இனியதாகச் செய்யவும் சிறுவர்களால் முடியும். எனது சமுதாயம் ஓர் அளவுக்கு இராணுவப் பாங்கில் அமைந்திருந்தது. முதலாவதாக, அதில் வழங்கிய சொற்கள் ஓரளவு இராணுவத் தன்மை கொண்டவை. ''பிரிவுக் கமாண்டர்'' என்ற பதவிப் பெயரை உதாரணமாகக் காட்டலாம். பெயர்கள் பெருத்த முக்கியத்துவம் உள்ளவை. உதாரணமாக, முழுமையற்ற உயர்நிலைப் பள்ளி என்று ஒரு பள்ளியை அழைப்பது எனக்கு ஏற்கவில்லை. இதைப் பற்றிச் சிந்தனை செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன். மாணவன் பள்ளியில் பயில்கிறான், ஆனால் அவனுடைய பள்ளி முழுமையற்ற உயர்நிலைப் பள்ளி என்று அழைக்கப்படுகிறது. இதற்கு என்ன அர்த்தம்? அரைகுறையான பெயர். பள்ளியின் பெயர்

மாணவனைக் கவர்வதாய் இருக்க வேண்டும். ''பிரிவுக் கமாண்டர்'' என்ற பெயரில் நான் கவனம் செலுத்தினேன். ''குழுத்தலைவன்'' என்ற பெயரை நான் சொன்னேன். ஆனால் இதுசரியான பெயர் அல்ல என்று பையன்கள் கூறினார்கள். ''குழுத் தலைவன் என்றால் என்ன அர்த்தம்? உற்பத்தித் தொழிலில் வேலைக் குழுத் தலைவன் இருக்கிறான். நம்முடைய பிரிவில் கமாண்டர் தான் இருக்க வேண்டும்'' என்றார்கள். ''நீயும் வேலைக் குழுவுக்குத் தானே தலைவனாய் இருக்கப் போகிறாய்?'' என்றேன், ''இல்லை, எப்படிச் சொல்வது! கமாண்டர் என்ற முறையில் நான் உத்தரவு இட முடியும். குழுத் தலைவன் உத்தரவு இட்டால், 'நீ கமாண்டரா என்ன உத்தரவு கொடுப்பதற்கு?' என்பார்கள்'' என்றான் அந்தப் பையன். ஒரு நபர் தலைமை குழந்தைகள் சமுதாயத்தில் மிக அழகாக ஏற்பட்டுவிடுகிறது.

அறிக்கை செய்வது என்ற சொல்லை எடுத்துக் கொள் வோம். பையனிடம் அவன் செய்த வேலை பற்றிய விவரத்தை வெறுமே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் தான். ஆனால் இந்த விவரம் ஓரளவு சட்டத் தன்மை கொண்டிருப்பது குழந்தைகளுக்குக் கவர்ச்சியாய் இருக்கிறது. சட்டத் தன்மை பின்வருமாறு: கமாண்டர் அறிக்கைக் கூட்டத்துக்கு வரும் போது நாள் முழுவதும் அணியும் சாதாரண உடை அல்ல, சீருடை அணிந்திருக்க வேண்டும். ஒரு கமாண்டர் அறிக்கை செய்யும் போது 'சல்யூட்' அடிக்க வேண்டும். அறிக்கையை உட்கார்ந்தபடி கேட்க எனக்கு உரிமை கிடையாது. உடன் இருப்பவர்கள் எல்லோரும் 'சல்யூட்' செய்ய வேண்டும். அவ்வாறு கையை உயர்த்தும் போது எல்லோரும் பிரிவின், சமுதாயம் அனைத்தின் வேலைக்கு வணக்கம் தெரிவிக்கிறார் கள் என்பதை யாவரும் நன்கு அறிந்திருந்தார்கள்.

இன்னும் இராணுவ வாழ்க்கையின் பல அம்சங்களை சமுதாய வாழ்க்கையில், அதன் இயக்கத்தில் புகுத்தலாம். உதாரணமாக, கம்யூனில் பொதுக் கூட்டங்களைத் தொடங்கி வைக்கும் அருமையான மரபு இருந்தது. பொதுக் கூட்டம் முறை வேலைக் கமாண்டரால்தான் தொடங்கி வைக்கப்படும். வியப்பூட்டுவது என்ன என்றால், மக்கள் கமிஸார் உட்படப் பெரிய தலைவர்கள் கம்யூனுக்கு வருகை தந்த போது கூட, பொதுக் கூட்டத்தைத் தொடங்கி வைக்கும் உரிமை வேறு

யாருக்கும் அளிக்கப்படவில்லை, முறை வேலைக் கமாண்டருக்குத் தான் அந்த கௌரவம் அளிக்கப்பட்டது—இந்த மரபு அவ்வளவு உயர்வாக மதிக்கப்பட்டது. அதோடு பொதுக் கூட்டம் பத்து ஆண்டுக் காலம் முழுவதிலும் மரபுப் படி திட்டவட்டமான ஒழுங்கு முறை கொண்டிருந்தது. பொதுக் கூட்டம் கூடுவதற்கான அறிவிப்பு எக்காள முழக்கத்தின் மூலம் செய்யப்பட்டது. அதன் பின் முன் மாடத்தில் இருந்த இசைக் குழு மூன்று முறை அணிநடை இசை வாசித்தது. முதல் முறை வெறுமே கேட்பதற்காக. அப்போது உட்கார்ந்திருக்கலாம், பேசலாம், உள்ளே வரலாம், வெளியே போகலாம். ஆனால் மூன்ருவது தடவை அணிநடை இசை முடிந்த சமயத்தில் நான் ஹாலில் கட்டாயம் இருக்க வேண்டி இருந்தது. ஹாலுக்குள் போகாதிருக்கக் கூடாது என்று நானே உணர்ந்தேன். நான் போகாதிருந்தால் ஒழுங்கை மீறியதாக என்மேல் குற்றம் சாட்டப்படும். அணி நடை இசை முடிந்ததும், ''கொடியின் கீழ் நிற்க! விரைப்பாக!'' என்று நான் உத்தரவிட வேண்டும். எனக்கோ கொடி பார்வையில் படாது. ஆனல் அது அருகில் இருக்கிறது, நான் உத்தரவு கொடுத்ததும் அது உள்ளே கொண்டுவரப்படும் என்ற உறுதி எனக்கு இருந்தது. கொடி எடுத்து வரப்பட்ட போது எல்லோரும் கட்டாயமாக எழுந்து நின்ருர்கள். இசைக் குழு கொடி வணக்க மெட்டை இசைத்தது. கொடி அரங்கில் நாட்டப்பட்டதும் கூட்டம் தொடங்கிவிட்டது என்று கருதப்பட்டது. முறை வேலைக் கமாண்டர் உடனே அரங்குக்கு வந்து, ''கூட்டம் தொடங்கி விட்டது'' என்று அறிவித்தான்.

பத்து ஆண்டுக் காலத்தில் ஒரு கூட்டம் கூட வேறு வகையில் தொடங்கப்படவில்லை. அது வேறு விதமாகத் தொடங்கி இருந்தால் எங்கள் கம்யூனில் ஒழுங்கீனம் நிலவுவதாகவும் என்ன நடக்கிறதோ, சைத்தானுக்கே வெளிச்சம் என்றும் இன்னும் பலவாருகவும் மற்றவர்கள் பேசத் தலைப்பட்டிருப்பார்கள்.

இந்த மரபு சமுதாயத்துக்கு அணி செய்கிறது. சமுதாயம் எழிலுற வாழ்வதற்கு ஏற்ற, இதனுலேயே கவர்ச்சி உள்ள சட்டகத்தை அது ஏற்படுத்துகிறது. செங்கொடி இந்த மரபுக்கு ஏற்ற நேர்த்தியான உள்ளடக்கம் ஆகும்.

இதே மரபுப்படி, கொடி ஏந்துபவன், அவனுடைய துணைவர்கள் ஆகிய பதவிகளுக்கு யாவரிலும் சிறந்தவர்களும் தகுதி உள்ளவர்களும் ஆன கம்யூன் உறுப்பினர்கள் பொதுக் கூட்டத்தால் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அவர்கள் ''ஆயுள் காலத்துக்கு'', அதாவது கம்யூன் உறுப்பினராய் இருக்கும் காலம் முழுவதற்கும், தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். கொடி ஏந்துபவனுக்கு எந்த விதமான தண்டனையும் கொடுக்கப்படக் கூடாது. கொடி ஏந்தும் குழுவினர் தனி அறையில் வசித்தார்கள். அவர்களுக்கு அதிகப்படி நல்லுடைகள் வழங்கப்பட்டன. கொடி ஏந்தி இருப்பவனை ''நீ'' என்று ஒருமையில் விளிக்கக் கூடாது என்ற வழக்கம் கடைப்பிடிக்கப்பட்டது.

இந்த மரபு எப்படித் தோன்றியது என்பதையும் நான் அறியேன். ஆனால் கொடி ஏந்துபவன் கம்யூனில் எல்லோரையும் விட அதிக மரியாதைக்கு உரியவனாய் இருந்தான். என்னுடைய கம்யூன் உறுப்பினர்களில் ஒருவன் மட்டுமே இராணுவத் தன்மை கொண்ட பணிக்காக* விருது பெற்றான், அவன் கொடி ஏந்துபவன் என்பது இதற்குச் சான்று பகர்கிறது.

பள்ளியில் கொடி கௌரவிக்கப்படுவது மிகச் சிறந்த போதனைச் சாதனம் ஆகும். த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் கொடி வைக்கப்பட்டிருந்த அறையைச் செப்பனிடும் பொருட்டுக் கொடியை வேறு இடத்துக்குக் கொண்டுபோக நேர்ந்தால், சமுதாயம் முழுவதையும் அணிவகுத்து, இசைக்குழுவை அழைத்து, முழு மரியாதையுடன் கொடியை வேறு இடத்துக்கு எடுத்துச் சென்றோம். வேறு விதமாகக் கொடியை இடம் மாற்றுவது இயலாதிருந்தது. இவ்வாறு கொடிக்கு மரியாதை செலுத்தப்பட்டது.

எங்கள் கம்யூன் அனேகமாக உக்ரேன் முழுவதிலும் வோல்கா பிரதேசத்திலும் காக்கேஷியாவிலும் கிரிமியாவிலும் நெடுகச் சுற்றி வந்தது. ஆனால் செங்கொடியை ஒரு நிமிடங்கூடக் காவல் இல்லாமல் விடவில்லை. என் ஆசிரிய

---

* மாபெரும் தேசபக்தப் போர்க் காலத்தில் மக்காரென்கோவின் பல மாணவர்கள் விருதுகளும் பதக்கங்களும் பெற்றார்கள்.—ப-ர்.

நண்பர்களுக்கு இந்த விஷயம் தெரிய வந்ததும் அவர்கள் என்னைக் கடிந்து கொண்டார்கள். ''நீங்கள் என்ன செய்கிறீர்கள்? இரவில் சிறுவர்கள் தூங்க வேண்டும். சிறுவர்களின் உடல்நல மேம்பாட்டுக்காக இந்தப் பயணத்தை மேற்கொண்டிருக்கிறீர்கள். சிறுவர்களோ, இரவு முழுவதும் கொடி அருகே பாராக் கொடுத்துக் கொண்டு நிற்கிறார்கள்'' என்று கூறினார்கள்.

நாங்கள் வெவ்வேறு மொழிகளில் போலப் பேசினோம்—ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளாமல். நடைப் பயணத்தின் போது கொடியைக் காவல் இன்றி விடுவது எப்படி முடியும் என்று எனக்கு விளங்கவில்லை.

கம்யூன் வாயிலில் பாராக்காரன் துப்பாக்கி பிடித்தவாறு நின்றான். இதைப் பற்றிச் சொல்ல எனக்குப் பயமாகக் கூட இருக்கிறது. அவனிடம் தோட்டாக்கள் இல்லைதான். ஆனாலும் அவனுக்குப் பெருத்த அதிகாரம் இருந்தது. அடிக்கடி பாராக்காரனாக நிற்பவன் பதின்மூன்று, பதினான்கு வயதுச் சிறுவனாய் இருப்பான். முறை வைத்துக்கொண்டு பாராக் கொடுத்தார்கள் பையன்கள். பாராக்காரன் கம்யூனுக்கு வந்த ஒவ்வொருவரையும் வாயிலில் நிறுத்தி, அவர் யார், அவருக்கு என்ன வேண்டும், எதற்காக வந்திருக்கிறார் என்று விசாரித்துச் சரி பார்த்தான். வருபவருடைய பாதையைத் துப்பாக்கியால் தடுக்க அவனுக்கு உரிமை இருந்தது. இரவில் கம்யூன் கதவுகள் பூட்டப்பட வில்லை. பாராக்காரன் அப்போதும் வாயிலில் நின்றான். சில வேளைகளில் கோழைத்தனத்துக்கு உள்ளாகி அஞ்சினான். ஆனாலும் தன் முறை நேரமான இரண்டு மணி பாராக் கொடுத்தான். ஒரு முறை உக்ரேனியக் கல்வித்துறை மக்கள் கமிஸாரகத்தைச் சேர்ந்த ''குழந்தை இயல்'' நிபுணி ஒருத்தியும் புரட்சி எதிர்ப்பு ஒழிப்புப் படையினர் ஒருவரும் வந்தார்கள். அவர்கள் இருவருக்கும் இடையே சுவையான உரையாடல் நடந்தது: ''என்ன, இவன் இப்படியேதான் நிற்பானா?'' ''ஆமாம்.'' ''இவனுக்குச் சலிப்பாய் இருக்கும். இவனுக்குப் படிப்பதற்குப் புத்தகம் கொடுத்திருக்கலாம்.'' ''என்ன, பாராக்காரனுக்காவது, புத்தகம் படிக்கக் கொடுப்பதாவது?'' என்றார் படையினர். ''வேறு என்ன, நேரத்தைப் பயன்படுத்தி வளர்ச்சி பெற வேண்டும்.'' இரு வேறு வகை மனிதர்கள். பாராக்காரன்

ஒன்றும் செய்யாமல் இருப்பது அவளுக்கு வியப்பு அளித்தது. பாராக்காரன் காவலில் நிற்கையில் புத்தகம் படிக்கலாம் என்ற யோசனை அவருக்கு வியப்பு அளித்தது. இருவரும் வெவ்வேறு காரணத்தால் வியப்பு அடைந்தார்கள். இந்த ஏற்பாடோ, சமுதாயத்தின் இன்றியமையாத செயல், போதனை அளிக்கும் செயல் ஆகும்...

மரபு ஆகி விட்ட ஒரு விதி இருந்தது. படிக்கட்டில் இறங்கி ஏறும்போது அழியைப் பிடித்துக் கொள்ளக் கூடாது என்பது அந்த விதி. நல்ல வீட்டின் படிக்கட்டு அது. பையன் கள் அதை மிதித்துக் கெடுத்தார்கள். அழியோரமாகத் தட தடவென்று ஏறி இறங்கிக் கெடுத்தார்கள். ஆகவே படிக் கட்டைக் காப்பாற்றும் பொருட்டு அழி ஓரமாக நடக்கக் கூடாது என்று பையன்கள் தீர்மானித்தார்கள். பின்பு இந்த நோக்கம் மறக்கப் பட்டது. புதியவர்கள் வந்தார்கள். ''அழியை ஏன் பிடித்துக் கொள்ளக் கூடாது?'' என்று கேட் டார்கள். ''நீ உன் முதுகுத் தண்டை நம்பி இருக்க வேண்டும், அழியை அல்ல'' என்று மற்றவர்கள் பதில் சொன்னார்கள். ஆரம்பத்திலோ முதுகுத் தண்டை வலுப்படுத்துவது அல்ல, படிக்கட்டைக் காப்பாற்றுவதே நோக்கமாய் இருந்தது.

இராணுவ வாழ்க்கையின் அழகியல், நிமிர்ந்த மேனி, செயல் பாங்கு முதலியன இருக்க வேண்டும். ஆனால் எக் காரணம் கொண்டும் வெறும் நடைப்பித்து இருக்கக் கூடாது.

இராணுவப் பயிற்சியைப் பொறுத்தவரை, அது இந்த அழகியலுக்கு முற்றிலும் பொருத்தம் இன்றி நடக்கிறது. துப்பாக்கி சுடும் விளையாட்டு, குதிரையேற்ற விளையாட்டு, படைத் தொழில் ஆகியன இந்தப் பயிற்சியில் அடங்கியவை. ஆனால் தேவையானதோ செயல் பாங்கு, அழகியல். குழந்தை கள் சமூகத்தில் அது முற்றிலும் இன்றியமையாதது. சிறப் பாக அது நல்லது ஏனென்றால், சமுதாயத்தின் சக்தியை அது காப்பாற்றுகிறது, விளங்காத, ஒழுங்கற்ற இயக்கங்களி லிருந்து, இயக்கங்களின் அசைவாட்டத்திலும் அவற்றை வீணாக்குவதிலும் இருந்து காப்பாற்றுகிறது. இந்த நோக்கில் சீருடை அளவற்ற முக்கியத்துவம் உள்ளது ஆகிறது. இந்த விஷயத்தை நீங்கள் என்னைவிட நன்றாக அறிவீர்கள். கல்வித் துறை மக்கள் கமிஸாரகமும் கட்சியும் இது பற்றித் திட்ட மான நோக்கு கொண்டிருக்கின்றன, எனவே இதைப் பற்றி

நான் பேசப் போவதில்லை. ஆனால் ஒன்று: சீருடை அழகாகவும் வசதியாகவும் இருக்கும் போதுதான் நேர்த்தியுள்ளது. சீருடை விஷயத்தில் பல வகையான மனக் கசப்புக்களையும் தோல்விகளையும் அனுபவித்த பிறகே ஓரளவு வசதியான, அழகான சீருடையை நான் தெரிந்தெடுக்க முடிந்தது.

ஆனால் சீருடையைப் பொறுத்தவரை, நான் இன்னும் மேலே செல்லத் தயாராய் இருக்கிறேன். குழந்தைகள் கண்டோர் வியக்கும்படி அழகாகவும் கவர்ச்சியாகவும் உடை அணிய வேண்டும். பழங்காலத்தில் படையினர் அழகாக உடை அணிந்தார்கள். சலுகை பெற்ற வர்க்கங்களின் பகட்டைக் காட்டியது அந்த உடை. நமது சமூகத்தில், அழகாக உடை அணிய உரிமை உள்ள சலுகை பெற்ற வகுப்பினராக இருக்க வேண்டியவர்கள் குழந்தைகளே. நான் எந்தத் தடையையும் பொருட்படுத்த மாட்டேன். ஒவ்வொரு பள்ளிக்கும் அழகிய சீருடை அளிப்பேன். இது சமுதாயத்தை நன்கு ஒற்றுமைப்படுத்தும் சாதனம் ஆகும். ஒரு குறித்த அளவு இந்தத் திசையில் நான் முன் சென்றேன். ஆனால் என் முற்போக்கு இடை முறிக்கப்பட்டு விட்டது. தங்க, வெள்ளிச் சித்திரக் கூட்டெழுத்துச் சின்னங்களும் சரிகைப் பூ வேலை செய்த தொப்பிகளும் பெட்டி போட்ட முடமுடப்பான வெள்ளைக் கழுத்துப் பட்டிகளும் பிறவும் என் கம்யூனில் இருந்தன. நீங்கள் நல்லுடை அணிவிக்கும் சமுதாயம் ஐம்பது சத விகிதம் உங்கள் கைக்குள் இருக்கும்.

விரிவுரை இரண்டு

## கட்டுப்பாடு, ஒழுங்குமுறை, தண்டனை, ஊக்கம் ஊட்டுதல்

இன்று கட்டுப்பாடு, ஒழுங்குமுறை, தண்டனை, ஊக்கம் ஊட்டுதல் என்ற விஷயத்தை எடுத்துக்கொள்கிறேன். ஒன்றை உங்களுக்கு இன்னொரு தரம் நினைவுபடுத்த விரும்புகிறேன்: என்னுடைய கருத்துக்கள் எனது சொந்த அனுபவத்திலிருந்து மட்டுமே தோன்றியவை. இந்த அனுபவம் ஓரளவு

தனிப்பட்ட நிலைமைகளில், முதன்மையாக சட்டத்தை மீறியவர்களுக்கான குடியேற்றங்களிலும் கம்யூன்களிலும் ஏற்பட்டது. ஆயினும் எனது கண்டுபிடிப்புக்களின் ஒரு சில முடிவுகள் மட்டும் இன்றி அவற்றின் பொதுத் தொகுப்பும் முறையான குழந்தைகள் சமுதாயத்திற்குப் பொருந்தும் என நான் நம்புகிறேன். அம்சரீதியாக இதன் தர்க்கம் பின் வருவது.

சட்டத்தை மீறியவர்களுக்கான நிலையங்களின் இயக்கு நஞக நான் வேலை செய்த பதினைறு ஆண்டுகளில் கடைசிப் பத்து அல்லது பன்னிரண்டு ஆண்டு வேலை முறையானது என்று நான் எண்ணுகிறேன். சிறுவர்களும் சிறுமிகளும், சட்டத்தை மீறுபவர்களும் ''முறைகெட்டவர்களும்'' ஆவ தற்குக் காரணம், ''சட்டத்தை மீறுபவர்களுக்கு உரிய'' அல்லது ''முறைகெட்ட'' போதனை இயலே என்பது என் ஆழ்ந்த நம்பிக்கை. முறையான போதனை இயல், செயலூக் கமும் குறிக்கோளை நோக்கிய இயக்கமும் கொண்ட போதனை முறை, குழந்தைகள் சமுதாயத்தை மிக விரைவில் முற்றி லும் முறையான சமுதாயமாக மாற்றி விடுகிறது. பிறப் பிலேயே குற்றத்தன்மை கொண்டவர்களோ, பிறப்பிலேயே கடினமான சுபாவம் உள்ளவர்களோ ஒருவரும் இல்லை. சொந்தத்தில் எனக்கு, என்னுடைய அனுபவத்தில் இந்தக் கருத்து நூறு சதவிகிதம் உறுதியான நம்பிக்கை ஆகி விட்டது.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் கடைசி ஆண்டுகளில், என் பொறுப்பில் இருந்தது முறைக்கேடான சமுதாயம், சட்டத்தை மீறியவர்களின் சமுதாயம் என்று குறிக்கும் எல்லா வித எண்ணங்களையும் நான் தீவிரமாக எதிர்த்து வந்தேன். எனவே, இன்று நான் உங்களுக்கு விவரிக்கப் போகிற முடிவுகளும் உத்திகளும் முறையான குழந்தைப் பருவத் தினர் விஷயத்தில் கையாளத் தக்கவையே என்ற எனக்குத் தோன்றுகிறது.

கட்டுப்பாடு என்பது என்ன? நமது நடை முறையில் சில ஆசிரியர்களும் சில போதனை இயல் சிந்தனையாளர்களும் கட்டுப்பாடு போதனைச் சாதனம் என்று சில வேளைகளில் கூறுகிருர்கள். என் கருத்துப்படி, கட்டுப்பாடு போதனைச் சாதனம் அல்ல, போதனையின் விளைவு ஆகும். போதனைச்

சாதனம் என்ற நோக்கில் அது ஒழுங்கு முறையிலிருந்து நிச்சயமாக வேருனது. ஒழுங்குமுறையே போதனைக்கு உதவும் சாதனங்கள், வழிகளின் குறிப்பிட்ட தொகுப்பு. போதனையின் விளைவோ, கட்டுப்பாடு தான்.

கட்டுப்பாடு என்ற சொல்லை, அது புரட்சிக்கு முன் புரிந்து கொள்ளப்பட்டதைக் காட்டிலும் சற்று விரிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்று நான் யோசனை கூறுகிறேன். புரட்சிக்கு முந்திய பள்ளியிலும் புரட்சிக்கு முந்திய சமூகத்திலும் கட்டுப்பாடு வெளி நிகழ்ச்சியாக இருந்து வந்தது. இது அதிகாரம் செலுத்துவதன் வடிவமாக, தனித்தன்மையையும் தனி மனிதனின் சித்தத்தையும் தனி மனிதனின் முயற்சிகளையும் நசுக்குவதன் வடிவமாக இருந்து வந்தது. முடிவாக, இது ஓர் அளவுக்கு அதிகாரம் செலுத்தும் முறையாக, தனி மனிதனை ஆட்சியாளர்களுக்குக் கீழ்ப்படிய வைக்கும் முறையாக இருந்து வந்தது. பழைய ஆட்சியில் வாழ்ந்த, பல்வகைப் பள்ளிகளில் கற்ற நாம் அனைவரும் கட்டுப்பாடு என்பதை இவ்வாறே கருதிவந்தோம். ஆசிரியர்களும் கட்டுப்பாட்டை இப்படியே அர்த்தப்படுத்திக் கொண்டார்கள். சௌகரியத்துக்கு, ஒழுங்குக்கு, ஏதோ நலவாழ்வுக்கு, முற்றிலும் வெளிப்பாங்கான—ஒழுக்கநெறி வகையைவிட, பரஸ்பரத் தொடர்பு வகையைச் சேர்ந்த—நலவாழ்வுக்கு இன்றியமையாத சில கட்டாயமான கருத்துக்களின் தொகுப்பே கட்டுப்பாடு என்று எண்ணப்பட்டது.

நம்முடைய—சோவியத்—சமூகத்தில் கட்டுப்பாடு என்பது ஒழுக்கநெறியின் தன்மையும் அரசியல் தன்மையும் உள்ள நிகழ்ச்சி. ஆனால், கட்டுப்பாடு பற்றிய பழைய நோக்கை இப்போதும் கைவிட முடியாத சில ஆசிரியர்களை நான் காண்கிறேன். பழைய சமூகத்தில் கட்டுப்பாடு இல்லாதவன் ஒழுக்கநெறி பிறழ்ந்தவனாக, சமூக ஒழுக்கநெறியை மீறியவனாக எண்ணப்படவில்லை. உங்களுக்கு நினைவு இருக்கும், பழைய பள்ளியில் இம்மாதிரிக் கட்டுப்பாடின்மை நம்மாலும் நம் தோழர்களாலும் ஒரு வகை வீரம், ஒரு வகைச் சாதனை, அல்லது, குறைந்த பட்சம் நகைச்சுவை நிறைந்த, மகிழ்வூட்டும் நடிப்பு என்று கருதப்பட்டது. ஒவ்வொரு குறும்புத்தனமும் துடியான சுபாவத்தின் வெளிப்பாடு, அல்லது ஒரு வகைப் புரட்சித் தன்மையின் வெளிப்பாடு என்று

மாணவர்களால் மட்டும் அல்ல, ஆசிரியர்களாலும் எண்ணப் பட்டது.

நமது சமூகத்தில் கட்டுப்பாடின்மை சமூக விரோதமான நடவடிக்கை. கட்டுப்பாடு இல்லாதவன் சமூகத்துக்கு எதிராக நடப்பவன். இத்தகையவனை நாம் வெறும் வெளிப்பாங்கான, இயந்திர ரீதியான சௌகரியத்தின் நோக்கில் மட்டும் அல்ல, அரசியல் நோக்கிலும் ஒழுக்கநெறியின் நோக்கிலும் கூட ஆராய்கிறோம். கட்டுப்பாடு பற்றிய இந்த நோக்கு ஒவ்வொரு போதனை ஆசிரியனுக்கும் இருக்க வேண்டும். கட்டுப் பாடு போதனையின் விளைவு என்று கருதப்படும் போதே இது சாத்தியம் ஆகும்.

முதன்மையாக, நமது கட்டுப்பாடு உணர்வுபூர்வமான கட்டுப்பாடாக இருக்க வேண்டும். இது நமக்கு ஏற்கனவே தெரிந்தது தான். கட்டற்ற போதனை என்னும் சித்தாந் தம், குறைந்த பட்சம் கட்டற்ற போதனை பற்றிய போக்கு, விரிவான மக்களால் விரும்பப்பட்டு வந்த இருபதுக்களில், உணர்வுபூர்வமான கட்டுப்பாடு குறித்த இந்தச் சூத்திரம் விரிவாக்கப்பட்டது. கட்டுப்பாடு உணர்விலிருந்தே தோன்ற வேண்டும் என்று எண்ணப்பட்டது. இந்த எண்ணம் விபத்துக் கே வித்தாகும் என்பதை எனது ஆரம்ப அனுபவத்திலேயே நான் கண்டு கொண்டேன். அதாவது, ஒருவன் கட்டுப்பாட் டைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று அவன் மனதில் பதிய வைப்பதும் இந்த நம்பிக்கையின் உதவியால் கட்டுப்பாட் டை ஏற்படுத்த முடியும் என்று நம்புவதும் 50, 60 சதவிகிதம் வெற்றியை ஆபத்துக்கு உள்ளாக்குவதாக முடிந்தன.

கட்டுப்பாடு உணர்வினால் ஏற்பட முடியாது. ஏனென்றால் அது தனிப்பட்ட விசேஷ நடவடிக்கைகளின் விளைவு அல்ல, போதனை நிகழ்முறை அனைத்தினுடையவும் விளைவு ஆகும். கட்டுப்பாடு ஏற்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட சில விசேஷ முறைகளால் கட்டுப்பாட்டை ஏற்படுத்திவிடலாம் என்று நினைப்பது தவறு. கட்டுப்பாடு போதனைச் செல்வாக் கின் கூட்டு மொத்தத்தினுடைய விளைவு ஆகும். கல்வி கற்பிக்கும் நிகழ்முறை, அரசியல் போதனை நிகழ்முறை, சுபா வத்தைச் சீர்படுத்தும் நிகழ்முறை, சமுதாயத்தில் மோதல் களும் பூசல்களும் பூசல்கள் தீர்க்கப்படுவதுமான நிகழ்முறை, நட்பு, நம்பிக்கை நிகழ்முறை, போதனை அளிக்கும் நிகழ்

முறை அனைத்தும், உடற்பயிற்சி நிகழ் முறை, உடல் வளர்ச்சிப் போதனை நிகழ்முறை முதலியனவும் உட்பட, இந்தக் கூட்டு மொத்தத்தில் அடங்கும்.

பிரசாரம் ஒன்றினால் மட்டும், விளக்கி விவரிப்பது ஒன்றினால் மட்டும் கட்டுப்பாட்டை ஏற்படுத்தி விடலாம் என்று எதிர்பார்ப்பது மிக மிகப் பலவீனமான விளைவை எதிர்பார்ப்பது ஆகும்.

விவாதத் துறையில் கட்டுப்பாட்டின் அதி தீவிர எதிர்ப்பாளர்களை(மாணவர்கள் இடையே)நான் சந்திக்க நேர்ந்தது. கட்டுப்பாட்டின் இன்றியமையாமையைச் சொற்களால் அவர்களுக்கு நிரூபித்துக் காட்ட முயன்றால் அவையே போன்று துலக்கமான சொற்களையும் மறுப்பையும் அவர்களிடம் கேட்கலாம்.

ஆகவே, விவாதத்தின் உதவியாலும் அறிவுறுத்துவதன் வாயிலாகவும் கட்டுப்பாட்டை ஏற்படுத்தும் முயற்சி முடிவற்ற சொற் போர்களாக மாறிவிடக் கூடும். ஆயினும், பழைய கட்டுப்பாட்டிலிருந்து வேறான, ஒழுக்கநெறி, அரசியல் நிகழ்ச்சி என்ற முறையில் நமது கட்டுப்பாடு உணர்வோடு இசைந்திருக்க வேண்டும், அதாவது, கட்டுப்பாடு என்பது என்ன, எதற்காக அது தேவை என்னும் புரிவு கொண்டிருக்க வேண்டும் என்று நானே முதலில் வலியுறுத்துகிறேன்.

உணர்வுபூர்வமான இந்தக் கட்டுப்பாட்டை எந்த வழியில் அடைய முடியும்?...

நமது பள்ளியில் ஒழுக்கநெறிச் சித்தாந்தம் இல்லை. அப்படி ஒரு பாடம் இல்லை, இந்த ஒழுக்கநெறிச் சித்தாந்தத்தைப் போதிக்கும் அல்லது குறித்த பாடத் திட்டப்படி இந்த விஷயத்தைக் குழந்தைகளுக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்ட நபர் இல்லை.

புரட்சிக்கு முந்திய பள்ளியில் இறைஇயல் சட்டப் பாடம் நடந்தது. மாணவர்கள் மட்டும் அல்ல, அநேக பாதிரிகளும் இதை முழுமையாக ஏற்றுக்கொள்ள மறுத்து வந்தார்கள். இது மரியாதைக்கு உரியது அல்ல என்று அவர்கள் எண்ணி வந்தார்கள். ஆயினும் அதில் இருந்த பல ஒழுக்கநெறிப் பிரச்சினைகள் ஏதேனும் ஒரு விதத்தில் வகுப்புக்களில் சர்ச்சை செய்யப்பட்டன. இந்தச் சித்தாந்தம் ஏதேனும்

நற்பயன் விளைத்ததா இல்லையா என்பது வேறு விஷயம். ஆனால் ஒழுக்கநெறிப் பிரச்சினைகள் மாணவர்களுக்குச் சித்தாந்த ரீதியில் விளக்கப்பட்டன. அதாவது, ''திருடக் கூடாது, கொல்லக் கூடாது, பிறரை அவமதிக்கக் கூடாது, பெரியோருக்கு மரியாதை செய்ய வேண்டும், பெற்றோரை மதிக்க வேண்டும்'' என்று கூறப்பட்டது. கடவுள் நம்பிக்கையையும் மதப் பற்றையும் ஆதாரமாகக் கொண்டிருந்த ஒழுக்கநெறிப் பகுதிகள், கிறிஸ்தவ ஒழுக்கநெறிப் பகுதிகள் சித்தாந்த விளக்கத்தில் வெளிப்பட்டன. ஒழுக்கநெறிக் கோரிக்கைகள், வழக்கொழிந்த மத வடிவில்தான் என்றும் மாணவர்களுக்கு எடுத்து உரைக்கப்பட்டன.

ஒழுக்கநெறிச் சித்தாந்தத்தை விளக்குவது நமக்கும் இன்றியமையாதது என்ற உறுதி எனது நடைமுறை வேலையின் போது எனக்கு ஏற்பட்டது. நம்முடைய தற்காலப் பள்ளிகளில் இந்தப் பாடம் கிடையாது. போதிக்கும் சமுதாயம் இருக்கிறது, இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவன அமைப்பாளர்களும் முன்னோடிச் சிறுவர் தலைவர்களும் இருக்கிறார்கள். ஒழுக்கநெறி பற்றிய முறையான சித்தாந்தத்தை, பழகு முறை பற்றிய சித்தாந்தத்தை விரும்பினால் மாணவர்களுக்குக் கற்பிக்கும் வாய்ப்பு இவர்களுக்கு இருக்கிறது.

நமது பள்ளியின் வளர்ச்சிப் போக்கில் வருங்காலத்தில் நாம் கட்டாயமாக இத்தகைய வடிவத்தை மேற்கொள்வோம் என்று நான் நம்புகிறேன். என்னுடைய வேலைக் காலத்தில், திட்டவட்டமான வடிவத்தில், பாடத்திட்டத்தின் வடிவத்தில் ஒழுக்கநெறிச் சித்தாந்தத்தை என் மாணவர்களுக்குப் போதிப்பது எனக்குக் கட்டாயம் ஆகி விட்டது. இத்தகைய, ஒழுக்கநெறி என்ற பாடத்தை நடத்த எனக்கு உரிமை இல்லை. ஆனால் நானே சொந்தமாகத் தயாரித்த பாடத் திட்டம் என் முன் இருந்தது. பல்வேறு வாய்ப்புக்களைப் பயன் படுத்திக் கொண்டு பொதுக் கூட்டங்களில் என் மாணவர்களுக்கு இதை நான் விளக்கி வந்தேன்.

என்னுடைய சோதனையில் சித்தாந்த ரீதியான ஒழுக்க நெறி வகையைச் சேர்ந்த இத்தகைய உரையாடல்களின் சுருக்கங்களைத் தயாரித்து வைத்திருந்தேன். இந்தத் திசையில் என் வேலையை ஓரளவு செப்பம் செய்துகொள்ள எனக்கு

நேரம் கிடைத்தது. இந்த ஒழுக்கநெறிச் சித்தாந்தம் பெருத்த அளவில் மிகுந்த நற்பயன்கள் விளைத்ததைக் கண்டேன். கற்றறிந்தவர் என்றாலும் எவரோ பாதிரியாரின் போதனையால் பழைய பள்ளியில் ஏற்பட்ட விளைவுகளைக் காட்டிலும் ஒப்பிட முடியாத அளவு பெருத்த விளைவுகள் நான் பெற்றவை.

திருட்டு என்ற பிரச்சினையை எடுத்துக்கொள்வோம். நேர்மை பற்றிய சித்தாந்தத்தை, பிறருடைய பொருள்கள், தன்னுடைய பொருள்கள், அரசின் பொருள்கள் ஆகியவற்றின்பால் கடைப்பிடிக்க வேண்டிய போக்கு பற்றிய சித்தாந்தத்தை, மிக மிக நம்பிக்கை ஊட்டும் விதத்தில், கண்டிப்பான தர்க்க ரீதியில், உள்ளத்தில் ஆழப் பதியும் வகையில் விளக்கி விவரிக்கும் வாய்ப்பு நமக்கு இருக்கிறது. பொருள்கள் விஷயத்தில் நடந்து கொள்வது பற்றிய ஸ்தூலமான சித்தாந்தம், திருட்டு தடை செய்யப்பட்டிருப்பது பற்றிய சித்தாந்தம் முழுதும், திருடக் கூடாது என்பது பற்றிய பழைய சொல்லாடம்பரத்தைக் காட்டிலும் ஒப்பற்ற ஆற்றல் கொண்டிருக்கிறது. ஏனெனில், திருடக் கூடாது, திருடினால் கடவுள் தண்டிப்பார் என்ற பழைய தர்க்கம் அனேகமாக ஒருவருக்கும் நம்பிக்கை ஊட்டவில்லை. திருட்டு பற்றிய எண்ணத்தை அசைக்க அதனால் முடிந்ததே தவிர தடையாகச் செயல்பட முடியவில்லை.

தன்னடக்கம், பெண்கள் மீதும் குழந்தைகள் மீதும் முதியோர் மீதும் மரியாதை, சுயமரியாதை, சமூகம் முழுவதுடனும் அல்லது கூட்டு சமுதாயத்துடன் தொடர்புள்ள செயல்கள் பற்றிய சித்தாந்தம் அனைத்தும் நமது மாணவர்களுக்கு மிகவும் நம்பிக்கையூட்டும் விதத்தில், வன்மையுள்ள வடிவில் விளக்கப்பட முடியும்.

பழகுமுறை பற்றிய இந்தச் சித்தாந்தம், சோவியத் பழகுமுறை பற்றிய சித்தாந்தம், சமூக வாழ்வில், நமது சமூக நடைமுறையில், நமது உள்நாட்டுப் போரின் வரலாற்றில், நமது சோவியத் போராட்டத்தின் வரலாற்றில், சிறப்பாகக் கம்யூனிஸ்ட் கட்சியின் வரலாற்றில் ஏராளமான மெய் விவரங்களைக் கொண்டிருக்கிறது. எனவே, நடத்தை பற்றிய, ஒழுக்கநெறி பற்றிய சித்தாந்தம் போன்ற விஷயத்தை நம்முடைய மாணவர்களுக்கு எளிதாக, அழகாக, உள்ளத்தில்

பதியும் விதத்தில் விவரிக்க முடியும் என்று நான் எண்ணுகிறேன்.

இந்த ஒழுக்கநெறிச் சித்தாந்தம் எந்த சமுதாயத்துக்கு விவரிக்கப்படுமோ அது இதைக் கட்டாயம் முழுமையாகப் புரிந்து கொள்ளும் என்று நான் அழுத்திக் கூற முடியும். ஒவ்வொரு தனி சந்தர்ப்பத்திலும் ஒவ்வொரு தனி மாணவனும் ஒழுக்கநெறியின் கட்டாயமான சில வடிவங்களையும் சூத்திரங்களையும் தானே கண்டு கொள்வான் என்றும் நான் நம்புகிறேன்.

இத்தகைய ஒழுக்கநெறி பற்றிய ஒரே உரையாடலுக்குப்பின் என்னுடைய சமுதாயம் சில சந்தர்ப்பங்களிலும் பிரச்சினைகளிலும் எவ்வளவு விரைவாகவும் மகிழ்வுடனும் புத்துயிர் பெற்றது என்பது எனக்கு நினைவு இருக்கிறது. முழு உரையாடல் தொடர் எனது சமுதாயத்தில் தத்துவ நோக்கில் பெருத்த உளநலம் விளைத்தது.

ஒழுக்கநெறி பற்றிய இந்தச் சித்தாந்தத்தில் எந்தப் பொது வரையறுப்புக்கள் வாதமாகப் பயன்பட முடியும்?

பொது ஒழுக்கநெறி வரையறுப்புக்களின் பின்வரும் பட்டியலை நான் கடைப்பிடித்தேன். முதன்மையாக நமது அரசியல், ஒழுக்கநெறி நலவாழ்வின் வடிவம் என்ற முறையில் கட்டுப்பாடு சமுதாயத்திடம் கோரப்பட வேண்டும்.

வெளி நடவடிக்கைகள், உத்திகள் அல்லது தனி உரையாடல்கள் வாயிலாகக் கட்டுப்பாடு தானுகவே ஏற்பட்டு விடும் என்று எதிர்பார்ப்பது கூடாது. இல்லை, கட்டுப்பாட்டின் நோக்கம், கட்டுப்பாட்டின் குறிக்கோள், சமுதாயத்துக்கு நேரடியாக, தெளிவாக, திட்டவட்டமாக விளக்கப்பட வேண்டும்.

இந்த வாதங்களும் கட்டுப்பாடு பற்றிய கோரிக்கைகளும் குறித்த சந்தர்ப்பங்களில் தாமே தோன்றுகின்றன. கட்டுப்பாடு, சமுதாயத்தின் குறிக்கோளை யாவற்றிலும் சிறந்த முறையில் அடைவதற்கு ஏற்ற வடிவம் என்ற நம்பிக்கை முதன்மையாக ஒவ்வொரு மாணவனுக்கும் உண்டாக வேண்டும். தனது சமுதாயம் முழுதும் குறிக்கோளை அடைவது பற்றிய தர்க்கம், கட்டுப்பாடு இல்லாவிட்டால் சமுதாயம் தனது லட்சியத்தை நிறைவேற்ற முடியாது என்று வலியுறுத்தும் தர்க்கம், தெளிவாகவும் ஆவேசத்துடனும் விளக்கப்பட்டால்

(கட்டுப்பாடு பற்றிய உணர்ச்சி அற்ற விவாதங்களை நான் எதிர்க்கிறேன்), இந்தத் தர்க்கம், நடத்தை பற்றிய திட்ட வட்டமான சித்தாந்தத்தின், அதாவது, ஒழுக்கநெறி பற்றிய திட்டவட்டமான சித்தாந்தத்தின் முதலாவது அடிக்கல்லாக விளங்கும்.

இரண்டாவதாக, கட்டுப்பாடு ஒவ்வொரு தனிநபரையும், ஒவ்வொரு தனி மனிதனையும் அதிகப் பாதுகாப்பான, அதிக விடுதலை உள்ள நிலைமையில் வைக்கிறது என்று நமது கட்டுப்பாட்டின் தர்க்கம் வலியுறுத்துகிறது. கட்டுப்பாடே விடுதலை என்ற இந்த முரண்பட்ட கூற்றைச் சிறுவர்கள் மிக எளிதாகப் புரிந்து கொள்கிறார்கள். நடைமுறையில் சிறுவர்கள் இந்தக் கூற்றை நினைவுபடுத்திக் கொள்கிறார்கள். அது சரியே என்பது ஒவ்வோர் அடியிலும் அவர்களுக்கு உறுதிப்படுகிறது. கட்டுப்பாட்டுக்கு ஆதரவாக உற்சாகத்துடன் பேசுகையில், கட்டுப்பாடே விடுதலை என்று பலர் கூறுகிறார்கள்.

சமுதாயத்தில் கட்டுப்பாடு என்பது, சிறப்பாக ஒவ்வொரு தனிநபருக்கும் முழுமையான பாதுகாப்பு, தனது உரிமையிலும் வழிகளிலும் வாய்ப்புக்களிலும் முழுமையான நம்பிக்கை ஆகும்.

சந்தேகம் இன்றி, நமது சமூக வாழ்வில், நமது சோவியத் வரலாற்றில் இந்தக் கூற்றுக்கு மிகப் பல சான்றுகளைக் காணலாம். நமது புரட்சியே, நமது சமூகமே இந்த விதியை உறுதிப்படுத்தும் சான்றுகளாகத் திகழ்கின்றன. தனிநபர் விடுதலை பெறும் பொருட்டே நாம் புரட்சி செய்தோம். ஆனால் நமது சமூகத்தின் வடிவமாக விளங்குவது கட்டுப்பாடு தான்.

குழந்தைகள் சமுதாயத்தின் முன் வைக்க வேண்டிய பொது ஒழுக்கநெறிக் கோரிக்கைகளின் இரண்டாவது வடிவம் இது. பிற்பாடு ஒவ்வொரு தனிச் சச்சரவையும் தீர்க்க ஆசிரியனுக்கு இந்த வகைக் கோரிக்கை உதவியது. ஒவ்வொரு தனி சந்தர்ப்பத்திலும் கட்டுப்பாட்டை மீறியவன் சமுதாயத்தின் மற்ற உறுப்பினர்களின் நலன்களுக்குக் கேடு செய்வதாகவும் அவர்கள் உரிமையால் பெற்றுள்ள விடுதலையைப் பறிப்பதாகவும் என்றால் மட்டும் இன்றி, சமுதாயம் அனைத்தாலும் குற்றம் சாட்டப்பட்டான்.

என் பொறுப்பில் இருந்த அகதிகளும் சட்டத்தை மீறியவர்களும் கணிசமான எண்ணிக்கையில் கட்டுப்பாடு இல்லாத குழந்தைகள் சமூகத்தில் இருந்தவர்கள். இம்மாதிரிக் கட்டுப்பாடற்ற வாழ்க்கையின் துன்பங்கள் எல்லாவற்றையும் அவர்கள் தாங்களே அனுபவித்திருந்தார்கள். ஒரு சில தலைவர்களின் ஆதிக்கம் இந்தத் துன்பங்களில் ஒன்று. இவர்கள் வயதில் மூத்த, அதிக வலிமை உள்ள அகதிகள். சிறுவர்களைத் திருடவும் காலித்தனம் செய்யவும் இவர்கள் அனுப்பினார்கள், இந்தச் சிறுவர்களைச் சுரண்டினார்கள். கட்டுப்பாடற்ற நிலைமையால் துன்பப்பட்டிருந்த இந்தச் சிறுவர்களுக்குக் கட்டுப்பாடு உண்மையிலேயே விமோசனம் அளித்தது, உண்மையிலேயே மனிதத் தன்மையின் மலர்ச்சிக்கு ஏற்ற நிலைமை ஆயிற்று. ஒருவேளை இந்தக் காரணத்தினால்தான் அவர்கள் கட்டுப்பாட்டை அவ்வளவு தீவிரமாக ஆதரித்தார்கள் போலும்.

சிறுவன் கட்டுப்பாடு உள்ள சூழலுக்கு வந்ததன் பயனாகக் கணப்போதில் புத்துயிர் பெற்ற மிகச் சுவையான நிகழ்ச்சிகளை நேரம் இருந்தால் உங்களுக்கு விவரித்திருப்பேன். இப்போது நான் ஒரு நிகழ்ச்சியை மட்டும் கூறுகிறேன்.

1932ம் ஆண்டில், உள்துறை மக்கள் கமிஸாரகத்தின் உத்தரவுப்படி, ஹார்க்கவ் ரயில் நிலையத்தில் அவ்வழியே சென்ற விரைவு ரயில்களிலிருந்து ஐம்பது அகதிகளை நான் என் பொறுப்பில் எடுத்துக்கொண்டேன். அவர்கள் அப்போது மிகவும் துன்ப நிலையில் இருந்தார்கள். நான் அவர்களை வெவ்வேறு ரயில் வண்டிகளிலிருந்து, முதன்மையாகக் காக்கேஷியாவிலும் கிரிமியாவிலுமிருந்து வந்த வண்டிகளிலிருந்து திரட்டினேன். ஆயினும் அவர்கள் ஒருவரை ஒருவர் அறிந்திருந்தார்கள், இனங்கண்டுகொண்டார்கள். இது என்னை வியப்பில் ஆழ்த்தியது. அவர்கள் ''சுகாதார ஸ்தல சமூகத்தினர்''. வெவ்வேறு திசைகளில் பிரிந்து போவதும், சந்திப்பதும் கடந்து செல்வதுமாக இருந்தவர்கள். அவர்களுக்குள் எவையோ உள் தொடர்புகள் இருந்தன.

இந்த ஐம்பது பெயரையும் நான் கம்யூனுக்கு இட்டு வந்து, கழுவிக் குளிப்பாட்டி, முடி வெட்டிச் சீர்படுத்தினேன். மறு நாளே இவர்கள் தங்களுக்குள் அடித்துக் கொள்ளத் தொடங்கினார்கள். அவர்களுக்கிடையே எத்தனையோ கணக்குகள்

தீர வேண்டி இருந்தது. ஒருவன் இன்னொருவனுடைய பொருளைத் திருடினான், இன்னொருவன் அவமதித்தான், மூன்று மவன் கொடுத்த வாக்கைக் காப்பாற்றவில்லை. ஐம்பது பெயர் கொண்ட இந்தக் குழுவில் தலைவர்களும் சுரண்டுவோரும் ஆட்சி அதிகாரம் படைத்தவர்களும் சுரண்டப்படுவோரும் நசுக்கப் படுவோரும் இருந்ததை நான் உடனே கண்டுகொண் டேன். இதை நான் மட்டும் அல்ல, என் கம்யூன்காரர்களும் தெரிந்து கொண்டார்கள். இந்த ஐம்பது பெயரையும் ஒன்று சேர்த்து இவர்களைச் சிறிய தனி சமுதாயமாக அமைக்க முயன்றது தவறு என்பதை நாங்கள் கண்டு கொண்டோம்.

மறு நாள் மாலை நாங்கள் அவர்களை மற்ற நானூறு கம்யூன் உறுப்பினரிடையே பிரித்து வைத்தோம். அதிகத் தீயவர்களை வலுவான குழுவிலும் சற்று மென்மையானவர் களை வலுகுறைந்த குழுவிலுமாக வைத்தோம்.

சந்தித்த சமயங்களில் அவர்கள் முந்திய கணக்குக்களைத் தீர்க்க முயன்றதை ஒரு வாரம் வரை நாங்கள் கவனித்தோம். சமுதாயத்தின் வற்புறுத்தலால் இந்தப் பழி வாங்கும் நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டன. ஆனால் சில பையன்கள் தங்களை விட பலசாலிகளான பகைவர்களுடன் கணக்குத் தீர்த்துக்கொள்ள முடியாத நிலைமையில் இருந்த காரணத் தால் கம்யூனை விட்டு ஓடிவிட்டார்கள்.

இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவனத்தில் நாங்கள் இந்தப் பிரச்சினையை அழுத்தமாக விவாதித்தோம். கட்டுப்பாடு அற்ற இந்த வாழ்க்கையின், கட்டுப்பாடு இல்லாமையால் தனி நபர்கள் படும் இந்தத் துன்பத்தின் மிகப் பல விவரங்களை எடுத்துச் சொன்னோம். அதோடு, இந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு, கட்டுப்பாடு தனிநபரின் விடுதலை யாக விளங்குகிறது என்ற ஒழுக்கநெறிக் கோட்பாட்டை விளக்கி ஒரு பிரசார இயக்கமே நடத்தி விட்டோம். இந்தக் கோட்பாட்டைப் பெருத்த ஆவேசத்துடனும் நம்பிக்கை யுடனும் கண்ணீர்ப் பெருக்குடனும் உறுதிப்படுத்திப் பேசிய வர்கள், நான் ஹார்க்கவ் ரயில் நிலையத்திலிருந்து இட்டு வந்த புதிய சிறுவர்களே... கட்டுப்பாடு இல்லாத நிலையில் வாழ்வது எவ்வளவு கடினமானது என்று அவர்கள் விவரித் தார்கள். கட்டுப்பாடு என்பது என்ன என்று இந்த இரண்டு

வாரப் புது வாழ்வில் சொந்த அனுபவத்திலிருந்து தெரிந்து கொண்டதாகக் கூறினார்கள்.

நாங்கள் இந்தப் பிரசார இயக்கத்தைத் தொடங்கி, விவாதம் நடத்தியதால்தான் இவ்வாறு நிகழ்ந்தது. நாங்கள் இதைப் பற்றிப் பேசாதிருந்தால், இந்தச் சிறுவர்கள் கட்டுப் பாடற்ற வாழ்க்கையின் துன்பத்தை முழுவதும் உணர்ந்தாலும் இவ்விஷயத்தைப் புரிந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

அகதிச் சமூகத்தின் அராஜகத்தால் துன்பம் உழன்ற இத்தகைய குழந்தைகளில் பலர், எங்கள் கம்யூனில் கட்டுப் பாட்டை மிகத் தீவிரமாக ஆதரிப்பவர்களாக, மிக ஆவேசத்துடன் அதன் தரப்பில் வாதிப்பவர்களாக, மிக ஈடுபாட்டுடன் அதைப் பிரசாரம் செய்பவர்களாக மலர்ந்தார்கள். போதனை சமுதாயத்தில் என் வலக் கரமாகப் பணி ஆற்றிய எல்லாச் சிறுவர்களையும் நான் நினைவுபடுத்திக் கொண்டால், அவர்கள் கட்டுப்பாடற்ற சமூகத்தின் அராஜகத்தால் தங்கள் வாழ்வில் மிக அதிகமாகத் துன்பப்பட்ட குழந்தைகளே என்பதைக் காண்கிறேன்.

சமுதாயத்துக்குக் கட்டாயமாக விளக்க வேண்டிய மூன்றுவது ஒழுக்கநெறிச் சித்தாந்த வாக்கியம், சமுதாயத்தின் நலன்கள் தனி மனிதனின் நலன்களை விட மேலானவை என்பது ஆகும். இந்தக் கருத்து சமுதாயத்துக்கு எப்போதும் தெரிந்திருக்க வேண்டும், கட்டுப்பாடு கடைப்பிடிக்கப்படுவதற்கான போராட்டத்தில் அதற்கு எப்போதும் வழி காட்ட வேண்டும். இந்தச் சூத்திர வாக்கியம் சோவியத் குடிகளான நமக்கு முற்றிலும் புரியக் கூடியதே என்று தோன்றும். ஆனால் நடைமுறையில், அறிவாளிகளும் கற்றோரும் பண்பாளர்களும் ஆன மிகப் பலருக்கு, சமூகப் பண்பாடு உள்ளவர்களுக்குக் கூட, இது விளங்குவதே இல்லை.

தனி மனிதன் சமுதாயத்துக்கு எதிராகச் செயல்படும் சந்தர்ப்பங்களில், சமுதாயத்தின் நலன்கள் தனி மனிதனின் நலன்களைவிட மேலானவை என்று நாம் வலியுறுத்துகிறோம்.

ஆனால் நடைமுறை நிகழ்ச்சி எதிர்ப்படும் போது, விஷயம் அடிக்கடி நேர் எதிராகவே தீர்க்கப்படுகிறது.

என் வாழ்க்கையில் இம்மாதிரிச் சிக்கலான சந்தர்ப்பம் நேர்ந்தது. த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் இறுதி ஆண்டுகளில் போதனை ஆசிரியர்கள் இல்லை. பள்ளி ஆசிரியர்களே வேலை

செய்து வந்தார்கள். சமுதாயத்தில் தனிப்பட்ட போதனையாளர்கள் இல்லை. போதனை வேலை அனைத்தையும் முது நிலைக் கம்யூன் உறுப்பினர்கள், முதன்மையாக இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்தினர் நடத்தி வந்தார்கள். சமுதாயத்தின் அமைவு இதற்கு உதவியாய் இருந்தது. சமுதாயம் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவுக்கும் தலைமையில் இருந்தான் கமாண்டர். நாள் முழுவதிலும் சமுதாயம் செய்யும் வேலை அனைத்திற்கும்—துப்புரவு, சாப்பாடு, விருந்தினர் வரவேற்பு, ஒழுங்கு, சுத்தம், பள்ளி வேலை, உணவுப் பண்டங்களை வாங்கி வைப்பது, உற்பத்தி, எல்லாவற்றுக்கும்—இந்தக் கமாண்டர்களில் ஒருவன் பொறுப்பாளியாக இருந்தான். அவன் முறைவேலைக் கமாண்டர் என்று அழைக்கப்பட்டான், அடையாளப் பட்டித்துணி கட்டியிருந்தான், பெருத்த அதிகாரம் பெற்றிருந்தான். அன்றாட வேலைகளை ஒரு நபர் தலைமையில் நடத்துவதற்கு இந்த அதிகாரம் அவனுக்குத் தேவைப்பட்டது. அவனுடைய உத்தரவுகள் மறு பேச்சு இன்றி நிறைவேற்றப் பட வேண்டும் என்பது இந்த அதிகாரத்தின் சாரம். தன்னுடைய எல்லா உத்தரவுகளுக்கும் விளக்கம் அவன் மாலையில்தான் தர முடிந்தது. உட்கார்ந்தவாறு அவனோடு பேச ஒருவருக்கும் உரிமை இல்லை, நின்று கொண்டு தான் பேச வேண்டியிருந்தது. எந்த வடிவத்திலும் அவனுக்கு மறுப்புக் கூற ஒருவருக்கும் உரிமை இல்லை. மரியாதைக்குரிய, தகுதி வாய்ந்த தோழனே வழக்கமாக முறைவேலைக் கமாண்டராகப் பணி ஆற்றினான். அவனோடு எவ்வித மோதல்களும் ஏற்படவில்லை.

ஒரு தடவை முறைவேலைக் கமாண்டராக இருந்தான் ஒரு சிறுவன். அவன் பெயர் இவனோவ் என்று வைத்துக் கொள்வோம். அவன் இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்தினன், பிரபல பண்பாட்டுத் துறை ஊழியர்களில் ஒருவன், நாடகக் குழு உறுப்பினன், நல்ல உற்பத்தித் தொழிலாளி. எல்லோருடைய மதிப்பையும், என்னுடைய மதிப்பையும்தான், பெற்றிருந்தான். வயதில் மூத்த அகதிகளில் அவன் ஒருவன். சட்ட விரோதமான செயல்களிலும் நாடோடி வாழ்க்கையிலும் நிரம்ப அனுபவம் பெற்றவன். ஸிம்பெரோப்பல் என்னும் இடத்தில் நான் அவனைக் கண்டு கம்யூனுக்கு அழைத்து வந்திருந்தேன்.

மெஸியாக் என்னும் பையன் அப்போதுதான் வாங்கியிருந்த வானொலிப் பெட்டி திருட்டுப் போய் விட்டது என்று மாலையில் அறிக்கை செய்து கொள்ளும் நேரத்தில் இந்த முறைவேலைக் கமாண்டர் என்னிடம் தெரிவித்தான். மெஸியாக் எழுபது ரூபிள்கள் கொடுத்து அந்த வானொலிப் பெட்டியை விலைக்கு வாங்கியிருந்தான். கம்யூனில் அதுதான் முதல் வானொலிப்பெட்டி. தனது சம்பளத்தில் ஆறு மாதங்களாக மிச்சம் பிடித்து இந்தத் தொகையைச் சேர்த்திருந்தான் அவன். வானொலிப் பெட்டி உறங்கறையில் கட்டில் அருகே வைக்கப்பட்டிருந்தது, அங்கிருந்து காணுமல் போய்விட்டது. கம்யூனில் பூட்டுக்கள் தடை செய்யப்பட்டிருந்ததால் உறங்கறை பூட்டப்படவில்லை. ஆனால் பகலில் அங்கே போவது அனுமதிக்கப்படவில்லை. கம்யூன் உறுப்பினர்கள் வேலை செய்து கொண்டிருந்தமையால் அங்கே போயிருக்க முடியாது.

என் யோசனையின் பேரில் பொதுக் கூட்டம் கூட்டப்பட்டது. வானொலிப் பெட்டி எங்கே போயிருக்க முடியும் என்ற விஷயம் குறித்துப் பேச்சைத் தொடங்கினன் முறைவேலைக் கமாண்டர். அவன் மிக சாமர்த்தியமாகப் பேசினன். யாராவது கருவிகளுக்காக உறங்கறைக்குள் போயிருக்கலாம் என்றுன். சில சந்தேகங்களை வெளியிட்டான். விசாரணைக் குழுவைத் தேர்ந்தெடுக்கும்படி யோசனை சொன்னன். இந்த விவகாரம் முடிவுவரை தெளிவுபடுத்தப் படுவது அவசியம் என்று பொதுக் கூட்டத்தை வற்புறுத்தினன். மெஸியாக் மேல் எல்லோருக்கும் இரக்கம் உண்டாயிற்று. தவிர, ஒருவன் சம்பளத்தில் மிச்சம் பிடித்து ஆறு மாதங்களாகச் சேர்த்த பணத்தைக் கொண்டு வாங்கிய பொருள் திருடப்பட்ட செயல் கம்யூன்காரர்களுக்குக் கலவரம் ஊட்டியது. எனவே முறைவேலைக் கமாண்டரின் யோசனைக்குப் பொதுக் கூட்டம் இணங்கியது.

ஆனல் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. இந்த நிலையில் எல்லோரும் உறங்கச் சென்றுர்கள். மெஸியாக் என்பவன் பன்னிரண்டு வயதுச் சிறுவன்.

மறு நாள் காலை சில முன்னேடிச் சிறுவர்கள் என்னிடம் வந்து, தாங்கள் ஐந்து மணிக்கு எழுந்திருந்து கம்யூன் முழுவதிலும் சோதனை போட்டு, நாடக மன்றத்தில், அரங்குக்கு அடியில் வானொலிப் பெட்டியைக் கண்டதாகச் சொன்னர்

கள். அங்கே என்ன நடக்கிறது என்று பார்க்கும் பொருட்டுத் தங்களுக்கு வேலையிலிருந்து விடுமுறை அளிக்கும்படி கேட்டார்கள்.

பகல் பூராவும் அவர்கள் அங்கே நின்றார்கள். பிறகு என்னிடம் வந்து, வானொலிப் பெட்டியைத் திருடியவன் இவனேவ் தான் என்று நேரடியாகக் கூறினார்கள். நினைவூட்டுபவன் அறைப்பக்கம் இவனேவ் பல முறை போனதையும் அங்கே நின்று எதையோ கேட்டதையும் தாங்கள் கண்டதாகச் சொன்னார்கள். வேறு சான்றுகள் எவையும் அவர்களிடம் இல்லை. அன்று இவனேவ் முறைவேலைக் கமாண்டராய் இல்லை என்றாலும் நாடக அரங்கில் நினைவூட்டுபவன் அறை அருகே நின்று எதையோ கேட்டுக் கொண்டிருந்தான் என்ற ஒரு சான்றுதான் இருந்தது.

நான் திடீர்த் தாக்கு நடத்தினேன். இவனேவை அழைத்து, ''வானொலிப் பெட்டியை நீ தான் திருடினாய். மறு பேச்சுக்கு இடமில்லை!'' என்றேன்.

அவன் வெளிறிப் போய் நாற்காலியில் உட்கார்ந்தான்.

''ஆமாம், நான்தான் திருடினேன்'' என்றான்.

இந்த நிகழ்ச்சி இளங் கம்யூனிஸ்டுகளின் கூட்டத்தில் விவாதிப்பதற்குரிய விஷயம் ஆயிற்று. இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவனம் இவனேவைச் சங்கத்திலிருந்து நீக்கி விவகாரத்தைக் கம்யூன் உறுப்பினர்களின் பொதுக் கூட்டத்தின் முடிவுக்காக அனுப்பியது. பொதுக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த சிறுவன் ''ராபஸ்பியர்''* என்று அழைக்கப்பட்டான், ஏனென்றால், அவன் எதற்கெடுத்தாலும் சொல்லும் யோசனை, கம்யூனிலிருந்து வெளியேற்றிவிட வேண்டும் என்பதுதான். இந்தத் தடவையும் வெளியேற்றுவது என்றே தீர்மானிக்கப்பட்டது, ஆனால் உண்மையிலேயே வெளியே தள்ளுவது—கதவைத் திறந்து இவனேவைப் படிக்கட்டில் நெட்டித் தள்ளுவது—என்று முடிவு செய்யப்பட்டது.

நான் வெளியேற்றுவதை ஆட்சேபித்தேன். ''உன்னையுந் தான் வெளியேற்ற விரும்பினார்கள், உன்னையும் விரட்டத்

---

* **ராபஸ்பியர்** மாக்ஸிமிலியன் மரீ இஸிதோர் (1758-94)—18ம் நூற்றாண்டின் இறுதியில் நடந்த பிரெஞ்சு பூர்ஷ்வாப் புரட்சித் தலைவர்.—**ப-ர்.**

தீர்மானித்தார்கள்'' என்று எத்தனையோ சந்தர்ப்பங்களை நினைவுபடுத்தினேன். ஆனால் என் முயற்சி பலிக்கவில்லை.

உள்துறைக் கமிஸாரகத்துக்கு போன் செய்து, இவனேவைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுவது என்று பொதுக் கூட்டம் முடிவு செய்திருப்பதைத் தெரிவித்தேன். இந்த முடிவைத் தாங்கள் உறுதிப்படுத்தவில்லை என்றும் இதை ரத்து செய்ய நான் முயல வேண்டும் என்றும் கமிஸாரகத்தினர் கூறினார்கள்.

கம்யூன் உறுப்பினரிடையே எனக்கு மிகப் பெருத்த செல்வாக்கு இருந்தது. நான் விரும்பியதை எல்லாம், சில வேளைகளில் கடினமான செயல்களைக் கூட, என்னால் நிறைவேற்ற முடிந்தது. இந்த விஷயத்திலோ, நான் ஒன்றும் செய்ய முடியவில்லை. கம்யூன் வாழ்க்கையில் முதல் முறையாகப் பையன்கள் எனக்கு வாய்ப்பூட்டு போட்டு விட்டார்கள்.

''அந்தோன் ஸெம்யோனவிச், நீங்கள் பேசுவதற்குத் தடை விதிக்கிறோம்!''

அவ்வளவுதான். ஆயினும், உள்துறைக் கமிஸாரகம் உறுதிப்படுத்தும் வரை இவனேவை வெளியேற்ற அவர்களுக்கு உரிமை இல்லை என்று நான் சொல்லித் தீர்த்தேன். எனது இந்தக் கருத்துக்கு அவர்கள் இசைந்தார்கள். விஷயம் மறு நாளுக்குத் தள்ளிப் போடப் பட்டது. மறு நாள் உள்துறைக் கமிஸாரக அதிகாரிகள் வருவார்கள், அவர்கள் முன்னிலையில் தீர்மானம் உறுதி செய்யப்படும் என்று முடிவு செய்தார்கள்.

நான் கண்டனத்துக்கு உள்ளானேன். தீர்மானத்தை ரத்து செய்ய முடியாததற்காக அதிகாரிகள் என்னைக் கடிந்து கொண்டார்கள். மறு நாள் சில பிரபல உள்துறை அதிகாரிகள் கம்யூனுக்கு வந்தார்கள்.

''நீங்கள் எதற்காக வந்தீர்கள்? இவனேவைத் தாங்கிப் பேசுவதற்காகவா?'' என்று பையன்கள் அவர்களிடம் கேட்டார்கள்.

''இல்லை, நியாயம் பெறுவதற்காக.''

அதன்பின் கம்யூன் உறுப்பினர்களுக்கும் உள்துறை அதிகாரிகளுக்கும் இடையே கட்டுப்பாடு பற்றி விவாதம் நடந்தது. இந்த முக்கியப் பிரச்சினையை முறைப்படுத்து

வதற்கு ஏற்ற அடிப்படையாக இப்போதும் இந்த விவாதம் எனக்குப் பயன்படக் கூடும்.

பொதுக் கூட்டத்தில் உள்துறை அதிகாரிகள் பேசியதன் உள்ளடக்கம் வருமாறு:

''உங்கள் தீர்மானத்தால் நீங்கள் காட்ட விரும்புவது என்ன? இவனேவ் உங்கள் முன்னணி உறுப்பினன், செயலூக்கம் உள்ளவன். நீங்கள் அவனை நம்பினீர்கள். கம்யூனை அவன் பொறுப்பில் நம்பி விட்டீர்கள். அவனுடைய உத்தரவுகளை மறு பேச்சு இல்லாமல் நிறைவேற்றினீர்கள். இப்போது, அவன் ஒரு தரம் திருடிவிட்டான் என்பதால், அவனை வெளியேற்றுகிறீர்கள். எதற்காக? அவன் எங்கே போவான்? அவன் நடுத் தெருவில் நிற்பான். இதன் அர்த்தம் என்ன? கொள்ளைக்காரன் ஆவான்! இவனேவைத் திருத்த முடியாதா உங்களால்? நீங்கள் அவ்வளவு பலவீனமானவர்களா?''

தவிர, ''கொள்ளைக்காரன்'' இவனேவ், நாள் முழுதும் அழுதரற்றினன், துடிதுடித்தான்.

இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்தார் அவனை அசட்டை செய்தார்கள். மருத்துவர்கள் தாம் அவனைத் தேற்றினர்கள்.

''பாருங்கள், இவன் நோயாளி. நீங்கள் இவ்வளவு வலிவான சமுதாயத்தினர். எத்தனையோ பெயரைச் சீர்திருத்தி இருக்கிறீர்கள். இவன் உங்களைக் கெடுத்துவிடுவான் என்று அஞ்சுகிறீர்களா என்ன? நீங்கள் நானூற்று ஐம்பத்தாறு பெயர். இவனே ஒருவன்!'' என்றனர்கள்.

இவை நெஞ்சில் பாயும் வாதங்கள், பயங்கரமான தர்க்கம் இது.

கம்யூன்காரர்கள் அவ்வளவு அனுபவம் இல்லாதவர்கள் தாம். ஆனால் தங்கள் சமுதாயத்துக்குப் பொறுப்பு உள்ளவர்கள், அதே ''ராபஸ்பியரும்'' பிறரும். இந்த இளம் சிறுவர்கள் இந்த வாதங்களுக்குப் பின்வருமாறு பதில் அளித்தார்கள்:

''இவனேவ் உருப்படாமல் போவான் என்றால் சரிதான். உருப்படாமல் போகட்டும். அவன் ஒன்றைத் திருடினன் என்றால் ஒரு விஷயம். ஆனால் அவன் முறைவேலைக் கமாண்டராய் இருந்தானே. நாங்கள் கம்யூனை அவன் பொறுப்பில் விட்டிருந்தோமே. அவன் பொதுக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தான். உங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லுங்கள்

என்று எங்களைத் தூண்டித் துளைத்தான். இது திருட்டு அல்ல. இவன் ஒருவன் துடுக்காக, நெஞ்சீரம் இல்லாமல், வெட்கம் ,இன்றி எல்லோருக்கும் எதிராக நடந்து கொண்டான். எழு பது ரூபிள்களுக்கு ஆசைப் பட்டு எங்கள் எல்லோருக்கும் எதிராகச் சென்றான். தன் சம்பளத்தில் மாதம் பத்து ரூபிள் வீதம் மிச்சம் பிடித்துப் பல மாதங்கள் சேர்த்த பாவம் மெஸியாக்குக்கு எதிராக நடந்து கொண்டான். அவன் உருப்படாமல் போனால் எங்களுக்கு அவன்மேல் இரக்கம் இல்லை!

''இரண்டாவதாக, நாங்கள் இவனைச் சரிப்படுத்தி விடு வோம் என்பதில் சந்தேகம் இல்லை. நாங்கள் பயப்படவில்லை. ஆனால் இதில் எங்களுக்கு அக்கறை இல்லை. நாங்கள் இவனை வெளியேற்ற முடியும் என்பதால்தான் இவனைச் சரிப்படுத்த எங்களுக்கு இயலும். இவனை நாங்கள் வெளியேற்றவில்லை, அடுத்தவனையும் வெளியேற்றவில்லை என்றால் எங்கள் சமுதா யம் தன் ஆற்றலை இழந்து விடும். அப்புறம் எவனையும் சரிப் படுத்த எங்களால் முடியாது. நாங்கள் இவனை வெளியேற்று கிறோம், ஆனால் இவன் போன்றவர்கள் எங்கள் சமுதாயத்தில் எழுபது பெயர் இருக்கிறார்கள். இவனை வெளியேற்றுவதால் தான் அவர்களை எங்களால் சரிப்படுத்த முடியும்!''

''ஆனாலும் நீங்கள் சமுதாயத்தின் ஓர் உறுப்பினனை இழக்கிறீர்கள். உங்கள் சமுதாயம் கறைப்பட்டு விட்டது. இவன் அழிந்து போவான்'' என்று உள்துறை அதிகாரிகள் கூறினார்கள்.

கம்யூன்காரர்கள் அவர்கள் கூற்றை மறுத்தார்கள்: ''அந்தக் கம்யூனைப் பாருங்கள், இன்னொரு கம்யூனைப் பாருங் கள். அவற்றில் கட்டுப்பாடு இல்லை. ஆண்டுதோறும் அவை எவ்வளவு இழக்கின்றன! அவற்றிலிருந்து ஆண்டுதோறும் ஐம்பது சதவிகிதம் பெயர் ஓடிவிடுகிறார்கள். இதன் அர்த்தம் என்ன? நாங்கள் கட்டுப்பாட்டை இவ்வளவு கடுமையாக வலியுறுத்துவதால் இழப்பு குறையும். இவனை இழக்க நாங்கள் தயார், ஆனால் மற்றவர்களைச் சரிப்படுத்தி விடுவோம்.''

விவாதம் நெடுநேரம்,நள்ளிரவு வரை,நடந்தது.முடிவில் கம்யூன்காரர்கள் மறுப்பதை நிறுத்தினார்கள், உள்துறை அதிகாரிகளின் நல்ல பேச்சுக்களைக் கைதட்டிப் பாராட்ட

வும் செய்தார்கள். ஆனால் வாக்கெடுக்கும் நேரம் வந்து, ''இவனை வெளியேற்றப்படுவதை ஆதரிப்பவர்கள் யார்?'' என்று தலைவர் கேட்டதும் எல்லோரும் ஒரே சமயத்தில், கைகளை உயர்த்தினார்கள். உள்துறை அதிகாரிகள் மீண்டும் பேச அனுமதி கேட்டார்கள், மறுபடி வாதாடினார்கள். அவர்கள் முகங்களில் புன்னகை தவழ்ந்ததை நான் கண்டேன். எப்படியும் இவனை வெளியேற்றப்படுவான் என்று அவர்கள் அறிந்திருந்ததை இந்தப் புன்னகை காட்டியது. இரவு பன்னிரண்டு மணிக்குப் பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது: ''தலைக்கு நாள் முடிவு செய்தது போலவே கதவைத் திறந்து படிக்கட்டில் தள்ளிவிட வேண்டும்.'' மெய்யாகவே கழுத்தைப் பிடித்துக் தள்ளாமல், காவலுடன் ஹார்க்கவுக்கு அனுப்புவதற்குக் கம்யூன்காரர்களை இசைய வைத்ததுதான் எங்களால் முடிந்த ஒரே காரியம்.

அப்படியே வெளியேற்றி விட்டார்கள். ஒருவருக்கும் தெரியாமல் இவனை வேறு காலனிக்கு அனுப்ப நானும் மற்றவர்களும் பிறகு ஏற்பாடு செய்தோம். ஓர் ஆண்டுக்குப் பின் கம்யூன்காரர்களுக்கு இந்த விஷயம் தெரிய வந்தது. ''பொதுக் கூட்டத்தின் தீர்மானத்தை நீங்கள் எப்படி மீறினீர்கள்? நாங்கள் வெளியேற்றத் தீர்மானித்தோம், நீங்கள் அவனுக்குப் பரிந்து உதவினீர்களே, ஏன்?'' என்று என்னிடம் கேட்டார்கள்.

இந்த நிகழ்ச்சி என் சிந்தனையைத் தூண்டியது. சமுதாயத்தின் நலன்கள் தனி நபரின் நலன்களுக்கு எந்த எல்லைவரை முற்பட்டிருக்க வேண்டும் என்று நெடு நேரம் எண்ணமிட்டேன். சமுதாயத்தின் நலன்களுக்கு முதன்மை அளிப்பது முடிவு வரையில், இரக்கமற்ற முடிவுவரையில் கூட, கடைப்பிடிக்கப்பட வேண்டும்—அவ்வாறு செய்தால் தான் சமுதாயத்துக்கும் தனி மனிதனுக்கும் உண்மையான போதனை கிடைக்கும்—என்று இப்போது நான் நினைக்கிறேன்.

இந்த விஷயம் குறித்து நான் இன்னும் பேசுவேன். இப்போது ஒன்றை மட்டும் சொல்லிவிடுகிறேன். இந்த இரக்கமற்ற முடிவு தர்க்கரீதியில் மட்டுமே இரக்கம் அற்றதாக இருக்க வேண்டும். ஸ்தூல நோக்கில் அது இரக்கம் அற்றதாக இருக்கவே முடியாது. சமுதாயத்தின் நலன்கள் தனிநபரின் நலன்களுக்கு முற்பட்டு இருக்கும் வகையிலும் அதே சமயம்

தனி நபர் துன்பம் மிக்க, அழிவு விளைக்கும் நிலையில் அகப்பட்டுக் கொள்ளாத விதத்திலும் இரக்கமின்மை உத்தி கையாளப்பட வேண்டும்.

கடைசியாக, நான்காவது சூத்திர வாக்கியம், கட்டுப் பாடு சமுதாயத்தை அழகுபடுத்துகிறது என்பதாகும். இது தூய சித்தாந்த வடிவில் குழந்தைகளுக்கு விளக்கி உருவேற் றப் பட வேண்டும். கட்டுப்பாட்டின் இந்த அம்சம்—கட்டுப் பாட்டின் வனப்பு, கட்டுப்பாட்டின் அழகியல், மிக முக்கிய மானது. நான் அறிந்தவரையில் நம்முடைய குழந்தைகளின் சமுதாயங்களில் இந்த விஷயத்தில் அவ்வளவாக முயற்சி எடுத்துக்கொள்ளப் படுவதில்லை. நமது சமுதாயங்களில், அகதிகளின் பேச்சில் சொன்னால், ''அலுப்புத் தட்டும்'', சலிப்பூட்டும் கட்டுப்பாடு சில வேளைகளில் நிலவுகிறது. வாய் ஓயாமல் பேசுவதன் மூலம், ஓட ஓட விரட்டுவதன் மூலம், இடையறுப் பேச்சால் சலிப்பு ஊட்டுவதன் மூலம் கட்டுப் பாடு ஏற்படுத்தப்படுகிறது. கட்டுப்பாட்டை இனியதும் கவர்ச்சியும் உயிர்த் துடிப்பும் உள்ளதும் ஆக்குவது போதனை முறை உத்தியையே பொறுத்திருக்கிறது.

என்னுடைய சொந்த அனுபவத்தில், இத்தகைய அழ கிய கட்டுப்பாட்டின் முடிவான வடிவம் எனக்கு எடுத்த எடுப்பிலேயே கிடைத்து விடவில்லை. தவிர, கட்டுப்பாடு வெறும் வெளி அலங்காரமாக இருந்து விடும் அபாயம் வேறு இருக்கிறது. கட்டுப்பாட்டின் அழகு அதன் தன்மை யிலிருந்தே வெளிப்பட வேண்டும்.

எப்படியும், கட்டுப்பாட்டில் இந்த அழகியல் அம்சம் குறித்த கணிசமாகச் சிக்கலான திட்டத்தைக் கடைசிக் காலப்பகுதியில் நான் வகுத்திருந்தேன். எடுத்துக்காட்டாகச் சில உத்திகளை விவரிக்கிறேன். இவற்றை நான் கையாண்டது கட்டுப்பாட்டை ஏற்படுத்துவதற்காக அல்ல, அதன் அழ கியலைச் சரி பார்ப்பதற்காகவும் உறுதிப்படுத்துவதற்காக வுமே.

உதாரணமாக, காலை உணவு தாமதித்து விட்டது என்று வைத்துக் கொள்வோம். சமையல்காரர்களின் தவற்றாலோ, முறைவேலைக் கமாண்டரின் அஜாக்கிரதையாலோ சாப்பாட்டு மணி பத்து நிமிடம் தாழ்த்து அடித்தது. அல்லது மாணவர்களில் சிலர் தாமதித்துப் படுக்கைவிட்டு எழுந்த

தனுல் இவ்வாறு நேர்ந்தது என்று வைத்துக் கொள்வோம். மேற்கொண்டு என்ன செய்வது என்பது கேள்வி. வேலை தொடங்குவதற்கான சங்கைப் பத்து நிமிடம் தாமதமாக ஊதுவதா? வேலையைச் சுணக்கப்படுத்துவதா, அல்லது காலை உணவை விட்டு விடுவதா? நடைமுறையில் இது மிகக் கடினமான பிரச்சினை.

எங்கள் கம்யூனில் சம்பளத்துக்கு வேலை செய்தவர்கள்—பொறியாளர்கள், மேஸ்திரிகள், பயிற்சி ஆசிரியர்கள் முதலியோர் இருநூறு பெயர் வரை இருந்தார்கள். அவர்களும் தங்கள் நேரத்தை விலை மிக்கதாகக் கருதினார்கள். அவர்கள் காலை எட்டு மணிக்கு வேலைக்கு வந்தார்கள். எட்டு மணிக்குச் சங்கு ஊதுவது என் கடமையாய் இருந்தது. ஆனால் காலை உணவுக்குப் பத்து நிமிடங்கள் தாமதம் ஆகிவிட்டது. மாணவர்கள் நேரத்துக்குச் சாப்பிட்டு முடிக்க மாட்டார்கள். ஆகவே தொழிலாளர்களையும் பொறியாளர்களையும் நான் சுணக்கப்படுத்த வேண்டும். அவர்களில் பலர் நகருக்கு வெளியே வசித்தார்கள். அவர்கள் ரயிலுக்கு உரிய நேரத்தில் போக முடியாது. இப்படிப் பல சிக்கல்கள். வேலை கணக்காகக் குறித்த நேரத்தில் தொடங்கிக் குறித்த நேரத்தில் முடிவது கட்டாயமாய் இருந்தது.

இத்தகைய சந்தர்ப்பங்களில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றிக் கடைசி ஆண்டுகளில் எனக்கு ஒரு தரங்கூடச் சந்தேகம் உண்டாகவில்லை. மாணவர்களுக்கும் அப்படியே. காலை ஆகாரத்துக்குத் தாமதம் ஆகிவிட்டது. நான் சரியாக எட்டு மணிக்கு வேலைச் சங்கை ஊதுகிறேன். பல மாணவர்கள் வேலைக்கு ஓடுகிறார்கள். சிலர் அப்போது தான் சாப்பிடத் தொடங்கி இருக்கிறார்கள். நான் உணவுச் சாலைக்கு வந்து காலை ஆகாரம் முடிந்து விட்டது என்று சொல்லுகிறேன். மாணவர்களைக் காலை உணவு இல்லாமல் பட்டினி போடுகிறேன் என்பதும் இது அவர்கள் உடம்புகளுக்கு நல்லது அல்ல என்பதும் எனக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் ஒரு தடவை கூட எனக்குச் சந்தேகம் உண்டாகவில்லை. கட்டுப்பாட்டின் அழகை உணராத சமுதாயத்தின் விஷயத்தில் நான் இப்படிச் செய்தால், ''நாங்கள் பட்டினி கிடக்கவேண்டுமா என்ன?'' என்று என்னிடம் எவனாவது சொல்லியிருப்பான்.

எங்கள் கம்யூனில் என்னிடம் ஒருவனும் ஒருபோதும் இப்படிச் சொல்லவில்லை. இப்படித்தான் செய்ய வேண்டும் என்பதை எல்லோரும் அறிந்திருந்தார்கள். நான் உணவுச் சாலைக்கு வந்து சாப்பாட்டை முடிக்கும்படி கோர முடிந்தது என்றால் நான் சமுதாயத்தை நம்புகிறேன், சாப்பிட வேண்டாம் என்று நான் சொன்னால் சமுதாயத்தினர் கேட்பார்கள் என்ற உறுதி எனக்கு இருக்கிறது என்று தெரிகிறது.

ஒரு நாள் முறைவேலையினர் என்னிடம் வந்து, பையன்கள் உறங்கறையில் சுணங்குவதாகவும் உணவறைக்கு வரத் தாமதிக்கிறார்கள், காலை உணவுக்கு நேரம் கடத்துகிறார்கள் என்றும் சொன்னார்கள். இந்த விஷயத்தில் சித்தாந்த விவாதம் எதையும் நான் ஒருபோதும் கிளப்பவில்லை, ஒருவரிடமும் ஒன்றும் சொல்லவில்லை. மறு நாள் நான் வெறுமே உணவுச் சாலைக்குப் போய்,பக்கத்தில் நின்ற எவனுடனாவது முற்றிலும் வேறு விஷயம் குறித்துப் பேச்சு தொடங்குவேன். தாமதமாக வந்த நூறு, நூற்றைம்பது பெயர்—வழக்கமாக முதுநிலை மாணவர்கள்—மாடியிலிருந்து இறங்கி உணவுச் சாலைப் பக்கம் திரும்பாமல் நேரே தொழிற்சாலைக்குப் போய் விடுவார்கள். எனக்கு வணக்கம் கூறும் போதும் காலை உணவுக்குக் காலம் தாழ்த்துவிட்டதாக எவனும் காட்டிக் கொள்ள மாட்டான்.

"இன்றைக்கு நீங்கள் எங்களைப் பட்டினி போட்டு வதைத்து விட்டீர்கள்!" என்று மாலையில் சில சமயம் சொல்லுவார்கள்.

இந்த அடிப்படையில் நான் சில பயிற்சிகள் நடத்த முடிந்தது. ஒரு சுவையான திரைப்படம் காட்ட ஏற்பாடு ஆகி இருக்கும். படம் கொண்டுவரப் படும். காட்சி தொடங்கும். மூன்றாவது சுருள் காட்டப்பட்டுக் கொண்டிருக்கும் போது நான் சொல்லுவேன்:

"நான்காவது, இரண்டாவது, மூன்றாவது பிரிவுகள் ஹாலிலிருந்து வெளியே போங்கள்."

"என்ன நடந்தது?"

"யாரோ சந்தேகத்துக்கு இடமான பேர்வழிகள் கம்யூனைச் சுற்றி நடமாடுவதாகத் தகவல் கிடைத்தது. சரிதானா என்று பாருங்கள்."

"ஆகட்டும், சரி பார்க்கிறோம்."

சந்தேகத்துக்கு இடமான ஆசாமிகள் நடமாடுகிருர்களா இல்லையா என்பது பையன்களுக்குத் தெரியாது. இது சோதனையாய் இருக்கலாம் என்று அவர்களுக்குத் தோன்றும். ஆனல் இது சோதனை என்று யாரேனும் சொன்னல் மற்றவர்கள் அவனைக் கடிந்து கொள்வார்கள். பையன்கள் வெளியே போய்ச் சரி பார்த்துவிட்டுத் திரும்புவார்கள். அருமையான படத்தின் ஒரு சுருளைப் பார்க்காமல் விட்டது பற்றி ஒருவனும் ஒன்றும் சொல்ல மாட்டான். திரும்பி வந்து மேற்கொண்டு படத்தைப் பார்ப்பார்கள்.

இது இம்மாதிரிப் பயிற்சி. இத்தகைய பயிற்சிகள் நிறைய இருக்கக்கூடும். உதாரணமாக, சமுதாயத்தில் எந்தப் பிரிவு சிறந்தது என்பது எப்போதும் தெரிந்திருககும். சிறந்த பிரிவுக்கு யாவற்றிலும் கடினமான, உவப்பற்ற வேலையை, துப்புரவு செய்து ஒழுங்குபடுத்தும் வேலையைக் கொடுப்பது எங்கள் கம்யூனில் வழக்கமாய் இருந்தது. இது மிகவும் சள்ளைபிடித்த வேலை, ஏனென்ருல் எங்கள் கம்யூனுக்கு நாள் தோறும் அனேகப் பிரதிநிதிக் குழுக்கள் வந்தன. கம்யூனைப் பாங்காக, பளிச்சென்று வைத்திருப்பது அவசியமாய் இருந்தது.

''நம் கம்யூனில் சிறந்த பிரிவு எது?''

''ஆருவது.''

ஆருவது பிரிவு மிகச் சிறந்தது ஆகையால் யாவற்றிலும் உவப்பற்ற துப்புரவு வேலையை அது செய்யும் என்று இதற்கு அர்த்தம். சிறந்த பிரிவு கடினமான வேலை செய்ய வேண்டும் என்பது எங்கள் கம்யூனில் இயல்பான தர்க்கமாய் இருந்தது.

நடைப் பயணங்களில் சங்கடமான நிலைமைகள் அடிக்கடி எதிர்ப்படும். உடல் வலிமை, விரைவு, ஆற்றல் ஆகியவை இவற்றைச் சமாளிப்பதற்குத் தேவைப்படும். எந்தப் பிரிவு இதற்கு அனுப்பப்படும்? எல்லாவற்றிலும் சிறந்த பிரிவு. தனக்கு இத்தகைய பொறுப்பு அளிக்கப்பட்டதால் அந்தப் பிரிவு பெருமைப்படும். சிறந்த பிரிவு மீது அதிகப்படிச் சுமையை ஏற்றுவது, வழக்கமான வேலைக்கு மேல் பொறுப்பைச் சுமத்துவது எனக்குக் கூச்சம் அளிக்க வேண்டும். உங்களுக்கு இதை எண்ணிப் பார்ப்பது கடினமாய் இருக்கலாம், ஆனல் இந்தப் பிரிவிடமே நான் எவ்விதச் சந்தேகமும் இன்றி, ஒரு வார்த்தை பேசாமல் இந்தப் பொறுப்பை

ஒப்படைப்பேன், அது சிறந்த பிரிவு என்பதால். இந்த என் நம்பிக்கையை அந்தப் பிரிவு உணரும். இதில் தனிப்பட்ட வனப்பு, அழகியல் இருப்பதை அது புரிந்து கொள்ளும்.

இந்த அழகியல் பாங்கு கட்டுப்பாட்டு உணர்வில் கடைசி நகாசு வேலையாக இருக்கும். ஒவ்வொரு சமுதாயமும் இந்த எல்லையை எட்டி விடுவதில்லை. ஆனால் ஒரு சமுதாயம் இந்த நிலையை அடைந்து விட்டால், நீ உயர்வதற்கு ஏற்றபடி உன்னிடம் அதிகமாகக் கோரப்படும் என்பது தர்க்கமாய் இருந்தால், இது உண்மையான, உயிரோட்டம் உள்ள தர்க்கம் ஆகிவிட்டால், கட்டுப்பாட்டு உணர்வு, போதனை ஆகியவை மனநிறைவு தரும் குறித்த எல்லையை எட்டி விட்டன என்று அதற்கு அர்த்தம் ஆகும்.

இறுதியில், கட்டுப்பாடு பற்றிய முடிவான சித்தாந்தப் பொது வரையறுப்பு. இதைக் குழந்தைகளுக்குப் புரியும்படியான எளிய வடிவில் முடிந்தவரை அடிக்கடி என் மாணவர்களுக்கு விளக்குவது இன்றியமையாதது என நான் கருதினேன். அதாவது: தனக்கு உவப்பான ஒரு காரியத்தை ஒருவன் செய்ய வேண்டி இருந்தால், கட்டுப்பாடு இல்லாமலே அவன் அதைச் செய்வான். தனக்கு விருப்பு இல்லாத வேலையையும் ஒருவன் சந்தோஷமாகச் செய்வதுதான் கட்டுப்பாடு. கட்டுப்பாடு பற்றிய மிக முக்கியமான வரையறுப்பு இது. எல்லா சந்தர்ப்பங்களிலும், கூடியவரை அடிக்கடி இதைக் குறிப்பிடுவதும் வலியுறுத்துவதும் அவசியம்.

பழகுமுறையையும் ஒழுக்கநெறியையும் பற்றிய பொதுச் சித்தாந்தம் சுருக்கமாக இதுதான். இது குழந்தைகளுக்குத் திட்டவட்டமான அறிவியல் பாடமாகக் கற்பிக்கப்பட வேண்டும். இது பற்றி எப்போதும் பேசவும் இதை வலியுறுத்தவும் வேண்டும். இந்தத் தேற்றங்களையும் வரையறுப்புக்களையும் குழந்தைகளுக்குப் புரிய வைக்க வேண்டும். இவ்வாறு செய்தால் தான், பொதுச் சித்தாந்தமாக விளக்கினால்தான் கட்டுப்பாடு உணர்வுபூர்வமானது ஆகும்.

கட்டுப்பாடு பற்றிய இந்த எல்லாத் தேற்றங்களிலும் மூலவுண்மைகளிலும் முதன்மையானதையும் அடிப்படையானதையும் எப்போதும் வலியுறுத்தவேண்டும். அதுதான் கட்டுப்பாட்டின் அரசியல் முக்கியத்துவம். இந்த விஷயத்தில் நமது சோவியத் எதார்த்தம் ஒளிவீசும் எடுத்துக்காட்டுக்களை

ஏராளமாக அளிக்கிறது. நம்முடைய மிகப் பெரிய சாதனை கள், நமது வரலாற்றின் புகழ்மிக்க ஏடுகள் கட்டுப்பாட்டின் சிறந்த ஒளியால் சுடர்கின்றன. நமது வட துருவ ஆராய்ச்சிப் பயணங்களையும் பப்பானின் குழுவையும்* சோவியத் யூனியனின் வீரர்கள் பட்டம் பெற்றவர்களின் அருஞ் செயல் களையும் நினைவுகூருங்கள். கூட்டுப் பண்ணை இயக்கத்தின் வரலாற்றை எடுத்துக் கொள்ளுங்கள். நமது தொழில் பெருக்கத்தின் வரலாற்றை எடுத்துக் கொள்ளுங்கள். இவற் றிலும் நமது புனைவு இலக்கியத்திலும் ஒளிமிக்க உதாரணங் கள் உங்களுக்குக் கிடைக்கும். சோவியத் கட்டுப்பாட்டின் உதாரணமாக இவற்றை நீங்கள் உங்கள் மாணவர்களுக்குக் காட்டலாம். கட்டுப்பாட்டின் இந்தக் கோட்பாடுகளையே அடிப்படையாகக் கொண்டது இந்தக் கட்டுப்பாடு.

ஆயினும், நான் ஏற்கனவே கூறியது போல, இத்தகைய அரசியல் உணர்வு, பழகுமுறை பற்றிய இத்தகைய சித்தாந் தம் கட்டுப்பாட்டைத் தொடர வேண்டும், கட்டுப்பாட் டோடு கூடவே இயங்க வேண்டும், கட்டுப்பாட்டுக்கு ஆதார மாக இருக்கக் கூடாது.

கட்டுப்பாட்டின் அடிப்படையாகத் திகழ்வது எது?

உளவியல் ஆராய்ச்சிகளின் ஆழத்தில் புகாமல் எளிமை யாகச் சொன்னால், கட்டுப்பாட்டுக்கு அடிப்படையாக விளங்கு வது சித்தாந்தம் அற்ற கோரிக்கை ஆகும். எனது போதனை அனுபவத்தின் சாரத்தைச் சுருக்கமான சூத்திர வடிவில் நான் எப்படி வரையறுப்பேன் என்று யாரேனும் என்னிடம் கேட்டால் மனிதனிடம் முடிந்தவரை அதிகமாகக் கோரு வதும் அவனுக்கு முடிந்தவரை அதிக மரியாதை காட்டு வதும் என்று சொல்வேன். இந்தச் சூத்திரம் பொதுவாக சோவியத் கட்டுப்பாட்டின் சூத்திரம், பொதுவாக நமது சமூகத்தின் சூத்திரம் என்று நான் திண்ணமாக நம்புகிறேன். நாம் தனி மனிதனிடம் பூர்ஷ்வா சமூகத்தைக் காட்டிலும்

---

* வட துருவ மாகடலின் நடுவில், "வட துருவம்-1" என்னும் மிதக்கும் பனிப் பாளத்தின்மீது 1937 ஜூன் முதல் 1938 பிப்ரவரிவரை இ.தி. பப்பானினது தலைமையில் வேலை செய்த முதலாவது விஞ்ஞான ஆராய்ச்சிப் பயணக் குழுவின் உறுப்பினர்.—ப-ர்.

மிக அதிகமாகக் கோருகிறேம், நம் கோரிக்கைகள் அளவி லும் விரிவானவை. இதிலேயே நமது சமூகம் பூர்ஷ்வா சமூ கத்திலிருந்து வேறுபடுகிறது. பூர்ஷ்வா சமூகத்தில் ஒருவன் கடை வைக்கலாம், சுரண்டலாம், கள்ள வியாபாரம் செய்ய லாம், முதலீட்டு வருமானத்தைக் கொண்டு பிழைக்கலாம், பணத்தை வட்டிக்கு விட்டு வாழ்க்கை நடத்தலாம். நம் சமூகத்தில் உள்ளவற்றைவிட மிகக் குறைவான கோரிக்கை களே அங்கே உள்ளன.

நம் சமூகத்தில் தனி மனிதனுக்கு ஆழ்ந்த, அடிப்படை யான, பொதுக் கோரிக்கைகள் விடுக்கப்படுகின்றன. ஆனல் மறு புறம், நாம் தனி மனிதனுக்கு அசாதாரணமாக அதிக மான, கோட்பாட்டு நோக்கில் வேருன மரியாதை காட்டுகி ரேம். தனி மனிதனிடம் இவ்வாறு கோருவதும் அவனுக்கு மரியாதை காட்டுவதும் இரண்டு வெவ்வேறு விஷயங்கள் அல்ல, ஒரே விஷயம் தான். தனி நபருக்கு விடுக்கப்படும் நம் கோரிக்கைகள் அவனுடைய ஆற்றலிலும் வாய்ப்புக்களிலும் நமக்கு உள்ள மரியாதையைக் காட்டுகின்றன. தனி மனித னுக்கு நாம் காட்டும் மரியாதையில் அவனுக்கு நாம் விடுக் கும் கோரிக்கைகளும் வெளிப்படுகின்றன. இந்த மரியாதை காட்டப்படுவது சமூகத்துக்குப் புறம்பில் உள்ள, இனிமை யும் எழிலும் கொண்ட எவனே வெளியானுக்கு அல்ல. நமது பொது உழைப்பில், நமது பொது வேலையில் பங்கு கொள்ளும் தோழனுக்குக் காட்டப்படுகிறது இந்த மரியாதை. செயல் ஆற்றுபவனுக்குக் காட்டப்படும் மரியாதை இது.

தனி மனிதனுக்குக் கோரிக்கைகள் விடுக்கப்படா விட்டால் சமுதாயம் அமைக்கப்படவோ, சமுதாயத்தின் கட்டுப்பாடு ஏற்படுத்தப்படவோ நிச்சயமாக முடியாது. ஒருங்கிசைந்த, அதிகத்திலும் அதிகமான, திட்டவட்டமான, திருத்தங்களோ குறைப்போ இல்லாத கோரிக்கையை நான் ஆதரிக்கிறேன்.

உங்களில் ''போதனை இயல் காவியம்'' என்னும் என்னு டைய நூலைப் படித்தவர்களுக்கு நான் இத்தகைய கோரிக் கைகளிலிருந்து தொடங்கினேன் என்பது தெரியும். ஸதோரவ் என்னும் மாணவன் அடிக்கப்பட்ட கதை அவர்களுக்குத் தெரியும். முதலாவதாக, போதனை ஆசிரியன் என்ற முறை யில் நான் பெற்றிருந்த பயிற்சி மோசமானது, போதனை

உத்திகளில் எனக்கு இருந்த தேர்ச்சி மோசமானது, எனது நரம்பு நிலை மோசமாய் இருந்தது, நான் புகலற்ற நிலையில் இருந்தேன் என்பதை இந்த அடிகள் காட்டின. ஆயினும் இது தண்டனை அல்ல. இதுவும் கோரிக்கைதான்.

நான் வேலை தொடங்கிய முதல் ஆண்டுகளில் கோரிக்கைகளை எல்லைவரை, பலவந்தப்படுத்துவது வரை இட்டுச் சென்றேன். ஆனால் மாணவர்களை அவர்களுடைய தவறுகளுக்காக ஒருபோதும் இவ்வளவு கொடுமையாக, இத்தகைய கடைக் கோடி முறையில் தண்டித்தது கிடையாது. நான் விவரித்திருக்கும் எனது குற்றம் தண்டனை அல்ல, கோரிக்கையே.

என்னுடைய சோதனையைத் திரும்பச் செய்யும்படி நான் உங்களுக்குச் சொல்ல மாட்டேன். ஏனென்றால் இப்போது நடப்பது 1920 அல்ல, 1938ம் ஆண்டு. நான் இருந்த மிகக் கடினமான, தனித்த, சங்கடம் மிகுந்த நிலைமையில் உங்களில் யாரேனுமோ, உங்கள் தலைமையில் பணியாற்றும் தோழர்களில் எவரேனுமோ இருப்பது சந்தேகம்தான். ஆனால் கோரிக்கை இல்லாவிட்டால் போதனை இருக்க முடியாது என்று வலியுறுத்துகிறேன். கோரிக்கை அரைகுறையானதாக இருக்க முடியாது. அது போல்ஷிவிக் நோக்கில் அதிகப்பட்சமானதாக, இயன்ற எல்லைவரை கொண்டு செல்லப்பட்டதாக இருக்க வேண்டும்.

கோரிக்கையை வரையறை செய்யும் இந்த வேலை மிகக் கடினமானது என்பது உண்மையே. ஆனால் பலர் நினைப்பது போல அதற்குச் சித்த உறுதி தேவையே இல்லை. நான் சித்த உறுதி உள்ளவனே அல்ல. உள வலிமை வாய்ந்த மனிதனின் பண்புகள் என்னிடம் கிடையா. அறவே கிடையா. நான் சாதாரண அறிவு ஜீவி, சாதாரணப் போதனை ஆசிரியன். எனது அறிவாளித்தனத்தை வைத்து விளையாடுவதற்கும் பகட்டுவதற்கும் எனக்கு உரிமை கிடையாது என்ற உறுதியான எண்ணம் மட்டுமே நான் கொண்டிருந்தேன். போதனை ஆசிரியன் தன் அறிவாளித்தனத்தை வைத்துப் பகட்டுவது, கடைப்பிடிக்க வேண்டிய போக்கை அறியாததன் விளைவாகவே அடிக்கடி ஏற்படுகிறது. கடைப்பிடிக்க வேண்டிய போக்கு கோரிக்கையே என்று நான் திண்ணமாக நம்புகிறேன்.

இந்தக் கோரிக்கை விரிவாக்கப்பட வேண்டும் என்பது உண்மையே. ஆனால், இவ்விஷயத்தில் பின்பற்ற வேண்டிய வழிகள் எப்போதும் ஒரே மாதிரியானவை. வெளிப் புறத்தில் மட்டுமே கட்டுப்பாடு உள்ள அல்லது இல்லாத குழந்தைகளின் சமுதாயத்தை நீங்கள் எடுத்துக்கொள்ள விரும்பினால் எவ்வித விவாதங்களையும் தொடங்காதீர்கள். தனித்தனி நபர்களுக்கு உரிய தனித்தனிக் கோரிக்கைகளிலிருந்து நீங்கள் போதனை தொடங்க வேண்டும்.

உறுதியான, வளைவு நெளிவு அற்ற கோரிக்கையை எளிமையாக வெளியிட்டாலே போதும், குழந்தைகள் உங்களுக்கு விட்டுக் கொடுத்து, நீங்கள் விரும்பும் விதத்தில் நடந்து கொள்வார்கள். இவ்வாறு மிக அடிக்கடி நிகழ்கிறது, பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இவ்வாறே நிகழ்கிறது. இதற்குக் காரணம் ஓரளவு அறிவுரைக்கு இணங்கும் தன்மை, ஓரளவு நீங்கள் சொல்வது சரி என்ற அறிவு. மேற்கொண்டு எல்லாம் உங்கள் அறிவாற்றலைப் பொறுத்திருக்கும். தர்க்கப் பொருத்தம் அற்ற, நகைப்புக்கு இடமான, சமுதாயத்தின் கோரிக்கைகளுடன் தொடர்பு இல்லாத, முரட்டுத்தனமான கோரிக்கைகளை விடுப்பது கூடாது.

நான் தர்க்கப் பொருத்தம் இல்லாமல் பேசப் போகிறேன் என்று நினைக்கிறேன். என்வரையில் நான் பின்வரும் அடிப்படை விதியை ஏற்படுத்திக் கொண்டேன். ஒரு விஷயத்தைக் கோரலாமா, அது சரியா சரி அல்லவா என்பது எனக்கே உறுதிப்படாதபோது நான் கண்டும் காணாதவன் போல் இருந்து விடுவேன். நான் நினைப்பது சரி என்பது எனக்கும் கண்கூடாகத் தெரிந்து, நிதான புத்தி உள்ள எவனுக்கும் தெளிவாகி விடும்படியான சந்தர்ப்பத்தை எதிர்பார்ப்பேன். அத்தகைய சந்தர்ப்பம் வாய்த்தால் நான் சர்வாதிகாரி போன்று கோரிக்கைகளை விடுப்பேன், அவை நிறைவேறும் வரை கட்டாயப்படுத்துவேன். கண்கூடான உண்மை வாயிலாக அவை சிறந்தவை என்பது தென்பட்டுவிட்டபடியால் நான் அதிகத் துணிவுடன் செயல்படுவேன். நான் சொல்வது சரி என்று புரிந்துகொண்டு பையன்கள் எளிதில் எனக்கு விட்டுக் கொடுத்துவிடுவார்கள்.

கோரிக்கைகள் பற்றிய இந்தத் தர்க்கம் ஆரம்பக் கட்டத்தில் விதியாக இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

தன் விருப்பத்துக்கு விரிவான இடம் அளித்து சமுதாயத்தின் கண்களுக்குக் கொடுங்கோலனுகைக் காட்சி தரும் போதனை ஆசிரியன், சமுதாயம் புரிந்து கொள்ளாத ஒன்றைக் கோரு கிருன். அவன் வெற்றி பெற மாட்டான்.

என்னுடைய முதல் சமுதாய உறுப்பினர்களிடம் அவர் கள் திருடக்கூடாது என்று நான் கோரவில்லை. தொடக்கத் தில் அவர்களுக்கு எந்த வகையிலும் அறிவுறுத்த என்ருல் முடியாது என்று நான் புரிந்து கொண்டேன். ஆருல் தேவைப் படும்போது அவர்கள் எழுந்திருக்க வேண்டும், தேவைப் படும் வேலைகளைச் செய்ய வேண்டும் என்று நான் கோரினேன். ஆருல் அவர்கள் திருடிவந்தார்கள். உரிய காலம் வரை நான் இந்தத் திருட்டைப் பார்த்தும் பாராதவன் போல் இருந்து வந்தேன்.

என்னவாயினும் உளமார்ந்த, வெளிப்படையான, கொள்கையுறுதி நிறைந்த, தீவிரமான, தீர்மானமுள்ள கோரிக்கை இல்லாமல் ஒரு சமுதாயத்தைப் போதித்துப் பயிற்றத் தொடங்குவது கூடாது. தயக்கம் நிறைந்த, கனி வும் குழைவுமான அறிவுரைகளுடன் போதனை தொடங்க நினைப்பவன் தவறு செய்கிருன்.

கோரிக்கைகளோடு கூடவே ஒழுக்கநெறிச் சித்தாந்தமும் விவரிக்கப்பட வேண்டும். ஆருல் எக்காரணத்தை முன்னிட் டும் இந்த விவரிப்பு கோரிக்கைக்கு மாற்ருகப் பயன்படக் கூடாது. சித்தாந்த விளக்கம் செய்வதற்கு, என்ன செய்ய வேண்டும் என்று குழந்தைகளுக்கு விவரிப்பதற்கு ஏற்ற சந் தர்ப்பம் வாய்க்கும் போது அவ்வாறு செய்ய வேண்டியது தான். ஆருல் ஒன்றைக் கோர வேண்டிய சந்தர்ப்பத்தில் நீங்கள் எந்தச் சித்தாந்தத்தையும் விவரிக்கக் கூடாது. கோரிக்கைகள் விடுத்து, அவை நிறைவேற்றப்படும்படி செய்ய வேண்டும்.

நான் பல பள்ளிகளுக்கு, பெரும் பகுதி கீவ் நகரப் பள் ளிகளுக்கு, போயிருந்தேன். பள்ளிக் குழந்தைகள் சமுதாயங் களில் எனக்கு வியப்பு அளித்தவை குழந்தைகளின் பயங்கரக் கூச்சலும், பரபரப்பும், ஆழ்ந்த போக்கு இல்லாமையும் வெறியும், படிக்கட்டுகளில் ஓட்டசாட்டங்களும், கண்ணுடி களும் மூக்குக்களும் தலைகளும் உடைபடுவதும், இத்தகைய பிறவுமே.

இந்தக் கூச்சலை என்னால் சகிக்க முடிவதில்லை. ''போதனை இயல் காவியம்'' என்ற நூலைப் பையன்கள் சூழ்ந்திருந்த போது, கூட்டத்தின் நடுவே என்னால் எழுத முடிந்தது. அவர்களுடைய பேச்சுக்கள் எனக்கு இடையூறாய் இல்லை. அந்த அளவுக்கு என் நரம்புகள் ஆரோக்கியமானவை. ஆனாலும், கூச்சலும் வீரிடலும் ஓட்டசாட்டமும் குழந்தைகளுக்குத் தேவை இல்லை என்று நான் நினைக்கிறேன்.

எனினும், குழந்தை ஓட வேண்டும், கத்த வேண்டும், இதில் அவனுடைய இயல்பு வெளிப்படுகிறது என்று போதனை ஆசிரியர்கள் தர்க்கம் செய்வதை நான் கேட்டிருக்கிறேன்.

நான் இந்தச் சித்தாந்தத்தை எதிர்க்கிறேன். குழந்தைக்கு இது வேண்டவே வேண்டாம். பள்ளியில் இந்தப் பொதுக் கூச்சல் எப்போதும் நரம்புகளைக் குலைக்கிறதே தவிர, ஒரு நன்மையும் செய்வது இல்லை. மாறாக, குழந்தைகள் சமுதாயத்தில் இடை நிறுத்தத்துடன், அக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்கும் பொருள்களுக்கும் கதவுகளுக்கும் ஜன்னல்களுக்கும் பிறவற்றுக்கும் சேதம் ஏற்படாத வகையில், ஒழுங்குபடுத்தப்பட்ட இயக்கத்தை வெற்றிகரமாக நடத்த முடியும் என்று நான் சொந்த அனுபவத்தில் கண்டிருக்கிறேன்.

கம்யூனில் இத்தகைய இரைச்சலைக் கேட்க முடியாது வீதியிலும் விளையாட்டு மைதானத்திலும் கட்டிடத்திலும் இயக்கத்தில் முழு ஒழுங்கை நான் ஏற்படுத்தி விட்டேன் இயக்கம் முற்றிலும் ஒழுங்கு உள்ளதாய் இருக்க வேண்டும் என்று நான் கோரினேன்.

நம்முடைய பள்ளிகளில் இதைக் கோருவது கடினமே இல்லை. இப்போது என்னிடம் ஒரு பள்ளி ஒப்படைக்கப்பட்டால் நான் ஒழுங்கமைப்பாளனின் நிலையில் என்னை வைத்துக் கொள்வேன். எல்லோரையும் கூட்டி, இந்த மாதிரி ஓட்டசாட்டங்கள் இனி இருக்கப் படாது என்று சொல்வேன். சான்றுகளோ சித்தாந்தங்களோ எவையும் கிடையா! பிற்பாடு நான் அவர்களுக்குச் சித்தாந்தத்தையும் விளக்குவேன், ஆனால் முதலில் சித்தாந்தம் கேடுதான் செய்யும். நான் உறுதியாக நடந்து கொள்வேன்—இனிமேல் இந்த மாதிரி ஒழுங்கீனங்கள் என் கண்ணில் படலாகாது என்று கண்டிப்பாகச் சொல்லிவிடுவேன். பள்ளிக்கூடத்தில் ஒரு பையனும் கூச்சல் போடக் கூடாது என்று கட்டளை இட்டு விடுவேன்.

மறுப்புக்கு இடம் இல்லாத வடிவத்தில் விடப்படும் இம் மாதிரிக் கோரிக்கை ஒவ்வொரு சமுதாயத்திலும் ஆரம்பக் கட்டங்களில் இன்றியமையாதது. ஆட்டங் கண்ட, பதற்றம் மிக்க சமுதாயத்தைத் தனி ஒழுங்கமைப்பாளனின் இத்தகைய கண்டிப்பான தோரணை இல்லாமல் கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவரமுடியும் என்று என்னால் எண்ண முடியவில்லை. பின்னால் இந்த வேலை எவ்வளவோ எளிதாக நடக்கும்.

முதலாவது, இரண்டாவது, மூன்றாவது, நான்காவது தீவிர ஊழியர்கள் உங்கள் தரப்புக்கு வந்துவிடும் போது, கட்டுப்பாட்டை ஆதரிக்க உணர்வுபூர்வமாக விரும்பும் சிறுவர் சிறுமியரின் குழு உங்கள் அருகே அமைந்து விடும்போது இந்தக் கோரிக்கையை விரிவுபடுத்தும் இரண்டாவது கட்டம் தொடங்கும்.

இதில் நான் அவசரப்பட்டு விட்டேன். இந்தச் சிறுவர்களிடமும் சிறுமியரிடமும் மற்றவர்களிடம் உள்ளவையே போன்ற குறைகள் நிறைய இருந்ததை நான் கவனிக்கவில்லை. பொதுக் கூட்டங்களிலும் தங்கள் குழுவிலும் வெளியிடப்பட்ட தங்கள் கோரிக்கைகள் மூலமாகவும் தங்கள் கருத்துக்களின் வாயிலாகவும் என்னுடைய கோரிக்கைகளை ஆதரித்த தீவிர ஊழியர்களின் குழுவை விரைவில் திரட்ட நான் முயன்றேன். என் அருகே இத்தகைய மையக் குழு அமைந்தது கோரிக்கையை விரிவுபடுத்தும் இரண்டாவது கட்டம் ஆகும்.

சமுதாயம் கோரிக்கை விடுக்கும்போது முடிவாக, கோரிக்கையை விரிவுபடுத்தும் மூன்றாவது கட்டம் தொடங்கும். முதல் காலப் பகுதியின் கெடுபிடி நிறைந்த உழைப்புக்காக உங்களுக்குப் பரிசு அளிக்கும் விளைவு ஆகும் இது. சமுதாயம் கோரும்போது, சமுதாயம் குறித்த தோரணையிலும் பாங்கிலும் நிலைப்பட்டு விடும் போது, போதனை ஆசிரியனின் வேலை கணித நோக்கில் துல்லியமான, ஒழுங்கமைந்த வேலை ஆகிவிடும்.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் கடைசி ஐந்து ஆண்டுகளில் நான் எதையுமே கோரவில்லை. மாறாக, சமுதாயத்தின் கோரிக்கைகளுக்கு நான் முட்டுக்கட்டை போட்டு வந்தேன். ஏனென்றால் வழக்கமாக சமுதாயம் அதி வேகமாக முன்செல்கிறது, தனிநபரிடம் அடிக்கடி மிக அதிகமாகக் கோருகிறது.

இப்போதுதான், சமுதாயமே கோரும்போதுதான், ஒழுக்கநெறிச் சித்தாந்தத்தை விவரிக்க உங்களுக்கு நிறைய இடம் கிடைக்கும். அரசியல் ஒழுக்கநெறி, நடத்தை ஒழுக்க நெறி ஆகியவை குறித்த கோரிக்கைகள் அடிப்படையானவை என்பதையும் ஒவ்வொரு மாணவனும் தன்னிடமே கோருவதும் தன் நடத்தையில் எல்லாவற்றையும் விட அதிக அக்கறை எடுத்துக்கொள்ளுவதுமே கோரிக்கையின் மொத்த விளைவு என்பதையும் இப்போது ஒவ்வொருவனும் புரிந்து கொள்வான்.

ஒழுங்கமைப்பாளர் சர்வாதிகாரப் பாங்கில் கோருவதிலிருந்து, சமுதாயத்தின் கோரிக்கைகளது பின்னணியில் ஒவ்வொரு நபரும் சுதந்திரமாகத் தன்னிடம் கோருவதற்கு இட்டுச் செல்லும் இந்தப் பாதை, சோவியத் குழந்தைகளின் சமுதாய வளர்ச்சியில் முக்கியப் பாதை என நான் கருதுகிறேன். இங்கே நிலையான வடிவங்கள் இருக்க முடியாது என்று நான் உறுதியாக எண்ணுகிறேன். ஒரு சமுதாயம் வளர்ச்சியின் முதல் கட்டத்தில் இருக்கலாம். அங்கே போதனை ஆசிரியன் சர்வாதிகாரியாக இருப்பது அவசியமாய் இருக்கலாம். இந்த சமுதாயம் சுதந்திரமான சமுதாயக் கோரிக்கையின் வடிவத்துக்கும், சுதந்திரமான தனி மனிதன் தன்னிடமே கோரும் வடிவத்திற்கும் கூடிய விரைவில் மாற வேண்டும்.

வெறும் கோரிக்கையை மட்டும் கொண்டு ஒழுங்கமைக்க முடியாதுதான். கோரிக்கை சமுதாயத்தைக் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்துவதன் இன்றியமையாத அம்சம். ஆனால் ஒரே அம்சம் அல்ல. எஞ்சிய எல்லா அம்சங்களும்கூட தன்மையில் கோரிக்கைகளாகவே இருக்கும், ஆனால் அவ்வளவு கண்டிப்பான வடிவில் விடுக்கப்படமாட்டா. கோரிக்கை தவிர, கவர்ச்சி செய்வதும் கட்டாயப்படுத்துவதும் இருக்கின்றன. இவை இரண்டும் ஒரு வகையில் கோரிக்கையின் மென்மையான வடிவங்களே. முடிவாக சாதாரணமான கோரிக்கையைக் காட்டிலும் வலுவான வடிவம் அச்சுறுத்துவது ஆகும்.

இந்த வடிவங்கள் நமது நடைமுறையில் கையாளப்பட வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

கவர்ச்சி செய்வது என்றால் என்ன? அதுவும் ஓரளவு வளர்ச்சி அடைய வேண்டும். பரிசினால், வெகுமதியினால்,

போனஸினுல் அல்லது தனிநபருக்கான எவையேனும் நன்மைகளால் கவர்ச்சி செய்வது ஒரு விஷயம். செயலின் அழகியலால், அதன் வனப்புள்ள உள்ளடக்கத்தால் கவர்ச்சி செய்வது வேறு விஷயம்.

கட்டாயப்படுத்துவதும் இத்தகையதே. முதல் சந்தர்ப்பத்தில் கட்டாயப்படுத்துவது அதிக எளிய வடிவில், சான்று காட்டுவதன் அல்லது அறிவுறுத்துவதன் வடிவில் செய்யப்படலாம். அதிகச் செவ்வையான வடிவில் கட்டாயப்படுத்துவது குறிப்பினுல், புன்னகையால், விளையாட்டாகச் செய்யப்படும்.

அச்சுறுத்துவதும் இப்படியே. சமுதாய வளர்ச்சியின் தொடக்கத்தில், தண்டனை கிடைக்கும், கெடுதல் நேரும் என்று நீங்கள் அச்சுறுத்தலாம். ஆனுல் சமுதாய வளர்ச்சியின் முடிவில் இது தேவைப்படாது. வளர்ச்சி அடைந்த சமுதாயத்தில் இம்மாதிரி அச்சுறுத்தலுக்கு இடம் தரலாகாது. த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் ''உன்னை என்ன செய்கிறேன் பார்!'' என்று யாரையும் நான் மிரட்டியதில்லை. மிரட்டியிருந்தால் நான் தவறு செய்திருப்பேன். பொதுக் கூட்டத்தில் பிரச்சினையைக் கிளப்புவேன் என்று கண்டனத்தின் வாயிலாக நான் அச்சுறுத்தினேன். பொதுக் கூட்டத்தில் இந்தக் கண்டனம் மிகப் பயங்கரமாக இருந்தது.

கட்டாயப்படுத்துவதும் கவர்ச்சி செய்வதும் அச்சுறுத்துவதும் சமுதாயத்தின் வளர்ச்சியில் முற்றிலும் வெவ்வேறு வடிவங்கள் ஆகும். த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் கடைசி ஆண்டுகளில் மாணவர்களுக்கு உற்பத்தியிலோ, ஒழுக்க நெறியிலோ அன்றாட வாழ்க்கையிலோ ஆற்றிய அருஞ் செயல்களுக்காகப் பரிசுகள் வழங்கப்பட்ட பொழுது, பொருள் பரிசு, பண வெகுமதி, அணிவகுப்பின் முன் படிக்கப்படும் ஆணையில் நன்றி பாராட்டல் என்ற மூன்று வகைகளில் பரிசுகள் வழங்கப்பட்டன. ஆணையில் நன்றி பாராட்டல் யாவற்றிலும் உயர்ந்த வெகுமானமாக மதிக்கப்பட்டது. இதோடு பரிசு எதுவும் வழங்கப்படவில்லை, பொருள் நலம் எதுவும் அளிக்கப்படவில்லை. ஆயினும் அணிவகுப்பின் முன் ஆணையில் இந்த நன்றி பாராட்டலைப் பெறுவதற்காக மிகச் சிறந்த பிரிவுகள் போட்டியிட்டன. எதன் பொருட்டு அவை போட்டியிட்டன? அன்றைய தினம் உத்தரவுப்படி எல்லோரும் கூட்டெழுத்துச்

சின்னங்களும் வெள்ளைக் கழுத்துப் பட்டைகளும் கொண்ட பகட்டான உடைகள் அணிந்து திடலில் இராணுவ முறையில் அணிவகுத்து நிற்பார்கள். இசைக் குழு வரும். எல்லா ஆசிரியர்களும் பொறியாளர்களும் பயிற்சி ஆசிரியர்களும் வந்து தனி வரிசையாக நிற்பார்கள். ''நேராய் நிற்க!'' என்ற உத்தரவு இடப்படும். கொடி எடுத்து வரப்படும். இசைக் குழு கொடிவணக்க மெட்டை இசைக்கும். அதன் பிறகு நானும் நன்றி பாராட்டல் அளிக்கப் பெறுபவனும் வருவோம். ஆணை படிக்கப்படும்:

''கம்யூன் பொதுக் கூட்டத்தின் தீர்மானப்படி இன்ன செயல்களுக்காக இன்னருக்கு நன்றி தெரிவிக்கப் படுகிறது.''

இது எல்லாவற்றிலும் மேலான பரிசு. இன்ன பிரிவுக்கு அல்லது இன்ன நபருக்கு இன்ன தேதியில் அணிவகுப்பின் முன் நன்றி தெரிவிக்கப்பட்டது என்று பிரிவின் நாட்குறிப் பேட்டிலும் கம்யூனின் நாட்குறிப்பேட்டிலும் வெகுமானச் செம் பலகையிலும் பதிவு செய்யப்படும்.

உணர்ச்சி வளமும் ஒழுக்கநெறிச் சிறப்புக்களும் தன் மதிப்பும் உள்ள சமுதாயத்தில் இது எல்லாவற்றிலும் உயர்ந்த வெகுமானம். ஆனல் இந்த நிலையை அடைய முயற்சி செய்ய வேண்டும், இதிலிருந்தே தொடங்குவது கூடாது. அதிக எளிய வகையான கவர்ச்சிகளிலிருந்து, ஒவ்வொரு தனிசந்தர்ப்பத்திலும்சிலபொருள்களாகவும்பிறவிதங் களிலும் உதாரணமாக, நாடக மன்றத்துக்கு அழைத்துச் செல்வது முதலியவற்ருல் திருப்திப்படுத்துவதிலிருந்து தொடங்க வேண்டும். நல்ல போதனை ஆசிரியன் ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற மிகப் பல நுட்ப வேறுபாடுகளை, நுண்ணிய இயக்கங்களைக் கண்டுகொள்வான். கவர்ச்சியை யும் கட்டாயப்படுத்துவதையும் அச்சுறுத்தலையும் கோரிக்கை யையும் எப்போது கையாளலாம் என்று அவன் தெரிந்து கொள்வான்.

எதைக் கோருவது? இந்தக் கேள்வி எழுகிறது. இங்கே நான் ஒரு சூத்திரத்தை முன்வைப்பேன். இது விரிவுபடுத்தக் கூடப் பட வேண்டாம். எப்போதும் ஒன்ருகவே இருக்க வேண்டும். முதன்மையாகக் கோர வேண்டிய ஒரே விஷயம், சமுதாயத்துக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்பதே... கம்யூன்

காரர்கள் இந்த விஷயத்தை எனக்குக் கற்பித்தார்கள். அவர்கள் தங்கள் சமுதாயத்தை மேம்படுத்தி மிகவும் அக்கறைக்கு உரிய வடிவத்துக்கு வந்தார்கள்.

கடைசி ஆண்டுகளில் நாங்கள் திருட்டுக்காக யாரையும் தண்டிக்கவில்லை. இதுவும் எனக்கு ஓரளவு எதிர்பாராததாகவே இருந்தது. தற்செயலாக எனக்கு ஒரு நிகழ்ச்சி எதிர்ப்பட்டது. கம்யூன் உறுப்பினர்களில் ஒருவன், பதினறு வயதுப் பையன் தன் தோழனின் ஐந்து ரூபிள்களை அலமாரியிலிருந்து திருடி விட்டான்...

அவன் பொதுக் கூட்டத்துக்கு அழைக்கப்பட்டான். அவன் நடுவில் நிற்க வேண்டி இருந்தது. கம்யூன்காரர்களின் பல மரபுகளில் இது மிகப் பழைய மரபு. ஹால் இதே போன்றது, ஆனல் பெரியது. சுவர் ஓரமாக ஒரு கோடியிலிருந்து மறு கோடிவரை நீண்ட சோபா போடப்பட்டிருந்தது. இந்த சோபாவில் எல்லாரும் உட்கார்ந்தார்கள். அறிக்கை செய்பவன் வெறுமையாய் இருந்த நடுப் பகுதிக்குப் போய் நேரே சரவிளக்குக்கு அடியில் நிற்க வேண்டி இருந்தது. யார் நடுப் பகுதிக்குப் போக வேண்டும், யார் போக வேண்டாம் என்பது திட்டவட்டமாகத் தீர்மானிக்கப்பட்டிருந்தது, அவ்வாறு வரையறுக்கும் விதித் தொகுப்பு இருந்தது. உதாரணமாக, ஒருவன் சாட்சியாக விசாரிக்கப்பட்டால், அவன் நடுவுக்குப் போக வேண்டாம். கமாண்டர் தன் பிரிவின் சார்பில் பதில் அளித்தால் நடுவுக்குப் போக வேண்டியதில்லை. ஆனல் அவனே தன் சார்பில் பதில் அளிக்கும் போது ஹாலின் நடுவுக்குப் போக வேண்டும். நடவடிக்கைகள் வேறு விதமாக விசாரிக்கப்பட்டதாக எனக்கு நினைவு இல்லை. ஹால் நடுவுக்குப் போக மறுப்பது சமுதாயத்துக்குக் கீழ்ப்படிய மறுப்பதாகக் கருதப்பட்டது. ஒருவன் ஏதேனும் சிறு குற்றம் செய்திருக்கலாம், அவனைச் சிறு தண்டனையுடன் விட்டிருப்பார்கள். ஆனல் அவன் ஹால் நடுவுக்குப் போக மறுத்தால், மிகப் பெரிய குற்றம் செய்தவனுக—சமுதாயத்தை எதிர்த்துக் கலகம் செய்தவனுக—கருதப்பட்டு, கடுமையான தண்டனை பெறுவான்.

இந்தப் பையன் ஹாலின் நடுவுக்குப் போனன்.

''நீ திருடினயா?'' என்று அவனைக் கேட்டார்கள்.

''திருடினேன்.''

''யார் பேச விரும்புகிறூர்கள்?''

நடுவில் இராணுவ முறைப்படி விரைப்பாக நிமிர்ந்து நிற்க வேண்டும் என்பது விதி.

ஒருவன் பேச அனுமதி கேட்டான். எதற்கெடுத்தாலும் கம்யூனிலிருந்து வெளியேற்றிவிட வேண்டும் என்பானே, அதே ராபஸ்பியர் இவன். பேச அனுமதி கிடைத்ததும் அவன் சொன்ஞன்:

''இவனை நாம் என்ன செய்வது? இவன் காட்டான். இவனுல் திருடாமல் எப்படி இருக்க முடியும்? கேள் அப்பா, நீ இன்னும் இரண்டு தடவைகள் திருடுவாய்!''

எல்லோருக்கும் இது பிடித்திருந்தது.

''சரிதான், இவன் இன்னும் இரண்டு தடவைகள் திருடட்டும். இவனை நடுவிலிருந்து போக விடுங்கள்!''

விசாரிக்கப்பட்டவனுக்கு ரோசம் வந்து விட்டது:

''இன்னும் இரண்டு தடவைகள் திருடுவதாவது? சத்திய மாய்ச் சொல்லுகிறேன், திருட மாட்டேன்!''

ராபஸ்பியர் சொன்ஞன்:

''நாங்கள் சொல்வதைக் கேள். நீ இன்னும் இரண்டு தடவைகள் திருடுவாய்.''

பையன் போய்விட்டான். மாலையில் என்னிடம் வந்தான்.

''இது என்னவோ, சைத்தானுக்கே வெளிச்சம். அவர்கள் என்னைத் தண்டிக்கக் கூட இல்லை. கிண்டல் செய்கிறூர்கள். நான் இன்னும் இரண்டு தரம் திருட வேண்டும் என்கிறூர்கள்.''

''அவர்கள் உன்னைக் கிண்டல் செய்தார்கள் என்று நிரூபி'' என்றேன் நான்.

அவன் என்ன செய்தான் தெரியுமோ? ஒரு வாரம் கழிந்ததும் அவன் பக்கத்துப் பையனின் அலமாரியிலிருந்து உளியைத் திருடிவிட்டான். விற்பதற்காகக் கூட இல்லை. பூட்டுத் திருகாணியைக் கழற்றிஞன், அலமாரியைத் திறந்து திருடிவிட்டான். ஆக அவன் மறுபடி ஹால் நடுவே நின்றூன். ''உளியைத் திருடிஞயா?'' என்று தலைவன் கேட்டான். எல்லோரும் கெக்கலித்தார்கள்.

ராபஸ்பியர் எழுந்திருந்தான்.

''நான்தான் சொன்னேனே, நீ இன்னும் இரண்டு தரம் திருடுவாய் என்று. அப்படியே நீ திருடிஞய். நீ எதற்காக

ரோசப்பட்டாய், கம்யூனில் குறை சொல்லிக்கொண்டு திரிந்தாய்? நீ இன்னும் ஒரு தரம் திருடுவாய்'' என்ருன்.

அவன் போய்விட்டான். ஒரு மாதம் அவன் ஆசையை அடக்கிக் கொண்டு இருந்தான். ஒரு மாதம் சென்றதும் சமையல் அறைக்குள் போய்ப் பணியாரத்தைத் திருடி விட்டான்.

அவன் மறுபடி ஹால் நடுவில் நின்றபோது மற்றவர்கள் அனுதாபம் நிறைந்த விழிகளுடன், சந்தோஷம் பொங்கப் பார்த்தார்கள்.

''நல்லது, இது கடைசித் தரமா?'' என்று கேட்டான் ராபஸ்பியர்.

பையன் பேச அனுமதி கேட்டான்.

''இது கடைசித் தரம் என்பதை இப்போது நான் காண்கிறேன்'' என்ருன்.

அவன் விடப்பட்டான். இந்த முடிவு சரி ஆயிற்று. அதன் பின் அவன் திருடவில்லை.

இந்த நிகழ்ச்சி எல்லோருக்கும் மிகவும் பிடித்திருந்தது. பிறகு கம்யூனில் திருட்டு நடந்தால் பின்வரும் மந்திரச் சொற்களைக் கூறுவது வழக்கம் ஆகிவிட்டது:

''நீ இன்னும் இரண்டு தடவைகள் திருடுவாய்.''

''இது என்ன வழக்கம்? இன்னும் இரண்டு தடவைகள் திருடுவாய் என்கிறீர்களே! நம் கம்யூனில் நானூற்று ஐம்பது பெயர் இருக்கிருர்கள். ஒவ்வொருவனும் மும்மூன்று தடவைகள் திருடுவான்—கம்யூனின் கதி என்ன ஆகும்?'' என்றேன்.

''பயப்படாதீர்கள்'' என்ருர்கள் பையன்கள்.

மெய்யாகவே என் பயம் ஆதாரம் அற்றது ஆயிற்று. இந்த முறை உயிரைப் பறிப்பது போலக் கொடுமையாய் இருந்தது—சமுதாயத்தின் நம்பவைக்கும் ஆற்றல் அத்தகையது. எல்லா விதத் திருட்டும் நின்று விட்டது. ஒருவன் திருடிஞல் தன்னை ஹால் நடுவே நிறுத்த வேண்டாம் என்று முழந்தாள் படியிட்டுக் கெஞ்சிஞன். இல்லாவிட்டால் அவன் இன்னும் இரண்டு தடவைகள் திருடுவான் என்பார்கள். அவனும் முன்பு இதே சொற்களைக் கூறியிருந்தான்: எனவே, மேற்கொண்டு திருடுவதே இல்லை என்று ஆணையிட்டு மன்னிப்புக் கோரிஞன்.

சில்லறைத் திருட்டு போன்ற குற்றங்களுக்கு நாங்கள் தண்டனை கொடுக்கவில்லை. திருடுபவன் நோயாளி, திருடுவது அவனுடைய நெடுநாள் பழக்கம், அதிலிருந்து அவனால் விடுபட முடியவில்லை என்று எண்ணப்பட்டது.

முரட்டுத்தனமும் ஓரளவு போக்கிரித்தனமும் சமீபத்தில் எங்கள் கம்யூனுக்கு வந்த புதியவனிடம் காணப்பட்டால் அதற்காக அவனைத் தண்டிப்பதில்லை என்று பின்னால் வழக்கப் படுத்திக் கொண்டோம்.

நாங்கள் தண்டித்தது எதற்கு என்று சொல்லுகிறேன். உதாரணமாக ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கொள்வோம். ஒரு பெண் இருந்தாள். கம்யூனின் பழைய உறுப்பினள். பிரிவுக் கமாண்டர். இளங் கம்யூனிஸ்டுகள் சங்க உறுப்பினள். அழகி, துடியானவள். கம்யூனில் முக்கியமான பெண்களில் ஒருத்தி. எல்லாரது நன்மதிப்பையும் பெற்றவள். இவள் விடுமுறை எடுத்துக் கொண்டு போனவள் இரவு கம்யூன் திரும்பவில்லை. ஷுரோவுக்கு உடம்பு சரியாய் இல்லை என்றும் அவள் தன் வீட்டில் இரவு தங்கப் போவதாகவும் அவளுடைய தோழி போன் செய்து தெரிவித்தாள்.

தொலைபேசியில் இந்தத் தகவலைப் பெற்ற முறை வேலைக் கமாண்டர் என்னிடம் வந்து ஷுரோவுக்கு உடம்பு சரியாய் இல்லை என்றும் அவள் தோழி வீட்டில் தங்கிவிட்டதாகவும் கூறினான்.

நான் பயந்து போனேன். எனது முந்திய மாணவனும் கம்யூன் மருத்துவனும் ஆன வேர்ஷ்னேவ் என்பவனிடம் அங்கே போய் என்ன சேதி என்று அறிந்து வரும்படி கூறினேன். அவன் போனான், ஆனால் ஷுரோவையோ அவளுடைய தோழியையோ குறித்த இடத்தில் காணவில்லை. மறு நாள் ஷுரோ ஹால் நடுவே நின்றாள். ஒரு புறம் பெண்ணுக்கு இயல்பான கூச்சம். மறு புறம் வேறு எதுவோ இருந்தது.

''எனக்கு நாடகம் பார்க்க ஆசையாய் இருந்தது. நீங்கள் அனுமதிக்க மாட்டீர்கள் என்று நினைத்தேன்'' என்றாள்.

இவ்வாறு கூறி, கூச்சத்துடன் இனிமையாகப் புன்னகை செய்தாள்.

ஆனால் அது உண்மையான புன்னகை இல்லை என்பதை நான் கண்டேன். கம்யூன்காரர்கள் எல்லோரும் அப்படியே எண்ணினார்கள். ராபஸ்பியர் அவளைக் கம்யூனிலிருந்து வெளி

யேற்ற வேண்டும் என்று எப்போதும் போலக் கூறினான். ஒவ்வொரு பிரிவுக் கமாண்டரும் நகரத்துக்குப் போவான், ''உடம்பு சரியாய் இல்லை'' என்பான், நாம் மருத்துவரை அனுப்புவோம், இப்படியே போய்க்கொண்டிருக்கும் என்றான்.

நான் பார்த்தேன். ''என்ன செய்வது...''

''ராபஸ்பியரின் யோசனை மீது வாக்கெடுப்போம்'' என்றான் தலைவன்.

நான் சொன்னேன்:

''உங்களுக்கு மூளை பிசகி விட்டது. இவள் நம் கம்யூனில் இத்தனை ஆண்டுகளாக இருக்கிறாள், நீங்கள் இவளை வெளியேற்றுவோம் என்கிறீர்களே...''

ராபஸ்பியர் சொன்னான்:

''ஆம், நாம் கொஞ்சம் மிகைப்படுத்தி விட்டோம். ஆனால் இவளுக்குப் பத்து மணி நேரக் காவல் தண்டனை கொடுக்க வேண்டும்.''

பத்து மணி நேரம் அவளைக் காவலில் வைப்பது என்று முடிவு செய்தோம். பின்பு இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவனம் அவள் விவகாரத்தை விசாரணைக்கு எடுத்துக் கொண்டது. மாலையில் இளங் கம்யூனிஸ்டுகள் கூட்டத்தில் அவள் ''விளாசப்பட்டாள்''. இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்திலிருந்து அவளை நீக்கத் தீர்மானிக்கப்பட்டது. ''அவள் திருடியிருந்தால் கூட மேல், இளங் கம்யூனிஸ்டாகவும் பிரிவுக் கமாண்டராகவும் இருந்து கொண்டு உடம்பு சரியாய் இல்லை என்று முறைவேலைக் கமாண்டருக்குப் போன் செய்தாள், உண்மையிலோ உடம்பு சரியாகத்தான் இருந்தது, இவள் எங்கோ போயிருந்தாள். இவள் பொய் சொன்னாள். இது கடுங்குற்றம்'' என்றார்கள் உறுப்பினர்கள். அவள் இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்திலிருந்து விலக்கப்படுவதைத் தடுப்பதற்காகக் கம்யூனிஸ்ட் கட்சி ஸ்தாபனம் தலையிட வேண்டி வந்தது.

இத்தகைய தர்க்கம் எடுத்த எடுப்பில் வந்து விடுவதில்லை, படிப்படியாகத்தான், சமுதாயத்தின் வளர்ச்சிக்கு ஏற்பவே வரும்.

தனி மனிதன் ஓரளவு உணர்வுபூர்வமாக சமுதாயத்துக்கு எதிராகச் செயல்படும்போதே மிகப் பெரிய

கோரிக்கைகள் விடுக்கப்படவேண்டும். இயல்பாக, சுபாவத்தின் காரணமாக, தன்னடக்கம் இல்லாமையால், அரசியல், ஒழுக்கநெறி அறிவீனம் காரணமாக ஒரு செயல் புரியப்படும் போது கோரிக்கை அவ்வளவு கடுமையானதாக இருக்க வேண்டியதில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில், அனுபவத்தின் நல்ல பாதிப்பையும் பழக்கங்கள் படிப்படியாகச் சேர்வதையும் நம்பி இருக்கலாம். ஆனால் தனி மனிதன் சமுதாயத்தின் கோரிக்கையையும் அதன் அதிகாரத்தையும் மறுத்து, உணர்வு பூர்வமாக சமுதாயத்துக்கு எதிராகச் செயல்படும்போது கோரிக்கைகள் உறுதியாக, முடிவுவரை, சமுதாயத்துக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்பதைத் தனி மனிதன் ஒப்புக்கொள்ளும்வரை, விடுக்கப்பட வேண்டும்.

இப்போது, தண்டனைகளைப் பற்றிச் சில வார்த்தைகள். தண்டனைகள் விஷயத்தில் நாம் மேற்கொள்ளும் போக்கு அவ்வளவு நன்றாய் இல்லை. தண்டனைகள் அவசியமும் உபயோகமும் உள்ளவை என்றும் தண்டனைகள் அனுமதிக்கப் படலாம் என்றும் ஒரு புறம் நாம் ஒப்புக் கொண்டுவிட்டோம். ஆனால் மறு புறம், நம்மிடம் ஒரு விதி இருக்கிறது. இது சிறப்பாக நமக்கே, அறிவுஜீவிகளுக்கே, முதன்மையாகப் போதனை ஆசிரியர்களுக்கே உரியது. தண்டனை அனுமதிக்கத் தக்கதுதான், ஆனால் தண்டனை இல்லாமலே காரியத்தை நடத்துவது மேல் என்பது அந்த விதி. தண்டனை என்னவோ கொடுக்கலாம்தான், ஆனால் தண்டனை கொடுப்பவன் மோசமான ஆசிரியன். தண்டிக்காத ஆசிரியனே நல்லவன்.

இந்தத் தர்க்கம் போதனை ஆசிரியனுக்குத் தடுமாற்றம் ஏற்படுத்துகிறது என்று நான் கருதுகிறேன். தண்டனை என்றால் என்ன என்பது திட்டவட்டமாக வரையறுக்கப்பட வேண்டும். என்வரையில், தண்டனை என்பது அவ்வளவு பெரிய நலம் அல்ல என்று நான் உறுதி கொண்டிருக்கிறேன். ஆனால் தண்டிப்பது அவசியமாய் இருக்கும் சந்தர்ப்பத்தில் தண்டிக்காமல் இருக்க ஆசிரியனுக்கு உரிமை கிடையாது என்று நான் திண்ணமாகக் கருதுகிறேன். தண்டனை இன்றியமையாததாக இருக்கும சந்தர்ப்பங்களில் தண்டிப்பது உரிமை மட்டும் அல்ல, கடமையும் ஆகும். அதாவது, ஆசிரியன் தண்டிக்கலாம், அல்லது தண்டிக்காமல் இருக்கலாம், ஆனால் அவனுடைய மனச்சான்றும் அவனுடைய தொழில்நுட்பத்

தேர்ச்சியும் அவனுடைய கொள்கைகளும் அவன் தண்டிக்க வேண்டும் என்று சொல்லும்போது தண்டிக்க மறுப்பதற்கு அவனுக்கு உரிமை கிடையாது என்று நான் வலியுறுத்து கிறேன். மற்ற எந்த முறையையும் போலவே தண்டனை இயல் பான, எளிய, தர்க்க நோக்கில் அனுமதிக்கத்தக்க முறை என்று அறிவிக்கப்பட வேண்டும்.

தண்டனை என்பது அனுமதிக்கத்தக்க தீமை என்னும் கிறிஸ்தவப் போக்கை அறவே மறந்துவிடுவது அவசியம். தண்டனை தீமை என்றும் ஆனல் எதனுலோ ஓரளவு அனும திக்கத்தக்கது என்றும் எண்ணுவது தர்க்க நோக்குக்கோ சித்தாந்த நோக்குக்கோ பொருந்தவில்லை என்று நான் நினைக் கிறேன். எங்கே தண்டனை நன்மை விளைக்குமோ, எங்கே வேறு முறைகளைக் கையாள முடியாதோ, அங்கே போதனை ஆசிரியன் தீமை பற்றிய எந்தப் பேச்சும் வைத்துக் கொள்ளக் கூடாது, தண்டனை விதிப்பதைத் தன் கடமை யாகக்கருத வேண்டும். தண்டனை அனுமதிக்கத்தக்க தீமை என்னும் எண்ணம், அத்தகைய நம்பிக்கை, ஆசிரியனைப் பாசாங்குக்காரன் ஆக்கி விடுகிறது. எவ்விதப் பாசாங்கும் இருக்கக் கூடாது. எந்த ஆசிரியனும், ''பாருங்கள், நான் புனிதன், தண்டனை கொடுக்காமலே காரியத்தை நடத்து கிறேன்'' என்று பிலுக்குவது கூடாது.

தண்டிக்க வேண்டும் என்று உண்மையாகவே எண்ணும் ஆசிரியன் என்ன செய்வது? ''அதோ அந்த ஆசிரியன் தண்டிக்காமலே சமாளிக்கிருன். நான் தண்டித்தால் என்னைப் பற்றி என்ன சொல்லுவார்கள்? நான் இரண்டாந்தர ஆசிரி யன் என்பார்களே'' என்று அந்த ஆள் எண்ணி மறுகுகிருன்.

இந்தப் பாசாங்கை விட்டு ஒழிக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். எங்கே தண்டனை கையாளப்பட வேண்டுமோ, எங்கே அது பயன்தரும் விதத்தில் கையாளப்பட முடியுமோ, அங்கே போதனை ஆசிரியன் அதைக் கையாள வேண்டும்.

எனினும் தண்டனை எல்லா சந்தர்ப்பங்களிலும் எப்போ தும் விரும்பத்தக்கது என்று நாம் வலியுறுத்துவதாக இதற்கு அர்த்தம் இல்லை.

தண்டனை என்பது என்ன? தண்டனைத் துறையில் மிக நிறையப் புதுமைகள் கண்டுபிடிக்க சோவியத் போதனை இயலுக்கு வாய்ப்பு இருக்கிறது என்று நான் எண்ணு

கிறேன். நம் சமூகம் அனைத்தும் அவ்வாறு அமைந்திருக்கிறது. நம் சமூகத்தில் தனி மனிதனுக்கு மிகுந்த மரியாதை காட்டப்படுகிறது, மனிதாபிமானம் நிறைந்திருக்கிறது. எனவே, தண்டனை பற்றிய பிரச்சினையில் இருக்கக் கூடிய உவப்பான அளவுமானத்துக்கு நாம் வர முடியும். இந்த உவப்பான அளவுமானம் பின்வருவதாக இருக்க வேண்டும்: தண்டனை தனி மோதல்களைத் தீர்த்து ஒழிக்க வேண்டுமே தவிர, புதிய மோதல்களை ஏற்படுத்தக் கூடாது.

பழைய தண்டனை ஒரு மோதலை ஒழிக்கையில் இன்னொரு மோதலை ஏற்படுத்தியது. இந்த மோதலை இன்னும் சிக்கலான வழியில் தீர்க்க வேண்டி வந்தது. இதுவே பழைய தண்டனையில் இருந்த தீமை. தண்டனை ஒரு சந்தர்ப்பத்தில் அர்த்தம் உள்ளது, மறு சந்தர்ப்பத்தில் அர்த்தம் அற்றது என்பது தெளிவு.

சோவியத் தண்டனை மற்ற தண்டனைகளிலிருந்து என்ன வேறுபாடுகள் கொண்டது? முதலாவதாக, தண்டனை துன்பம் விளைப்பதை எந்த சந்தர்ப்பத்திலும் நோக்கமாகக் கொள்ளக் கூடாது. ''நான் உன்னைத் தண்டிப்பேன். நீ துன்பப்படுவாய். மற்றவர்கள் அதைப் பார்த்து, 'நீ துன்பப்படுகிறாய். எனவே நாங்கள் இந்தக் காரியத்தைச் செய்யாமல் இருக்க வேண்டும்' என்று நினைப்பார்கள்'' என்பது வழக்கமான தர்க்கம்.

உடல் துன்பமோ உளத் துன்பமோ இருக்கவே கூடாது. தண்டனையின் உட்பொருள் என்ன? தான் செய்தது சரியல்ல என்பதை ஒருவன் அறிந்து, தான் சமுதாயத்தின் கண்டனத்துக்கு உள்ளானதற்கு வருந்துகிறான் என்பதே தண்டனையின் உட்பொருள். அதாவது தண்டனை என்பது நசுக்குவது அல்ல, தவறுகளுக்காக வருந்துவது ஆகும், சமுதாயத்திலிருந்து ஆகக் குறைந்த அளவில் தான் என்றாலும் விலக்கப்பட்டதற்காக வருந்துவது ஆகும்.

எனவே, பிரச்சினை தர்க்க நோக்கில் தெளிவாக இருக்கும் போதே தண்டனை மேற்கொள்ளப்பட வேண்டும். சமூகக் கருத்து தண்டனைக்கு ஆதரவாக இருக்கும் போதே அது கையாளப்பட வேண்டும். சமுதாயம் நம் தரப்பில் இல்லாத போது, சமுதாயத்தை நாம் நம் தரப்புக்கு இழுக்காத போது தண்டிப்பது கூடாது. நம்முடைய தீர்மானம்

7*

எல்லாராலும் மறுக்கப்படும் தீர்மானமாக இருக்கும் சந்தர்ப் பத்தில் தண்டனை உபயோகமான விளைவை அல்ல, தீங்கான விளைவையே ஏற்படுத்தும். சமுதாயம் நமக்கு ஆதரவாக இருக்கிறது, சமுதாயம் நாம் நினைப்பது போலவே நினைக் கிறது, நாம் கண்டனம் செய்வது போன்றே கண்டனம் செய்கிறது என்று நாம் உணரும் போதுதான் தண்டிக்கலாம்.

தண்டனையின் உட்கருத்தைப் பொறுத்த விளக்கம் இது.

இப்போது, தண்டனையின் வடிவம் என்பது என்ன?

பொதுவாக முறைப்படுத்தப்பட்ட எவ்வித வடிவங்களை யும் நான் எதிர்க்கிறேன். தண்டனை பெரிதும் தனி வகைப்பட்டதாக, குறித்த தனிநபருக்கு ஏற்றதாக இருக்க வேண்டும். ஆயினும் தண்டனைத் துறையிலும் தண்டிக்கும் உரிமையை வரைப்படுத்தும் திட்டவட்டமான சட்டங்களும் வடிவங்களும் இருக்கலாம்.

முதன்மையாக, சமுதாயம் அனைத்துமோ, அதன் பொதுக் கூட்டமோ, அல்லது சமுதாயத்தின் அதிகாரம் பெற்ற ஒரு நபரோ தண்டிக்கலாம் என்று என் போதனை வேலையின் போது நான் கருதினேன். பத்து நபர்கள் தண்டனை அளிக்கக் கூடிய, தண்டிக்கும் உரிமை பெற்றுள்ள நன்கமைந்த சமுதாயத்தை என்னால் எண்ணிப் பார்க்க முடியவில்லை.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் உற்பத்தியையும் அன்றாட வாழ்க்கையையும் பள்ளியையும் நானே தலைமை ஏற்று நடத்தி வந்தேன். அங்கே தண்டிக்கும் உரிமை எனக்கு ஒருவனுக்கு மட்டுமே இருந்தது. இது இன்றியமையாதது. தண்டனை பற்றிய தர்க்கம் ஒன்றாக இருப்பதும் தண்டனை அடிக்கடி அளிக்கப்படாமல் இருப்பதும் அவசியம்.

இரண்டாவதாக, தண்டனையைக் கையாள்பவன் பின் பற்றுவதற்கு உரிய, நன்கு தெரிந்த மரபுகளும் அளவுமான மும் தண்டனையில் இருக்க வேண்டும்.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் ஒரு விதி வழக்கில் இருந்தது. புதிதாகச் சேர்பவன் ஒவ்வொருவனும் போதனை மாண வன் என்று அழைக்கப்பட்டான். அவன் எல்லோருக்கும் தெரிந்தவன் ஆகி, அவன் சமுதாயத்தை ஒட்டிச் செல்கிறான், அதை எதிர்க்கவில்லை என்பதை எல்லோரும் கண்டு கொண்ட தும் அவன் கம்யூன் உறுப்பினன் என்ற பட்டமும் த்ஸெர்ழீன் ஸ்கியினது முழுப் பெயரின் முதலெழுத்துக்கள் பொறித்த

அடையாளச் சின்னமும் பெற்ருன். அவன் கம்யூன் உறுப்பினன் என்பதை இந்த அடையாளச் சின்னம் உறுதிப் படுத்தியது.

மாணவனை நான் கடின வேலை கொடுத்துத் தண்டிக்க முடிந்தது. இது அரை மணி நேர வேலை. முதன்மையாகச் சமையல் அறையில் வேலை, மூடு தோட்டத்தில் துப்புரவு வேலை, ஆனுல் உற்பத்தி வேலை அல்ல. இது தவிர, விடுமுறை நாளில் விடுமுறையை ரத்து செய்வது, கைச் செலவுப் பணத்தைப் பிடித்துக் கொள்வது முதலிய தண்டனைகள். பையன்கள் சம்பாதித்த கைச் செலவுப் பணம் அவர்களிடம் கொடுக்கப்படுவதில்லை, அவர்கள் கணக்கில் சேமிப்பு பாங்கில் சேர்க்கப்படும். பாங்கியிலிருந்து இந்தப் பணத்தை என் கையெழுத்து இல்லாமல் மாணவன் பெற முடியாது. ஒருவனை உற்பத்தி வேலையிலிருந்து அகற்றி, கம்யூன் வேலைக்கு அனுப்புவது எல்லாவற்றிலும் கடுமையான தண்டனை.

இந்த தண்டனைகளை மாணவர்களுக்கு மட்டும் அளிக்க எனக்கு உரிமை இருந்தது.

கம்யூன் உறுப்பினர்களுக்கு இந்தத் தண்டனைகளை விதிக்க எனக்கு உரிமை இல்லை. அவர்களுக்கு ஒரே தண்டனை தான் இருந்தது—காவலில் வைப்பது. மாணவன் காவலில் வைக்கப்பட முடியாது. காவலில் வைப்பது ஒன்றுதான் நான் கம்யூன் உறுப்பினர்களுக்கு அளிக்கக் கூடிய தண்டனை.

இந்த முறை பெருத்த முக்கியத்துவம் கொண்டிருந்தது. ஒவ்வொருவனும் கூடிய விரைவில் கம்யூன் உறுப்பினன் பட்டம் பெற முயன்ருன். அப்போது காவலில் வைக்கப்படும் சிறப்பு உரிமை அவனுக்குக் கிடைக்குமே, அதனுல். நான் காவலில் வைக்கத் தயங்கவில்லை. அற்பத் தவறுக்கு, சிறு தப்புச் செயலுக்கு , பொத்தான் போடப்படவில்லை என்பதற்காக, ஒரு மணி நேரக் காவல் தண்டனை. கம்யூன் உறுப்பினனுக்குத் தண்டனை விதிக்கையில் நான் உட்கார்ந்திருக்கக் கூடாது. நான் எழுந்து நின்று, தண்டனை பெறுபவனைப் பெயரிட்டு அழைத்து,

''ஒரு மணி நேரம் காவல் தண்டனை அனுபவி'' என்று சொல்ல வேண்டும்.

''உத்தரவு. அனுபவிக்கிறேன்'' என்பான் அவன்.

பத்து மணி நேரம் வரை காவல் தண்டனை விதிக்க எனக்கு உரிமை இருந்தது. இதன் பொருள் என்ன?

விடுமுறை நாளில் அவன் தன் இடை வாரை முறைவேலைக் கமாண்டரிடம் கொடுத்து விட்டு என் அலுவல் அறைக்கு வந்து,

''நான் காவலில் இருக்க வந்திருக்கிறேன்'' என்று சொல்ல வேண்டும்.

அவன் வந்து விட்ட பிறகு அவனை வெளியே போக விட எனக்கு உரிமை கிடையாது. ஏனென்றால், மன்னிப்பு அளிக்கும் என் உரிமையை 1933ம் ஆண்டு கம்யூன் பொதுக் கூட்டம் ரத்து செய்து விட்டது. இன்று நான் மன்னிப்பேன், நாளை தண்டிப்பேன், என்ன ஒழுங்கு இது? ஆகவே என்னால் மன்னிக்க முடியவில்லை. என் அலுவல் அறையில் உட்கார்ந்து வேலை செய்ய அவனுக்கு உரிமை இருந்தது. அவனுடன் நான் ஒருவன் தான் பேச முடிந்தது. வேறு எவனுக்கும் அவனோடு பேச உரிமை இல்லை. தவிர, காவலில் இருக்கும் போது அவனுடைய குற்றத்தைப் பற்றிப் பேசுவது கூடாது என்று விதிக்கப்பட்டிருந்தது. அவ்வாறு செய்வது கெட்ட தோரணையாகக் கருதப்பட்டது. காவலில் இருப்பவனுடன் அவனுடைய குற்றத்தைப் பற்றி நான் பேசினால் அது அநாகரிகமாக மதிக்கப்பட்டது. அவன் காவலில் இருக்கிறான், குற்றத்துக்குத் தண்டனை அனுபவிக்கிறான், அப்போது அவன் குற்றத்தைப் பற்றிப் பேசுவது மிகவும் பண்பற்ற செயல், அல்லவா?

கம்யூன் விவகாரங்களையும் உற்பத்தி முதலியவற்றையும் பற்றியே நாங்கள் வழக்கமாகப் பேசுவோம். அவன் காவல் தண்டனை பெற்றவன் என்பதை நினைவுபடுத்தவோ, அவன் எவ்வளவு நேரம் காவலில் இருந்தாயிற்று என்று கடிகாரத்தைப் பார்த்துக் கணக்கிடவோ எனக்கு உரிமை கிடையாது. அவன் தானே தன் காவல் தண்டனையை ஒழுங்கமைத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணப்பட்டது. இந்தப் பொறுப்பு தண்டனை பெற்றவனிடமே ஒப்படைக்கப் பட்டது எனக்கு மிகவும் சௌகரியமாக இருந்தது.

காவல் தண்டனை என்பது என்ன என்பது உங்களுக்குத் தெரியாது. விடுமுறை நாள் முழுவதும் என் அலுவல் அறையில் உட்கார்ந்து என்னோடு பேசுவது தான் காவல் தண்டனை.

காரணம் இல்லாமல் தண்டனை கொடுத்துப் பாருங்கள். இது உவப்பான காவல் தண்டனைதான் என்றாலும் எவனும்

எந்தக் காரணத்தை முன்னிட்டும் காவலில் இருக்க ஒருப்பட மாட்டான். கம்யூன் பொதுக் கூட்டத்துக்குப் போய் முறையிடுவான். இப்படித் தண்டனை அளிப்பது அவனுடைய தனி நபர் உரிமையை மீறுவதாகக் கருதப்பட்டது.

பெண்கள் காவல் தண்டனையை ஏதோ பயங்கரம் எனக் கருதினார்கள். காவலில் இருப்பது என்றால் கம்யூன் அனைத்தின் முன்பும் அவமானப்படுவது என்று அர்த்தப்பட்டது. எனவே, அடையாளச் சின்னம் பெற்ற கம்யூன் உறுப்பினரான பெண்கள் அனேகமாக ஒருபோதும் காவல் தண்டனைக்கு உள்ளாகவில்லை. பெண் காவல் தண்டனை பெறும்படியான சந்தர்ப்பத்துக்கு இடம் அளிக்கப்படவில்லை.

அழகும் அறிவுக் கூர்மையும் உள்ளவளும் பிரிவுக் கமாண்டராய் இருந்தவளுமான ஒரு பெண்ணுக்கு நான் இரண்டு மணி நேரக் காவல் தண்டனை விதித்தேன். என் அலுவல் அறையில் இருந்த இரண்டு மணி நேரமும் அவள், ''இனிப் பொதுக் கூட்டத்தின் முன் எப்படித் தலையைக் காட்டுவேன்'' என்று அழுது கொண்டிருந்தாள். இப்போது அவள் ஹார்க்கவ் நாடக மன்ற நடிகை.

காவல் தண்டனை என்பது நான் சொன்ன தேற்றத்தை, அதாவது தனி மனிதனிடம் முடிந்தவரை அதிகமாகக் கோருவது, அவனுக்கு முடிந்தவரை அதிகமாக மரியாதை காட்டுவது என்ற தேற்றத்தைக் கையாள்வது ஆகும். எனவே காவல் தண்டனை மனிதச் செயலாக விளங்கியது.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனிலிருந்து கீவ் நகருக்கு வேலையை ஒப்புக்கொள்ள ஒரு மணி நேரத்தில் வரும்படி எனக்குத் தந்தி மூலம் உத்தரவு கிடைத்தபோது, எட்டு ஆண்டுக் காலம் சேர்ந்து வாழ்ந்த சமுதாயத்தினிடம் பிரிவு சொல்லிக்கொள்ள என்னிடம் அரை மணி நேரமே இருந்தது. அந்த சந்தர்ப்பத்தில் பேசுவது இயலாதிருந்தது, எனக்கும் கம்யூன்காரர்களுக்கும் பிரிவது கடினமாய் இருந்தது. பெண்கள் அழுதார்கள். நரம்பு அதிர்ச்சி நிலை நிலவியது. ஆயினும் மறிவினை தன் வேலையைச் செய்தது. பியானோ வாத்தியம் தூசி படிந்திருந்ததைக் கண்டு நான் பிரிவுரையை நடுவே நிறுத்தினேன்.

''நாடக மன்றத்தில் முறைவேலை செய்வது யார்?'' என்று கேட்டேன்.

''முதல் பிரிவு.''

''முதல் பிரிவுக் கமாண்டருக்கு ஐந்து மணி நேரக் காவல் தண்டனை விதிக்கிறேன்.''

முதல் பிரிவுக் கமாண்டர் என் நெடுங்காலத் தோழன். எட்டு ஆண்டுகளும் நாங்கள் சேர்ந்து வாழ்ந்தோம். ஆனால் தூசி ஏன்? அவன் சரியாகக் கவனிக்கவில்லை. ஆகவே ஐந்து மணி நேரக் காவல் தண்டனை பெற்றான்.

நான் கீவ் நகருக்குப் போய் விட்டேன். இரண்டு மாதங் களுக்குப் பின் தணிக்கைக் குழுவுடன் கம்யூனுக்கு வந்தேன். முதல் பிரிவுக் கமாண்டர் என் அலுவல் அறைக்கு வந்தான்.

''காவலில் இருக்க வந்திருக்கிறேன்.''

''எதற்காக?''

''பியானோவில் தூசி படிந்திருந்ததற்காக.''

''இதுவரை காவல் தண்டனையை நீ ஏன் அனுபவிக்க வில்லை?''

''நீங்கள் வரும்போது அனுபவிக்கலாம் என்று இருந் தேன்.''

அவனுக்காக, அவனுடைய காவல் தண்டனை முடியும் வரை ஐந்து மணி நேரம் நானும் உட்கார்ந்திருக்க வேண்டி வந்தது.

தண்டனையின் வடிவத்தைப் பற்றியது இது.

பொது வேலைப் பாங்கில், ஒருவரை யொருவர் நம்பும் விதத்தில் சமுதாயம் ஒன்றுபட்டிருக்கும் இடத்தில் தண்டனை, பொதுக் கூட்டத்தினால் விதிக்கப்பட்டால், தனி வகைப்பட்ட தாகவும் சுவையானதாகவும் இருக்க முடியும்.

கம்யூன்காரர்களின் பொதுக் கூட்டத்தில் பின்வரும் நிகழ்ச்சி நடந்தது: இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்தின் முது நிலை உறுப்பினன் ஒருவன் பயிற்சி ஆசிரியனைத் திட்டினான். அவன் கட்சியில் நியாயம் இருந்தது. ஆனால் அவன் பண்பற்ற முறையில் திட்டினான். ''முன்னோடிச் சிறுவன் கிரேன்கோ (எல்லாரிலும் வயதில் சிறியவன்) இளங் கம்யூனிஸ்டான இன்னாருக்கு இம்மாதிரி நிலைமைகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று விளக்க வேண்டும்'' எனத் தீர்மானித்தது பொதுக் கூட்டம்.

இது ஆழ்ந்த தீர்மானம். இதன்பின் முறைவேலைக் கமாண்டர் கிரேன்கோவையும் இந்த இளங் கம்யூனிஸ்டை யும் அழைத்து,

''உட்கார்ந்து விளக்கத்தைக் கேள்'' என்ருன்.

முன்னேடிச் சிறுவன் விளக்கலானுன். இந்தப் பொறுப்பை அவன் உணர்வுபூர்வமாக நிறை வேற்றினுன். இளங் கம்யூனிஸ்டும் உணர்வுபூர்வமாகக் கேட்டான்.

முறைவேலைக் கமாண்டர் கூட்டத்துக்கு அறிவித்தான்:

''பொதுக் கூட்டத்தின் தீர்மானத்தைக் கிரேன்கோ நிறைவேற்றி விட்டான்.''

''கிரேன்கோ சொன்னதை நீ புரிந்து கொண்டாயா?''

''புரிந்து கொண்டேன்.''

''சரி, போ.''

விவகாரம் முடிந்து விட்டது.

இன்னெரு தீர்மானம்: கம்யூன் பெண் ஒருத்தியுடன் ஒரு கம்யூன்காரன் உலாவிக் கொண்டிருக்கையில் ஆட்கள் அடி பிடி சண்டை போடுவதைக் கண்டான். அவனுல் விலகி இருக்க முடியவில்லை. அவனும் சண்டையில் கலந்து கொண்டான். விவகாரம் வெட்கக் கேடாக முடிந்தது.

பின்வருமாறு தீர்மானிக்கப்பட்டது:

''இன்ன தேதியில் அடுத்த விடுமுறை நாளில் மூன்று மணி அடித்து ஐந்து நிமிடங்கள் ஆனதும் இன்னுர் தன் செயலைப்பற்றிச் சிந்தனை செய்து கமாண்டருக்கு அது குறித்து அறிக்கை செய்ய வேண்டும்.''

அவன் தன் வசம் இன்றியே சிந்தனை செய்வான். என்ன சிந்தனை செய்தான் என்று சொல்ல வேண்டுமே. இவ்வாறு ஒரு வாரம் முழுவதும் ஒருவனைச் சிந்தனை செய்ய வைத்து விட்டார்கள் கம்யூன்காரர்கள். கடைசியில் அவன் எண்ணமிட்டு அதைப்பற்றி அறிக்கை செய்தான்.

இம்மாதிரி தண்டனை தண்டனை அல்ல, உந்தல் ஆகும். இதன் வாயிலாக சமுதாயம் வேடிக்கையும் விளையாட்டுமாகத் தன் ஆற்றலைக் காட்டுகிறது. ஆனுல் என் போதனை நடைமுறையில் முதன்மை வகித்தது தண்டனை அல்ல, தனி நபர்களுடன் பிரத்தியேகமான உரையாடல்களே.

விரிவுரை மூன்று

## தனிநபர் மீது செல்வாக்கு விளைக்கும் போதனை இயல்

தனிநபர் மீது செல்வாக்கு பற்றிய, தனிநபர் மீது செல்வாக்கு விளைக்கும் போதனை இயல் பற்றிய பிரச்சினையை இன்று உங்கள் முன் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ள எண்ணினேன். சமுதாயச் செல்வாக்கிலிருந்து, சமுதாயத்தை ஒழுங்கமைப்பதிலிருந்து தனிநபருக்கு, தனிநபரை விசேஷ முறையால் ஒழுங்கமைப்பதற்கு மாற்றம், என் சோதனையின் தொடக்க ஆண்டுகளில் என்னால் தவறாகப் புரிந்து கொள்ளப் பட்டது. முதலாவதாக, சமுதாயம் அனைத்தின்மீதும் செல்வாக்கு விளைப்பதில் கவனம் செலுத்த வேண்டும் என்றும் இரண்டாவதாக, தனிநபர் மீது செல்வாக்கு சமுதாயத்தின் வளர்ச்சிக்குத் திருத்தம் என்றும் நான் கருதினேன்.

சமுதாயம் முழுவதிலுமிருந்து தனிநபருக்கு நேரடியான பரிணமிப்பு இல்லை, போதனை நோக்கங்களுக்காகத் தனிப்பட ஏற்படுத்தப்பட்ட முதற்படி சமுதாயத்தின் வாயிலாகவே இந்தப் பரிணமிப்பு நிகழ முடியும் என்ற ஆழ்ந்த உறுதி, எனது சோதனையின் வளர்ச்சியின் போது எனக்கு ஏற்பட்டது. பின்னால் நடைமுறையில் இது ஊர்ஜிதமாயிற்று.

வருங்கால போதனை இயல் சித்தாந்தம், முதற்படி சமுதாயம் பற்றிய சித்தாந்தத்தில் சிறப்பாகக் கவனம் செலுத்தும் என்று எனக்குத் தோன்றுகிறது. முதற்படி சமுதாயம் என்று இங்கே நான் குறிப்பது எது?

எந்த சமுதாயத்தின் தனி உறுப்பினர்கள் செயல்முறையிலும் நட்பிலும் அன்றாட வாழ்க்கையிலும் கொள்கை வாதத்திலும் நிரந்தரமாக ஒன்றுபட்டிருக்கிறார்களோ அதையே முதற்படி சமுதாயம் என்று குறிக்க வேண்டும். ஒரு காலத்தில் நமது போதனை இயல் சித்தாந்தம் தொடர்பு சமுதாயம் என அழைக்கலாம் என்று யோசனை கூறிய அதே சமுதாயம்தான் இது.

நம்முடைய பள்ளிகளில் இத்தகைய சமுதாயங்கள் இயல்பாகவே உள்ளன. வகுப்பு தான் இந்த சமுதாயம். நமது

பள்ளியில் இதன் ஒரே குறைபாடு என்ன என்றால், அது முதற்படி சமுதாயமாகப் பங்கு ஆற்றுவது இல்லை என்பதே. அதாவது, தனி நபருக்கும் சமுதாயம் அனைத்துக்கும் இடையே தொடர்பு ஏற்படுத்தும் கணுவாக இது செயல்படுவதில்லை. மிக அடிக்கடி இது கடைசி சமுதாயமாக விளங்குகிறது. வகுப்பு பள்ளி சமுதாயத்தை நிறைவுபடுத்துவதை அனேக பள்ளிகளில் நான் காண நேர்ந்தது. பள்ளியின் முழுமையான சமுதாயத்தை நான் சில இடங்களில் காணவே இல்லை.

எனக்கு அதிக அனுகூல நிலைமைகள் வாய்த்திருந்தன. ஏனெனில் எனது கம்யூனில் தங்கு விடுதியும் உற்பத்தி நிலையமும் இருந்தன. பொது சமுதாயத்தின் காரியங்களில் அக்கறை கொள்வதற்கும் பொது சமுதாயத்தின் நலன்களுக்கு ஏற்ப வாழ்வதற்கும் எனது கம்யூன் உறுப்பினர்களுக்குத் தர்க்க நோக்கிலும் நடைமுறை நோக்கிலும் பல காரணங்கள் இருந்தன. ஆனால் வகுப்பு போன்ற இயல்பான முதற்படி சமுதாயம் என்னிடம் இல்லை. நான் அதை உருவாக்க வேண்டி இருந்தது. பிற்காலத்தில் என் கம்யூனில் பத்தாண்டுப் பள்ளி தொடங்கியது. வகுப்பு மாதிரியான முதற்படி சமுதாயத்தை நான் ஆதாரமாகக் கொண்டிருக்கலாம். ஆனால் நான் இந்த வழியை மேற்கொள்ளவில்லை. காரணம் இதுதான். வகுப்பு இடையறாத நாள் வேலையில் குழந்தைகளை ஒன்றுசேர்க்கிறது. இந்த நிலைமையைப் பயன்படுத்திக்கொள்ளும் கவர்ச்சிக்கு உள்ளாவதன் விளைவாக இந்த முதற்படி சமுதாயம் பொது சமுதாயத்தின் நலன்களிலிருந்து விலகி விட்டது. பொது சமுதாயத்திலிருந்து பிரிந்து வகுப்பின் தனி நலன்களின் எல்லைகளுக்குள் ஒதுங்கி விடுவதற்கு மிக ஏராளமான, மிக மிகத் திண்ணமான காரணங்கள் இருந்தன. ஆகையால், முதற்படி சமுதாயங்களை வகுப்பு அடையாளங்களின் படி அமைக்க இறுதி ஆண்டுகளில் நான் மறுத்துவிட்டேன். உற்பத்திக் குழுவின் அடையாளத்தைக் கொண்டும் முதற்படி சமுதாயத்தை அமைக்க நான் இசையவில்லை. வகுப்பு, உற்பத்தி வேலை என்பன போன்ற வலிவான இறுக்கிகளால் பிணைக்கப்பட்ட இம்மாதிரி முதற்படி சமுதாயங்களின் வடிவில் கம்யூனை ஒழுங்கமைக்க நான் செய்த முயற்சி, துயர்தரும் விளைவுகளை ஏற்படுத்தியது. தனது எல்லைகளுக்குள் ஒன்றுசேர்ந்த இத்தகைய முதற்படி

சமுதாயம், பொது சமுதாயத்தின் நலன்களிலிருந்து விலகி, தன் முதற்படி சமுதாய நலன்களுக்குள் ஒதுங்கும் போக்கை எப்போதும் கொண்டிருக்கிறது. இத்தகைய சந்தர்ப்பங்களில் முதற்படி சமுதாயம், முதற்படி சமுதாயம் என்ற தனது மதிப்பை இழந்து, பொது சமுதாயத்தின் நலன்களை விழுங்குவதாக மாறிவிடுகிறது. பொது சமுதாயத்தின் நலன்களுக்குப் பரிணமிப்பு கடினம் ஆகிவிடுகிறது.

இந்த முடிவுக்கு நான் தவறுகள் வழியே வந்து சேர்ந்தேன். இந்தத் தவறுகள் எனது போதனை வேலையைப் பாதித்தன. எனவே, முதற்படி சமுதாயத்தின் நலன்களுக்குள் தங்கள் நலன்களை வெகுவாகக் குறுக்கிக் கொள்ளும் பல பள்ளிகள் இதே போதனை விளைவுகளை அடையும் என்று சொல்ல எனக்கு உரிமை உண்டு.

சமுதாய போதனை முதற்படி (தொடர்பு) சமுதாயம் ஒன்றின் வாயிலாக மட்டும் நடைபெற முடியாது. ஏனென்றால் குழந்தைகள் இடையறாத அன்றாட வாழ்க்கை நட்புறவில் ஒன்றிணைந்திருக்கும் சமுதாயத்தில், அவர்கள் நாள் முழுவதும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்கும் போது, குடும்ப உறவு தோன்றிவிடுகிறது. விளைவாக, முழுவதும் சோவியத் போதனை என அழைக்கப்பட முடியாத ஒரு வகை போதனை பெறப்படுகிறது. எதன் நலன்கள் வெறும் கலந்து உறவாடலிலிருந்து தோன்றாமல் அதிக ஆழமான சமூகச் சேர்க்கையிலிருந்து தோன்றுகின்றனவோ, அத்தகைய பெரிய சமுதாயத்தின் வாயிலாகவே விரிவான அரசியல் போதனைக்குப் பரிணமிக்க முடியும். அப்போது சமுதாயம் என்பது சோவியத் சமூகம் அனைத்தும் என அர்த்தப்படும்.

நண்பர்கள் சமுதாயத்தில் குழந்தைகளை அடைப்பதால், போதனை விரிவான அரசியல் தன்மை உள்ளதாக இன்றி, குழுத்தன்மை வாய்ந்தது ஆகிவிடும் அபாயம் ஏற்படும்...

முதற்படி சமுதாயம் வகுப்பு நலன்களையோ பள்ளி நலன்களையோ உற்பத்தி நலன்களையோ மட்டும் பிரதிநிதித்துவப் படுத்தாமல், பள்ளி நலன்களும் உற்பத்தி நலன்களும் வெவ்வேறு குழுக்களால் வெளியிடப்படும் மையமாக விளங்கும் படியான ஒழுங்கமைப்பை என் சோதனையில் நான் அடைந்தேன். அதனுல்தான் கடைசிக் காலத்தில் நான் பிரிவை முதற்படி சமுதாயமாகக் கொண்டேன். வெவ்வேறு

வகுப்புக்களைச் சேர்ந்த மாணவர்களும் வெவ்வேறு உற்பத்திக் குழுக்களைச் சேர்ந்த தொழிலாளர்களும் பிரிவில் இருந்தார்கள்.

இத்தகைய கட்டமைப்பில் உள்ள தர்க்கம் உங்களுக்குப் போதிய அளவு நம்பிக்கை ஊட்டுவதாக இல்லை என்பது எனக்குப் புரிகிறது. இதை விரிவாக விளக்க எனக்கு நேரம் இல்லை. ஆனால் சில நிலைமைகளைச் சுருக்கமாகச் சுட்டிக்காட்டு கிறேன். உதாரணமாக இந்தப் பிரச்சினை நடைமுறையில் எனக்கு அக்கறைக்கு உரியதாக இருந்தது. புள்ளி விவரங் களிலும்இயக்கத்திலும் நடத்தையிலும் அதை நான் ஆராய்ந் தேன். வயது பற்றிய பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். முதற்படி சமுதாயம் வயதுவாரிக் கோட்பாட்டின்படி அமைய வேண்டும் என்பதை வேலையின் ஆரம்பக் காலத்தில் நானும் ஆதரித்தேன். ஓரளவு பள்ளியின் நலன்களைக் கருதி நான் இவ்வாறு ஆதரித்தேன். ஆனால் இது தவறு என்பதைப் பின்பு நான் கண்டேன்.

வயதில் மூத்தவர்களிலிருந்து தனிப்படுத்தப்பட்ட சிறு வர்கள் மிகச் சரியான, இயல்பான நிலைமையில் இருப்பதா கத் தோன்றக்கூடும். இந்த (11-12) வயதில் சிறுவர்கள் ஒரே சமுதாயத்தில் இருக்க வேண்டும், அவர்களுக்குச் சொந்த நலன்களும் சொந்த ஸ்தாபனங்களும் இருக்க வேண் டும் என்றும் இதுவே யாவற்றிலும் சரியான போதனை இயல் நோக்கு என்றும் நான் எண்ணினேன். போதனை இயல் நூல்களின் குறித்த செல்வாக்கும் இந்த எண்ணத்துக்கு என்னை இட்டு வந்தது. வயது போதனையின் திட்டவட்டமான அடிப்படைகளில் ஒன்று என இந்த நூல்கள் கருதின.

ஆனால், மற்ற வயதுப் பிள்ளைகளிலிருந்து தனிப்படுத்தப் பட்ட சிறுவர்கள் செயற்கையான நிலைமையில் அகப்பட்டுக் கொள்வதை நான் கண்டேன். அத்தகைய சமுதாயத்தில் மூத்த வயதினரின் இடையறுத செல்வாக்கு இல்லை. தலைமுறைகளின் மரபு வழித் தொடர்பு இல்லை. மூத்த சகோதரர்களிடமிருந்து,அதிக அனுபவமும் ஒழுங்கமைப்பும் பெற்றவர்களிடமிருந்து, முக்கியமாக, சிறுவர்களுக்குக் குறித்த அர்த்தத்தில் ஆதர்சமாக விளங்குபவர்களிடமிருந்து பெறப்படும் ஒழுக்கநெறி, அழகியல் தூண்டல் இத்தகைய சமுதாயத்தில் இல்லை.

சோதனை முறையில் பல்வேறு வயதினரை, சிறுவர்களையும் பெரிய பையன்களையும் ஒன்றிணைத்துப் பார்த்தேன். அப்போது சமுதாயம் முந்தியதைவிட மேலானதாக இருந்தது. இந்த வடிவத்தை நிலையாகக் கொண்டேன். கடைசி ஏழு, எட்டு ஆண்டுகளில் எனது பிரிவில் மிக மூத்த, அனுபவம் முதிர்ந்த, அரசியல் வளர்ச்சியும் அறிவும் பெற்ற இளங் கம்யூனிஸ்டுகளும் என் கம்யூனில் இருந்த மிகச் சிறியவர்களும் ஒரு சில நடுத்தர வயதினரும் கட்டாயமாக இருந்தார்கள். வெவ்வேறு வயதினர் அடங்கிய இம்மாதிரி சமுதாயம், எவ்வளவோ அதிக போதனை விளைவு பெற எனக்கு உதவிற்று. இது முதல் விஷயம். இரண்டாவதாக அதிக எளிதாக இயங்குவதும் சரியானதும் ஆகிய சமுதாயம் என் கைகளில் இருந்தது. அதை நடத்துவது எனக்குச் சுலுவாய் இருந்தது.

ஒரே வயதுச் சிறுவர்கள் அடங்கிய சமுதாயம் குறித்த வயதுக்குரிய நலன்களுக்குள் அடைபட்டுவிடும் போக்கை எப்போதும் கொண்டிருக்கும். தலைவனை என்னிடமிருந்தும் பொது சமுதாயத்திலிருந்தும் விலகிச் சென்றுவிடும் போக்கை அது எப்போதும் காட்டும். எல்லாச் சிறுவர்களும் பனிக்காலத்தில் பனிக்கட்டிச் சறுக்கு விளையாட்டில் (ஸ்கேட்டிங்) ஆர்வம் கொண்டவர்களாய் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இந்த ஆர்வம் அவர்களைத் தனி வகையான, பிரத்தியேகமான ஒரு விஷயத்தில் இயல்பாகவே அடைத்து வைக்கிறது. ஆனால் வெவ்வேறு வயதினர் கொண்ட சமுதாயம் என்னிடம் இருந்தால் அதில் ஆர்வ வகைகள் வெவ்வேறாய் இருக்கும். முதற்படி சமுதாயத்தின் வாழ்க்கை அதிகச் சிக்கலாக அமையும், அதன் தனித் தனி உறுப்பினர், இளையவர்களும் சரி, மூத்தவர்களும் சரி, அதிகக் கடுமையான முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும், இரு வகையினரும் அதிகக் கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டி வரும், எனவே, போதனை விளைவும் அதிகமாய் இருக்கும்.

வெவ்வேறு வயதினர் அடங்கிய இத்தகைய சமுதாயத்தை''யார் யாருடன் வேண்டுமானாலும் சேரலாம்'' என்ற கோட்பாட்டின் படிக் கடைசி ஆண்டுகளில் நான் அமைத்தேன். இந்தக் கோட்பாட்டினால் முதலில் நானே பயந்து

போனேன். ஆனால், இத்தகைய இயல்பான முதற்படி சமுதாயத்தில் வெவ்வேறு குழுக்களையும் வெவ்வேறு பள்ளி வேலைக் குழுக்களையும் சேர்ந்த பிரதிநிதிகள் இருப்பார்கள் என்ற நிலைமையில் இதுவே மிக இயல்பான, நலம் உள்ள தீர்மானம் என்பதைப் பின்னர் கண்டு கொண்டேன்.

இறுதி ஆண்டுகளில் முதற்படி சமுதாயத்தை இவ்வகையிலேயே ஒழுங்கமைப்பது என்று உறுதியாக முடிவு செய்தேன்.

பிரிவில் தாமே விரும்பி ஒன்றுசேர்ந்த பத்து, பன்னிரண்டு பெயர் இருந்தார்கள். இந்தக் குழு படிப்படியாகவே சேர்ந்தது. ஆனால் பொதுக் கம்யூன் உறுப்பினர் சமுதாயத்தில் இருந்த சில சிறுவர்களை எந்தக் குழுவும் தானாக விரும்பிச் சேர்த்துக் கொள்ள முன்வரவில்லை. எனக்கு இது சௌகரியமாக இருந்தது. பொது சமுதாயத்தில் எளிதில் பழகாத நபர்கள் யார் என்று நான் உடனே கண்டு கொண்டேன். ஐந்நூறு பெயரில் சுமார் பதினைந்து, இருபது சிறுவர்களை எந்தப் பிரிவும் சுயவிருப்பக் கோட்பாட்டின்படி தன்னோடு சேர்த்துக் கொள்ள விரும்பவில்லை. வழக்கமாகப் பெண்களுக்குள் உறவு பையன்களுக்குள் இருப்பது போல அவ்வளவு நட்பு உள்ளதாக இருக்காது. ஆயினும் அவர்கள் தங்கள் குழுக்களில் சேர்த்துக் கொள்ள விரும்பாத சிறுமிகளின் எண்ணிக்கை குறைவாய் இருந்தது. நூற்றைம்பது பெண்களில் மூன்று நான்கு பெயர்தான் அத்தகையவர்கள். இந்த வேறுபாட்டின் காரணம் இது தான்: சிறுவர்கள் சிறுமிகளை விட அதிகக் கோட்பாட்டு உறுதி கொண்டிருந்தார்கள். விளைவாகச் சில சமயங்களில் ஒருவனைச் சேர்த்துக் கொள்ள விருப்பம் இன்றிப் பல்வேறு சாக்குப் போக்குகள் காட்டினார்கள்— "இவன் எங்கள் ஸ்கேட்டுகளைக் கெடுத்து விடுவான், சிறுவர்களைத் துன்பப்படுத்துவான்" என்றெல்லாம். பெண்கள் தங்கள் போதிக்கும் திறனில் அதிக நம்பிக்கை கொண்டிருந்தார்கள், அதிகப் பரிவு காட்டினார்கள். எனவே சந்தேகத்துக்கு இடமான நபரைத் தங்கள் சமுதாயத்தில் சேர்த்துக் கொள்ள அதிக விரைவில் இசைந்தார்கள்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் நான் என்ன செய்தேன்? அவர்களைப் பொதுக் கூட்டத்துக்கு அழைத்து வந்து பின் வருமாறு கூறினேன்:

''இதோ பதினைந்து பெயர். இவர்களை எந்தப் பிரிவும் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லை. இதோ இருக்கிறான் ஸெம்ளினோய். இவன் முதல் பிரிவில் சேர விரும்பினான். முதல் பிரிவு இவனைச் சேர்த்துக் கொள்ள மறுத்துவிட்டது. இரண்டாம் பிரிவில் சேர விரும்பினான். இரண்டாம் பிரிவும் இவனைச் சேர்த்துக் கொள்ள மறுத்துவிட்டது. பதினைந்தாம் பிரிவில் சேர விரும்பினான். பதினைந்தாம் பிரிவும் மறுத்துவிட்டது. என்ன செய்வது?''

வழக்கமாக விவாதம் இவ்வாறு நடக்கும். ஏதேனும் ஒரு பிரிவின் பிரதிநிதி எழுந்து பின்வருமாறு சொல்லுவான்:

''முதல் பிரிவு இவனைச் சேர்த்துக்கொள்ள என்ன காரணத்தால் மறுக்கிறது?இரண்டாவது பிரிவும் அப்படியே. பதினைந்தாவதும் அப்படியே. அவை ஏன் சேர்த்துக் கொள்ள மறுக்கின்றன? அவை விளக்கம் தரக் கடமைப்பட்டவை.''

சுருக்கமாக விளக்கம் தரப்படும்.

''நீங்கள் இப்படிச் சொல்வதானால் உங்கள் பதினான்காம் பிரிவில் இவனைச் சேர்த்துக் கொள்ளுங்கள். இவனுக்குப் பொறுப்பு ஏற்றுக் கொள்ளுங்கள், இவனோடு பாடுபடுங்கள்.''

இதற்குப் பின்வருமாறு எதிர் வாதம் செய்யப்படும்.

''இவனுக்கும் எங்களுக்கும் சம்பந்தம் இல்லை. இவன் உங்கள் பிரிவில் இருந்தான். இதோ இருக்கிறானே கட்டையன். இவனை ஏதோ செய்து விடுவதாகப் பெருமை அடித்துக் கொண்டாய் அல்லவா நீ?''

ஆக, எந்தப் பிரிவும் அவனைச் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லை என்பது தெளிவாகி விடும்.

இது என் போதனையில் வளர்ந்த ''பயிர்.'' நான் இவர்களை என்ன செய்வேன்? அவனைச் சேர்த்துக் கொள்ள விரும்பாத பிரிவும் இயல்பாகவே கடினமான, உவப்பு அற்ற நிலைமையில் தவிக்கும். அதிலும் பையன் மேல் யாரும் எவ்விதக் குற்றமும் சாட்டவில்லை. வேறு பிரிவு அவனைச் சேர்த்துக் கொள்ளட்டும் என்று மட்டுமே சொன்னார்கள். அவனோ, சமுதாயத்தால் ஏற்கப்படாத நபராக நின்று கொண்டிருந்தான்.

அவன் நம்பிக்கை ஊட்டவும் ஆணை இடவும் வருங்காலத்தில் நற்செயல்களும் அருஞ்செயல்களும் ஆற்றுவதாக வாக்களிக்கவும் தொடங்குவான். அந்த நிலையில் தலைமை வகிக்

கும் நபரும் இளங் கம்யூனிஸ்ட் அலுவலக உறுப்பினர்களும் கமாண்டர்களும் வழக்கமாகப் பேசத் தொடங்கி, பையனை எந்தப் பிரிவில் சேர்ப்பது மேல் என்று சொல்லுவார்கள். இந்தப் பேச்சுக்கள் ஒரு பயனும் இன்றி முடிவது வழக்கம்.

அந்தப் பையனை விட்டு விட்டு, இவனேவ், ரொமான் சென்கோ, பெத்ரென்கோ முதலியவர்கள் விஷயத்தை எடுத்துக் கொள்வார்கள். பதினைந்து பையன்களையும் பிரிவுக்கு ஒருவனாக வினியோகிக்க முயல்வார்கள்.

அப்போது வேறொரு நிகழ்முறை தொடங்கும். இந்தப் பதினைந்து பெயரில் ஓரளவு சகிக்கக் கூடியவனைப் பொறுக்கிக் கொள்ள ஒவ்வொரு பிரிவும் முயலும். அந்த நிலையில் இடைவேளை அறிவிக்கப்படும். இடைவேளைக்குப் பின் ஏதேனும் ஒரு பிரிவின் கமாண்டர் சொல்லுவான்:

''நான் இன்னாரைச் சேர்த்துக் கொள்கிறேன்.''

எல்லோரிலும் சகிக்கக் கூடிய பையன் இப்போது மற்றவர்களைக் கவர்ந்து இழுக்கும் இரை ஆகி விடுவான். எவனை ஒருவரும் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லையோ அதே ஸெம்னிஞேய் இப்போது எல்லாப் பிரிவுகளும் விரும்பும் பண்டம் ஆகி விடுவான், ஏனென்றால் அவனைவிடப் படு மோசமான பெத்ரென்கோவும் ஷப்பவாலவும் இருப்பார்கள்.

முதல் பிரிவுக்கு அவன் கிடைப்பான். அப்போது நாங்கள் சொல்வோம்:

''நீங்கள் இவனுக்குப் பொறுப்பாளிகள். நீங்கள் இவனை வேண்டிப் பெற்றீர்கள், இவனை ஆளாக்குவது உங்கள் பொறுப்பு.''

பின்பு அடுத்தவனுக்கு வருவோம். இரண்டாமவனும் எஞ்சிய பதினன்கு பெயர்களில் மேலானவனாக இருப்பான். அவனுக்காக மறுபடி போராட்டம் நடக்கும். இவ்வாறு இரண்டு பேர் மிஞ்சும் வரை தொடர்ந்து நடக்கும். வஸ்க போய்னிக்கவ், ஷப்பவாலவ் என்னும் இந்த இருவரில் தீமை குறைந்தவனைச் சேர்த்துக் கொள்ள ஒவ்வொரு பிரிவும் முயலும்.

இந்தச் சிறுவர்களைப் பிரிவுகளில் சேர்க்கும் நிகழ்முறை எல்லோரையும் காண எனக்கு வாய்ப்பு அளித்தது. எனக்கு இவர்கள் தனிப்பட்ட சமூகமாக விளங்கினார்கள். இவர்களுடைய பெயர்களைத் தனிக் காகிதத்தில் நான் குறித்துக்

கொண்டேன். இந்தக் காகிதம் என்னிடம் எப்போதும் தயாராக இருக்கும். இப்பதினைந்து பெயரும் என் பொறுப்பில் உள்ள மிக அபாயமான நபர்கள் என்று நான் அறிந்திருந்தேன். இவர்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை ஆயினும், இன்னுரை சமுதாயத்தில் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று சமுதாயம் சுட்டியது எனக்கு முக்கியமாய் இருந்தது.

பிரிவை அமைக்கும் பையன்கள் பெத்ரென்கோவின் ஆழ்ந்த உள் இயல்பை நன்கு உணர்ந்தார்கள். அவர்கள் அவனைச் சேர்த்துக்கொள்ள விரும்பவில்லை என்றால், அவன் எனது தனிப்பட்ட கவனத்துக்கு உரியவன் என்று அர்த்தம்.

பின்னர், பெத்ரென்கோவைப் பொறுக்கி எடுத்துக் கொண்ட பிரிவு, இயல்பாகவே அவனுக்குப் பொறுப்பு ஏற்கும் என்பது எனக்கு லாபமாய் இருக்கும்.

இவ்வாறு உருவாயிற்று முதற்படி சமுதாயம். இத்தகைய முதற்படி சமுதாயம் அதிகத்திலும் அதிகமான நன்மை விளைக்கும்படி செய்வதற்கு இன்னும் மிகச் சிக்கலான துணைக் கருவிகள் தேவையாய் இருந்தன. பிரிவு ஒழுங்கமைக்கப் படும் தோரணையிலும் பாங்கிலும் இருந்தன இவை.

முதற்படி சமுதாயம்—பிரிவு—என்பது என்ன? கோர்க்கி குடியேற்றத்திலும் த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனிலும் எங்கள் நடைமுறை வேலையில் நாங்கள் இந்த நிலையை மேற்கொண்டோம்: கம்யூனின் மையமான நானும் கம்யூன்காரர்களின் எல்லா ஸ்தாபனங்களும் இளங் கம்யூனிஸ்டுகள் சங்க அலுவலகமும் கமாண்டர்களின் சபையும் பொதுக் கூட்டமும் தனி நபர்களுடன் ஒரு விவகாரமும் வைத்துக் கொள்ளாதிருக்க வழக்கமாக முயன்றோம். இது விதி முறைப்படி. இந்தத் தர்க்கத்தை உங்களுக்கு நிரூபிப்பது எனக்கு மிகவும் கடினம். இந்தத் தர்க்கத்தை இணை ஒத்த போதனைச் செல்வாக்குத் தர்க்கம் என நான் குறிப்பேன். நான் இதைப் பற்றி எழுதவே இல்லை, எனவே இதற்குச் சூத்திர வடிவத்தை நான் தேடவோ காணவோ இல்லை. அதனுல் இதை விளக்குவது எனக்கு மிகவும் கடினமாய் இருக்கும்.

இணை ஒத்த போதனைச் செல்வாக்கு என்பது என்ன?

நாங்கள் பிரிவோடு மட்டுமே விவகாரம் வைத்துக் கொள்வோம். தனிநபருடன் விவகாரம் வைத்துக் கொள்ள மாட்டோம். இதுதான் அதிகாரபூர்வமான சூத்திரம்.

எதார்த்தத்திலோ இது தனிநபர் மீதே செல்வாக்கு விளைக்கும் வடிவம் ஆகும். ஆனால் சூத்திரம் எதார்த்தத்துடன் இணை ஒத்துச் செல்கிறது. உண்மையில் நாங்கள் விவகாரம் வைத்துக் கொள்வது தனிநபருடன்தான். ஆனால் தனிநபருடன் எங்களுக்கு ஒரு காரியமும் இல்லை என்று கூறுகிறோம்.

இது எவ்வகையில் நேர்கிறது? ஒவ்வொரு தனிநபரும் தான் போதனைக்கு இலக்கு என்று உணர்வதை நாங்கள் விரும்பவில்லை. பன்னிரண்டு, பதினைந்து வயது உள்ள மனிதன் வாழ்கிறான், வாழ்க்கை இன்பத்தை அனுபவிக்கிறான், வாழ்க்கையில் ஏதோ மகிழ்ச்சியைப் பெறுகிறான், அவனுக்கு எவையோ வாழ்க்கை அனுபவங்கள் ஏற்பட்டிருக்கின்றன— இந்த எண்ணங்களையே நான் ஆதாரமாகக் கொண்டேன்.

எங்களுக்கு அவன் போதனை இலக்கு, தனக்கோ அவன் உயிர்த்துடிப்பு உள்ள மனிதன். ''நீ மனிதன் அல்ல, வருங் கால மனிதன், நீ போதனை நிகழ்ச்சி, வாழ்க்கை நிகழ்ச்சி அல்ல'' என்று அவன் உள்ளத்தில் பதிய வைப்பது எனக்கு அனுகூலமாய் இராது. ''நீ எழுத்தறிவு பெற வேண்டும், உற்பத்தியில் வேலை செய்ய வேண்டும், உற்பத்தி நிகழ்முறை யில் நீ பங்காற்ற வேண்டும் என்பதற்காக நான் உனக்குக் கற்பிக்கிறேன். ஆனால் நான் உன் போதனை ஆசிரியன் மட்டும் அல்ல. நீ குடிமகன், நான் உன் உதவியாலேயே, நீயும் சேர்ந்து உழைப்பதனாலேயே வாழ்க்கையை வழிகாட்டி நடத் தும் மூத்தவன் என்று மாணவன் மனதில் பதியவைக்க நான் முயன்றேன். அவன் வெறும் மாணவன். அதாவது வெறும் போதனை நிகழ்ச்சி, சமூக நிகழ்ச்சியோ தனிநபரோ அல்ல என்ற எண்ணத்தை ஏற்படுத்த நான் அவ்வளவாக முயலவில்லை. உண்மையிலோ எனக்கு அவன் போதனை நிகழ்ச்சிதான்.

பிரிவு விஷயமும் இப்படியே. பிரிவு சிறு சோவியத் மையக் குழு என்றும் அதற்குப் பெருத்த சமூகப் பணிகள் உள்ளன என்றும் நாங்கள் கூறினோம். அதற்கு சமூகப் பணிகள் உண்டு, கம்யூனை முடிந்த வரை மேம்பட்ட நிலைக்குக் கொண்டுவர அது பாடுபடுகிறது. முன்னாள் கம்யூன் உறுப்பினர்களுக்கு அது உதவுகிறது. கம்யூனுக்கு வருபவர்களும் உதவி தேவைப் படுபவர்களுமான முன்னாள் அகதிகளுக்கு அது உதவுகிறது. பிரிவு, சமூக ஊழியன். சமூக வேலையின், வாழ்வின் முதற்படி மையக் குழு அது.

பையன் தான் முதன்மையாகக் குடிமகன் என்பதை உணர்வதற்கு, தான் முதன்மையாக மனிதன் என்பதை அவன் உணர்வதற்கு, தனி நபரைச் சிறப்பாகச் சிக்கலான துணைக் கருவிகளுடனேயே அணுக வேண்டும் என்று எனது சக ஆசிரியர்களும் நானும் முடிவு செய்தோம். பிற்பாடு எங்கள் வேலையில் இது மரபு ஆகிவிட்டது.

பெத்ரென்கோ தொழிற்சாலைக்குத் தாமதித்து வந்தான். மாலையில் இது பற்றிய அறிக்கை எனக்குக் கிடைத்தது. பெத்ரென்கோ இருந்த பிரிவின் கமாண்டரை அழைத்தேன்.

"உன் பிரிவைச் சேர்ந்தவன் தொழிற்சாலைக்கு நேரம் தாழ்த்துப் போனனும்" என்றேன்.

"ஆமாம். பெத்ரென்கோ தாமதம் செய்து விட்டான்."

"இனி இப்படி நேரக் கூடாது."

"நல்லது, நேராது."

இரண்டாம் தடவை பெத்ரென்கோ காலம் தாழ்த்து விட்டான். நான் பிரிவு உறுப்பினர்களைக் கூட்டினேன்.

"உங்கள் பெத்ரென்கோ இரண்டாவது தரம் தொழிற்சாலைக்கு நேரம் தாழ்த்து வந்தான்."

நான் பிரிவு முழுவதையும் கடிந்து கொண்டேன். மேற்கொண்டு அப்படி நடக்காது என்று பிரிவினர் வாக்களித்தார்கள்.

"நீங்கள் போகலாம்."

அப்பால் என்ன நடக்கிறது என்று நான் கவனித்தேன். பிரிவு தானே பெத்ரென்கோவுக்கு போதனை செய்யும்.

"நீ தொழிற்சாலை செல்ல நேரம் தாழ்த்தாய். இதன் அர்த்தம் நம்முடைய பிரிவு நேரம் தாழ்த்தது என்பது ஆகும்!" என்பார்கள் பிரிவினர்.

தனது உறுப்பினன் என்ற வகையில், சமுதாயம் அனைத்தினதும் உறுப்பினன் என்ற வகையில், பிரிவு பெத்ரென்கோவுக்குப் பெருத்த கோரிக்கைகள் விடுக்கும்.

பிரிவினிடம் இவ்வாறு கோருவதை நாங்கள் செப்பமான வடிவத்துக்குக் கொண்டு வந்திருந்தோம். உதாரணமாக கமாண்டர்கள் சபையை எடுத்துக் கொள்வோம். கமாண்டர்கள், பொதுக் கூட்டத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்கள், சபையின் அதிகாரம் பெற்ற ஆட்கள் ஆகியோர் அதில் அங்கம் வகித்தார்கள். ஆனால் எங்கள் கம்யூனில் ஒரு விதி

வழக்கில் இருந்தது: கமாண்டர்கள் சபையில் கமாண்டர்கள் இருந்தாலும் சரி, பிரிவைச் சேர்ந்த வேறு யாரேனும் இருந் தாலும் சரி, ஒன்றுதான். எல்லாப் பிரிவுகளின் பிரதிநிதி களும் சபையில் இருக்கிறார்களா என்று நாங்கள் சரிபார்ப் போம். இருக்கிறார்கள், ஆனால் கமாண்டர் வேலையாய் இருப் பதால் அவனுக்குப் பதில் வேறு ஒருவன் வந்திருக்கிறான் என்று தெரியும். இந்த நபருக்கு சபைக் கூட்டத்தில் பங்கு கொள்ளவும் பிரிவுத் தலைவன் போன்று வாக்கு அளிக்கவும் உரிமை உண்டு.

இன்னோர் உதாரணம்: வோல்கவ் திருடிவிட்டான். அந்த சந்தர்ப்பத்தில் வோல்கவைத் திருத்துவதற்குத் தனிப்பட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். ஆனால் கண்டன உரை யும் மைனஸ் மார்க்கும் வோல்கவுக்கு அல்ல, அவனுடைய பிரிவுக்கு அளிக்கப்படும்.வோல்கவ் எதையோ திருடியதற்குப் பிரிவு முழுவதும் பொறுப்பு ஏற்கும்.

மேலே சொல்வோம். பிரிவில் பெரும்பாலோர் சிறந்த மாணவர்கள். பன்னிரண்டு பெயரில் பத்து பெயர் சிறந்த மதிப்பெண்கள் பெறுபவர்கள். பிரிவு முதல் இடத்துக்கு வரும். பிரிவுக்கு ஓரளவு சலுகைகள், பரிசோ அல்லது சில தடவைகள் இசை நாடக மன்றம் செல்லும் இன்ப வாய்ப் புக்களோ கிடைக்கும். ஒவ்வொரு நாளும் எங்களிடம் நாடக மன்ற டிக்கெட்டுகள் கொஞ்சம் இருக்கும். பிரிவு முழுவதும் நாடகத்துக்குப் போகும். சிறந்த மதிப்பெண்கள் பெற்ற வர்களும், பெறாதவர்களும், மோசமான மதிப்பெண்கள் பெற்றவர்களும் கூட, நாடக மன்றம் செல்வார்கள். பிரி வுக்குக் கிடைத்த சலுகையை அவர்கள் அனுபவிப்பார்கள்.

இது நியாயம் அற்றதாகத் தோன்றலாம்.உண்மையிலோ இது மிகவும் பயன் உள்ளது. ஏனென்றால், பத்து சிறந்த மாணவர்களோடு நாடக மன்றம் செல்லும் பேத்யாவுக்குச் சங்கடமாய் இருக்கும். அவன் இதற்குத் தகுதி பெறவில்லை. அவனுடைய தோழர்கள் தகுதியால் பெற்றதை அவன் அனுபவித்தான், பெற்றான். அவன் மௌனமாகச் சங்கற்பம் செய்து கொள்வான். அடுத்த மாதம் உயிரைக் கொடுத்து உழைத்துச் சிறந்த மதிப்பெண்கள் கட்டாயம் பெற்று விடு வான்.

சில வேளைகளில் இந்தப் பேத்யா என்னிடம் வருவான். ''என்னை வேறு பிரிவுக்கு மாற்றுங்கள். இந்தப் பிரிவில் எல்லோரும் சிறந்த மாணவர்கள். அவர்கள் எல்லோரும் நாடக மன்றம் போகிறார்கள். 'இந்தா, டிக்கெட்டு. இது வீணாகப் போக வேண்டுமா என்ன?' என்று என்னிடம் சொல்லு கிறார்கள். எனக்கு வேண்டாம்'' என்பான்.

பிரிவின் வாயிலாகத் தனி மனிதனை இவ்வாறு முன்னேறச் செய்வது எங்களுக்கு மிகவும் உதவிற்று.

பிரிவில் உள்ள பன்னிரண்டு பெயர்களில் ஐந்து பெயர் நன்றாக, முறைப்படி வேலை செய்து, மற்ற ஏழு பெயரும் பிரிவு கடைசி இடத்துக்கு இறங்கும் அளவுக்கு மோசமாக வேலை செய்தால், பிரிவு முழுவதும் அதற்குப் பொறுப்பு ஏற்றது.

எங்கள் கம்யூனில் 35 முதல் 45 வரை பிரிவுகள் இருந் தன. ஒவ்வொரு மாதமும் எல்லாத் துறைகளிலும் சிறந்த இடம் பெற்ற பிரிவு முதலாவது என அறிவிக்கப்பட்டது. மோசமான இடம் பெற்ற பிரிவோ, கடைசியானது என்று அறிவிக்கப்பட்டது. வரைபடத்தில் இது தெளிவாகக் காட்டப் பட்டது. ஒவ்வொரு மாதமும் இரண்டாம் தேதியன்று கூட்டம் கூட்டப்பட்டது. ''எழுந்திருக்க—விரைப்பாய் நிற்க!'' என்ற ஆணை இடப்பட்டதும், முந்திய மாதத்தின் சிறந்த பிரிவு இந்த மாதத்தின் சிறந்த பிரிவுக்கு வெற்றியாள ருக்கு உரிய கொடியைக் கூட்டத்தினர் முன் கொடுத்தது. இது தனிப்படத் தயாரிக்கப்பட்ட, விலைமிக்க, நேர்த்தியான கொடி. பிரிவு அதைத் தன் உறங்கறையில் வைத்திருந்தது. இவ்வாறே, அன்றாட வாழ்க்கை ஒழுங்கிலோ, கட்டுப் பாட்டிலோ, வேறு எதிலாவதோ போட்டி நடந்தது என்று வைத்துக் கொள்வோம். போட்டி முடிவுகள் ஆறு நாட் களுக்கு ஒரு முறை கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டன. முதல் ஏழு சிறந்த பிரிவுகளுக்கு நாடக மன்றம் செல்ல டிக்கெட்டுகள் வழங்கப்பட்டன. ஒவ்வொரு நாளும் நாடக மன்றத்தில் முப்பத்தோர் இடங்கள் எங்களுக்காக ஒதுக்கப் பட்டன. சிறந்த பிரிவுக்கு ஏழு, அடுத்ததற்கு ஆறு, மூன்றா வதற்கு ஐந்து, பின்பு வரிசைப்படி நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று என்று டிக்கெட்டுகள் வினியோகிக்கப்பட்டன. அதா வது, ஆறு நாட்கள் ஒவ்வொரு நாளும் ஏழு டிக்கெட்டுகள்

முதல் பிரிவுக்குக் கிடைத்தன. மற்ற ஆறு பிரிவுகளுக்கும் வரிசைப்படி ஆறு முதல் ஒன்று வரை டிக்கெட்டுகள் நாள் தோறும் கிடைத்தன. இந்த டிக்கெட்டுகள் யாருக்குக் கொடுக் கப்படுகின்றன, பிரிவை முன்னேற்றுபவர்கள் டிக்கெட்டுகள் பெறுகிறார்களா அல்லது பின்னே இழுப்பவர்கள் பெறுகிறார் களா என்று நாங்கள் கவனிக்கவில்லை. இது எங்கள் வேலை அல்ல, பிரிவின் வேலை. எல்லோரும் நாடகத்துக்குப் போனார் கள். நாள்தோறும் நாடக மன்றத்துக்கு பஸ் போயிற்று. டிக்கெட்டு வைத்திருப்பவர்கள் பஸ் அருகே போய் நின்றார்கள். முறைவேலைக் கமாண்டர், ஒவ்வொருவனிடமும் டிக்கெட்டும் நல்லுடையும் பணமும் இருக்கின்றனவா என்று சரி பார்த்தான். பணம் நாடக மன்றச் சிற்றுண்டிச் சாலை யில் ஏதேனும் வாங்கித் தின்பதற்கு. நாடக மன்றத்துக்குச் செல்பவர்களிடம் கோரப்பட்டவை, டிக்கெட்டு, நல்லுடை, பணம், இவை மூன்றுமே. பிரிவில் ஒருவன் முதல்வனா கடைசி யானவனா என்று ஒருவரும் கேட்கவில்லை.

மற்ற எல்லா சந்தர்ப்பங்களிலும் பிரிவு இதே முக்கியத் துவம் பெற்றிருந்தது. உதாரணமாக, துப்புரவு செய்யும் வேலையின் வினியோகத்தை எடுத்துக் கொள்வோம். கம்யூ னில் கூட்டிப் பெருக்கும் பணியாளர்கள் இல்லை. கட்டிடம் பெரிய சாலையில் இருந்தது. பல சோவியத், அயல் நாட்டுப் பிரதிநிதிக் குழுக்கள் எங்கள் கம்யூனுக்கு வந்த வண்ணமாய் இருந்தன. எனவே கட்டிடத்தைத் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டி இருந்தது. 1935ல் இருநூறாவது பிரதிநிதிக் குழு எங்கள் கம்யூனுக்கு வருகை தந்ததை ''இன்டூரிஸ்ட்'' நிறுவனம் கொண்டாடி எங்களைக் கௌரவித்தது. இது கம்யூனைப் பளிச்சென்று துப்புரவாக வைத்துக் கொள்ள உதவியது. ஆனால் எப்போதும் துப்புரவாக வைத்திருக்கவும் தரையை மெழுகி வண்ணம் பூசவும் கதவுப் பிடிகளையும் நிலைக் கண்ணாடிகளையும் சுத்தமாகத் துடைக்கவும் புதிதாய்ப் பறித்த பூக்களைச் சோடிக்கவும் மிக நிறைய உழைக்க வேண் டியிருந்தது. இந்த வேலை தனி மனிதர்களாலோ, துப்புரவுப் பணியாளர்களாலோ அல்ல, எல்லோராலும் சேர்ந்து செய் யப்பட்டது. காலை ஆறேகால் முதல் ஆறே முக்கால் மணி வரை கம்யூனின் ஐந்நூறு உறுப்பினர்களும் துப்புரவு வேலை செய்தார்கள்.

இவ்வளவு பெரிய வேலை நன்ருக நடக்கும்படி ஒழுங்க மைப்பது கடினமாய் இருந்தது. வேலையில் ஓரளவு அனுபவம் தேவைப்பட்டது. இந்த வேலை ஆறு மாதங்கள் முன்னதாக வே பிரிவுகளுக்குள் பங்கிடப்படும் அளவுக்கு ஒழுங்கமைப்பு செய்வைப் பட்டு விட்டது. வேலையை அடிக்கடி மாற்றுவது கூடாததாய் இருந்தது. ஒரு பிரிவுக்கு பிரஷ், வாளி, துணிச் சுருணை ஆகியவை கொடுக்கப்பட்டன. இன்னெரு பிரிவு தரையைப் பெருக்கி மெழுகவும் வண்ணம் பூசவும் தேவை யான சாதனங்களைப் பெற்றது. கக்கூசைச் சுத்தம் செய் வதற்கு வேறு வகைக் கருவிகளும் சாதனங்களும் தரப்பட் டன. நாடக மன்றத்தைத் துப்புரவு செய்வதற்கு, தரையைச் சுத்தம் செய்யவும் வண்ணம் பூசவும், இருக்கைகளைத் தூசி போகத் துடைக்கவும் வேண்டிய சாதனங்கள் அளிக்கப்பட் டன. வேலைகளைப் பங்கிடும் போது எந்தப் பிரிவு நல்லது, எது மோசமானது என்பது கருத்தில் கொள்ளப்பட்டது. உதார ணமாக, சிறந்த பிரிவுக்குக் கக்கூசைத் துப்புரவு செய்து ஒழுங்கு படுத்தும் வேலை தரப்பட்டது. இந்த வேலைக்குப் பன்னிரண்டு நிமிடங்கள் தேவைப் பட்டன. மோசமான பிரிவுக்கு நாடக மன்றத்தைத் துப்புரவு செய்யும் வேலை கொடுக்கப்பட்டது. அதற்கு மிக நீண்ட நேரம் வேண்டியிருந் தது. மன்றத்தைச் சுத்தம் செய்து ஒழுங்கு படுத்துவதற்கு எல்லோரும் வியர்வை சிந்துவது அவசியமாய் இருந்தது. வழக்கமாக மோசமான பிரிவுக்கு மிகத் துப்புரவான, ஆனுல் அளவில் பெரிய வேலை தரப்பட்டது. வேலை மோசமாகச் செய் யப்பட்டால் பிரிவுக் கமாண்டர் மட்டுமே காவலில் வைக்கப் பட்டான். வெப்பக் குழாய்மேல் படிந்திருந்த தூசியைத் துடைக்காதவன் எவன் என்று நாங்கள் விசாரிக்கவில்லை. கமாண்டர் காவல் தண்டனை பெற்ருன். பிரிவினர் செய்த குற்றத்துக்குத் தண்டனையை அவன் அடைந்தான்.

வாழ்க்கையின் எல்லா சந்தர்ப்பங்களிலும் கம்யூனில் மூத்தவன் என்ற முறையில் நான் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த இடமாக விளங்கியது பிரிவு. ஆனுல் பிரிவின் உளப்பாங்கைக் கவனமாகச் சரிபார்ப்பது எனக்குக் கடின மாய் இருந்தது. பிரிவுடன் இணைக்கப்பட்டிருந்த போதனை ஆசிரியனின் தனித்தன்மை இங்கே முதன்மையாகச் செயல் பட்டது. இதைப் பற்றி நாம் பின்பு பேசுவோம்.

முதற்படி சமுதாயத்தின் முக்கியத்துவம் பற்றி நான் விரிவாகப் பேச முடியும், ஆனால் அதற்கு எனக்கு நேரம் இல்லை. இன்னும் ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய பள்ளிகளில் இத்தகைய முதற்படி சமுதாயத்தைச் சரி பார்ப்பதற்கு வாய்ப்பு குறைவு. அங்கே வேறு ஏதாவது முறை இருக்க வேண்டும். ஆயினும் பின்வரும் விஷயத்தில் நான் உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கிறேன். முதலாவதாக, முதற்படி சமுதாயம் பொது சமுதாயத்தை அகற்றி அதன் இடத்தைக் கைப்பற்றிக் கொள்ளக் கூடாது. இரண்டாவதாக, முதற்படி சமுதாயம் தனிநபருடன் தொடர்பு கொள்வதற்கான முக்கிய வழியாக இருக்க வேண்டும். இது எனது பொதுத் தேற்றம். ஆனால் அதிக விவரமான அணுகுமுறை, கம்யூனுக்கு ஒன்றாகவும் பள்ளிக்கு முற்றிலும் வேறாகவும் இருக்க வேண்டும்.

இத்தகைய முதற்படி சமுதாயத்தின் வாயிலாகவே நாங்கள் அதிகார பூர்வமாகத் தனிநபருடன் தொடர்பு கொண்டோம். இதுவே துணைக் கருவியாக இருந்தது. உண்மையில் நாங்கள் தனி மாணவன் மீதே முதன்மையாகக் கவனம் செலுத்தினோம்.

தனி மாணவர்களுடன், தனிநபருடன் வேலையை நானும் என் சக ஊழியர்களும் எப்படி ஒழுங்கமைத்தோம்?

தனி நபருடன் வேலை செய்வதற்கு அவனை அறிந்திருக்க வேண்டும், செயற்கையாக உருவாக்கக் கூடாது. என்னுடைய கற்பனையில் தனிநபர்கள், சமுதாய அளவு இன்றி, தனித் தனிக் கடலைகள் போலச் சிதறப் போகிறார்கள் என்றால், இந்த சமுதாய அளவுகோல் இல்லாமல் நான் அவர்களை அணுகப் போகிறேன் என்றால், என்னால் அவர்களைச் சமாளிக்க முடியாது.

என்னிடம் ஐந்நூறு தனிநபர்கள் இருந்தார்கள். நிலைமை மிக முக்கியமானதாக இருந்தது. முதல் ஆண்டு, தொடக்க நிலை போதனை ஆசிரியன் என்ற காரணத்தால் நான் வழக்கமான தவறு செய்தேன். சமுதாயத்திலிருந்து சிதறி விலகிய தனிநபர் மேல் நான் கவனம் செலுத்தினேன். எனது பார்வை சரியாக இல்லை. அதை நான் மிக அபாயமான இடங்களில் செலுத்தினேன். இந்த அபாயமான இடங்களைச் சீர்படுத்துவதில் நான் முனைந்தேன். திருடியவன், போக்கிரித்

தனம் செய்தவன், சமுதாயத்துக்கு எதிராகச் சென்றவன், ஓடிப் போக விரும்பியவன், முதலியவர்கள் இயல்பாகவே எனது தனிப்பட்ட கவனத்துக்கு உள்ளானூர்கள். நான் போதனை ஆசிரியன், தனி நபரைப் பண்படுத்தத் திறன் உள்ளவன் என்று நம்பினேன், இந்த நம்பிக்கையுடனேயே இவ்வாறு செய்தேன். அதாவது, ஒவ்வொருவனையும் அழைத்து, ஒவ்வொருவனோடும் உரையாடி, அறிவுறுத்தினேன், இத்தகைய பிற நடவடிக்கைகளை மேற்கொண்டேன்.

கடைசி ஆண்டுகளில் நான் இந்தத் தோரணையை மாற்றிக் கொண்டேன். விசேஷமாகக் கவனத்தை ஈர்ப்பவன் அல்ல, என்னிடமிருந்து ஒளிந்து மறைபவனே என் வேலையில் மிக மிக அபாயமான நபர் என்பதை நான் கண்டுகொண்டேன்.

நான் இந்த முடிவுக்கு ஏன் வந்தேன்? ஏனென்றால், அதற்குள் பதினைந்து மாணவர் குழுக்களைப் பயிற்றி வெளியே அனுப்பியிருந்தேன். பயிற்சி முடிந்து வெளியேறிய இந்த மாணவர்களை நான் கவனித்து வந்தேன். மிக அபாயமானவர்கள், கெட்டவர்கள் என்று நான் கருதியவர்களில் பலர் வாழ்க்கையில் செயலூக்கத்துடன், சோவியத் முறைக்கு இணங்க முன்னேறியதை நான் கண்டேன். சில வேளைகளில் அவர்கள் தவறுகளும் செய்தார்கள். ஆயினும் போதனையின் விளைவுகள் என்ற முறையில் மொத்தத்தில் அவர்கள் எனக்குத் திருப்தி அளித்தார்கள். என்னிடமிருந்து ஒளிந்து மறைந்து, சமுதாயத்தில் கவனத்துக்கு உள்ளாகாமல் இருந்தவர்களோ, சில வேளைகளில் வாழ்க்கையில் கட்டுப்பெட்டிகளாக நடந்து கொண்டார்கள். விரைவில் மணம் செய்து கொண்டார்கள், ''குடும்பத்தைப்'' பெற்றுப் பராமரித்தார்கள், வேலையில் பல வகைத் தந்திரங்கள் செய்து வசதிகள் ஏற்படுத்திக் கொண்டார்கள், இளங் கம்யூனிஸ்டுகள் சங்கத்திலிருந்து விலகினூர்கள், சமூகத் தொடர்புகள் எல்லாவற்றையும் இழந்தார்கள், கவர்ச்சி அற்ற வாழ்வு வாழ்ந்தார்கள். அவர்கள் என்ன மாதிரி ஆட்கள், அவர்களுடைய கோட்பாடுகள் என்ன என்று சொல்ல முடியாதிருந்தது. சில நபர்கள் மெதுவாக, ஆழ்ந்த அழுகலுக்கு உள்ளானதையும் நான் கவனித்தேன். ஒருவன் வீடு கட்டத் தலைப்பட்டான், இன்னொருவன் பன்றிகள் வளர்க்கத் தொடங்கினான். கூட்டங்

களுக்குப் போவதில்லை, செய்தித்தாள்கள் படிப்பதில்லை. இன்னும் ஒருவனோ, சில்லறைக் கள்ள வியாபாரம் கூடச் செய்யலானான்.

இத்தகைய நிகழ்ச்சிகளை முதல் ஆண்டுகளில் கண்டதும், என்னிடமிருந்து ஒளிந்து மறைபவன், என் கண்ணில் படாதிருக்க முயல்பவன்தான் நான் தனிப்பட்ட கவனம் செலுத்த வேண்டிய மிக அபாயமான நபர் என்ற ஆழ்ந்த உறுதி எனக்கு ஏற்பட்டது.

எனக்கு இந்த உறுதி ஏற்பட வழி வகுத்தவர்கள் கம்யூன் உறுப்பினர்களே. தன் பிரிவில் உட்கார்ந்து பாடங்களை உருப் போடுபவன், கூட்டங்களில் பேசாமலும் தன் கருத்தை வெளியிடாமலும் இருப்பவன், தீ விபத்து ஏற்பட்டாலும் கூடத் தன் அறையில் உட்கார்ந்து நெட்டுருப் போடுவது அல்லது வானொலிப் பெட்டியைச் செப்பனிடுவது என்று இருப்பவன் எல்லோரிலும் அபாயமானவன், ஏனென்றால் மற்றவர்கள் பார்வையில் படாமல் கமுக்கமாகத் தன் போக்கில் போகவும் எந்தப் பாதிப்புக்கும் போதனைக்கும் ஆளாகாமல் வாழ்க்கையில் ஈடுபடவும் வேண்டிய அறிவும் சாதுரியமும் அவனிடம் போதிய அளவு இருக்கின்றன என்று சில சந்தர்ப்பங்களில் கம்யூன் உறுப்பினர் வெளிப்படையாகக் கூறினார்கள்.

நான் ஓரளவு வெற்றி அடைந்ததும், திருட்டும் போக்கிரித்தனமும் என்னை ஆட்டி அலைப்பது நின்றதும், என் போதனை வேலையின் குறிக்கோள் இரண்டு, மூன்று திருடர்களையும் போக்கிரிகளையும் ஒழுங்குபடுத்துவது அல்ல, குறித்த வகையான குடிமகனைப் போதித்து உருவாக்குவது, உற்சாகமும் செயலூக்கமும் உயிர்த்துடிப்பும் உள்ள சுபாவத்தை ஏற்படுத்துவது தான் என் வேலையின் உபயோகமான குறிக்கோள் என்பதை நான் புரிந்து கொண்டேன். நான் ஒரு தனிநபரை ஒழுங்குபடுத்துவதோடு நின்று விடாமல், ஒவ்வொருவரையும் போதித்துப் பயிற்றினால்தான் இந்தக் குறிக்கோள் நிறைவேற முடியும் என்பதை நான் கண்டு கொண்டேன்.

நான் முதலில் செய்த தவற்றைப் பள்ளியில் சில ஆசிரியர்கள் செய்கிறார்கள். எதிர்ப்பவர்கள், அல்லது பின்தங்குபவர்கள் ஆகியோருடன் பாடுபடுவது தங்கள் பொறுப்பு என்றும் ''முறையானவர்கள்'' எனப்படுபவர்கள் தாமே முன் செல்வார்கள் என்றும் நினைக்கும் ஆசிரியர்கள் பள்ளிகளில்

இருக்கிறார்கள். ஆனால் இந்த ''முறையானவர்கள்'' எங்கே முன் செல்கிறார்கள், எங்கே வெளியேறுகிறார்கள் என்பது கேள்வி.

கம்யூன் உறுப்பினர்கள் தக்க சொற்களையும் எனக்குத் தந்து உதவினார்கள். சமுதாயத்தின் நிலையான பகுப்பாய்வு ஒரு காகிதத்தில் குறிக்கப்பட்டுக் கம்யூன் முழுவதற்கும் அறிவிக்கப்பட்டு வந்தது. இதை நான் அல்ல, கமாண்டர்கள் சபையே செய்து வந்தது. கம்யூன் உறுப்பினர்கள் எல்லோரும் என் பார்வையில் இரண்டு குழுக்களாகப் பிரிந்திருந்தார்கள்: 1) செயலாற்றும் ஊழியர்கள், 2) சேமிப்பு ஊழியர்கள்.

செயலாற்றும் ஊழியர்கள் என்பவர்கள், எல்லோருக்கும் வெளிப்படையாகத் தெரியும் விதத்தில் கம்யூனை நடத்தியவர்கள், ஒவ்வொரு பிரச்சினையிலும் உணர்ச்சியுடன், ஆவேசத்துடன், பற்றுறுதியுடன், கோரிக்கைகளுடன் ஈடுபடுபவர்கள். வழக்கமான அர்த்தத்தில் இவர்கள் கம்யூனை நடத்தினார்கள். ஆனால் ஏதேனும் ஆபத்து நேர்ந்தால், பெரிய இயக்கம் தொடங்கினால், அல்லது ஏதேனும் சச்சரவைச் சமாளிக்க வேண்டியிருந்தால், அவர்களிடம் சேமிப்பு ஊழியர்கள் இருந்தார்கள். இவர்கள் இன்னும் செயலாற்றுபவர்கள் அல்ல, ஆனால் செயலாற்றுபவர்களின் உதவிக்குத் தாமதம் இன்றி வருபவர்கள். இந்தச் சேமிப்பு ஊழியர்கள் செயலாற்றும் ஊழியர்களின் இடத்தில் எப்போதும் வேலை செய்யக் கூடியவர்கள்.

இவர்கள் தவிர, உறுதியாகப் பின்பற்றும் குழுவும் என்றால் குறிக்கப்பட்டிருந்தது. இதில் இருந்தவர்கள் இன்னும் வயது வராத சிறுவர்கள். ஆனால் உடற்பயிற்சியிலும் நிழற்பட வட்டத்திலும் சுவர்ச் செய்தித்தாளிலும் பங்கெடுத்துக் கொண்டார்கள். மூத்தவர்களைப் பணிவுடன் பின்பற்றினார்கள்.

என்னுடைய கம்யூனில் அழுகும் செயற்குழுவைச் சேர்ந்த சில நபர்கள் இருந்தார்கள். இந்த மாதிரி நபர் கமாண்டராகவும் கமிட்டி உறுப்பினராகவும் இளங் கம்யூனிஸ்டுகள் சங்கக் கமிட்டி உறுப்பினராகவும் இருப்பான். ஆனால் அவனுடைய பார்வையும் நடையுமே எனக்குச் சந்தேகம் உண்டாக்கும். மற்றப் பையன்களும் நானும்—எங்களுக்குச்

சான்றுகள் கூடத் தேவைப்படவில்லை—ஏதோ நுட்பமான சூழ்ச்சி நடப்பதைக் காண்போம். அவன் ஓரிடத்தில் சதி செய்வான், இன்னோர் இடத்தில் அவதூறு செய்வான், வேலையில் கழப்புவான், இயந்திரத்தைத் துடைத்து ஒழுங்கு படுத்த மாட்டான், அவனுக்குப் பதில் எவனோ சிறுவன் அதைத் துடைத்துச் சரிப்படுத்தி வைப்பான், மறு நாள் இதே கதை மீண்டும் நடக்கும். சலுகைகள் அனுபவிப்பதி லும் வேலையில் கழப்புவதிலும் எஜமானத் தோரணையிலும் தொடங்கும் இந்த அழுகல். சில வேளைகளில் இந்த அழுகல் இன்னும் பெருத்த அளவுகளை எட்டிவிடும். திடீரென்று ஒரு நாள் அந்த நபரிடம் சாராய நாற்றம் அடிக்கும். எங்கள் கம்யூனில் மது அருந்துவது கண்டிப்பாகத் தடை செய்யப் பட்டிருந்தது. ஒருவன் முதல் தரம் குடித்ததுமே கம்யூ னிலிருந்து வெளியேற்றப்பட வேண்டும் என்பது சட்டம். இந்த ஆளிடம், சாராய நாற்றம் அடிப்பதன் காரணத்தைக் கேட்போம்.

''நான் நகரத்துக்குப் போயிருந்தேன், ஒரு குவளை பீர் சாப்பிட்டேன்.''

ஒரு குவளை பீர், அவ்வளவு கெடுதல் அல்ல. ஆனால் அவன் குடித்தது பீர் தானா என்ற சந்தேகம் உண்டாகும்.

இதுதான் அழுகும் செயற்குழு. நாங்கள் ஆட்களின் பெயர் களை அதிகார பூர்வமாக இந்தக் குழுவில் குறிப்பதில்லை. ஆனால் இளங் கம்யூனிஸ்டுகள் சங்கக் கமிட்டிச் செயலாள னும் இரண்டு மூன்று இளங் கம்யூனிஸ்டுகளும் இந்த நபரிடம் ஏதோ அழுகல் தொடங்கிவிட்டது என்று அறிந்திருந்தார் கள்.

இன்னும் ஒரு குழுவினர் இருந்தார்கள். கம்யூன் உறுப்பி னர்கள் இவர்களைக் ''காலாடிகள்'' என்று அழைத்தார்கள். இதன் அர்த்தம் என்ன என்றால், பைகள் ஜாக்கிரதை, முழுக் கவனமும் இவர்கள்மேல் இருக்கட்டும் என்பதாகும். இவர் கள் பணப்பெட்டியை உடைக்கவும் தொழிற்சாலையில் புகுந்து இயந்திரப் பகுதிகளைத் திருடவும் வல்லவர்கள். வழக்கமாக இவர்கள் புதிதாகச் சேர்ந்த பெரிய பையன்கள். இத்தகைய வர்கள் பதினைந்து, இருபது பெயர் இருந்தார்கள். அவர்கள் ஒன்றும் செய்யவில்லை, ஆயினும் அவர்கள் ''காலாடிகள்'' என்பதும் அவர்களைப் பார்வையிலிருந்து தப்ப விட்டால்

ஏதாவது குளறுபடி செய்து விடுவார்கள் என்பதும் எல்லோருக்கும் தெரிந்திருந்தன.

முடிவாக, பிரெஞ்சுப் புரட்சியிலிருந்து கிடைத்த ஒரு சொல் ''புதைசேறு'' என்பது. இந்தப் பெயர் கொண்ட குழுவில் ஓர் ஐம்பது பேர் இருந்தார்கள். இவர்கள் எப்படியோ அளவுமானப்படி வேலே செய்து விடுவார்கள்.

ஆனுல் அவர்களுடைய வாழ்க்கை நோக்கம் என்ன, அவர்களுடைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் என்ன, கம்யூனைப் பற்றி அவர்கள் என்ன நினைக்கிருர்கள் என்று தெரிந்து கொள்ள முடியாது.

இந்த நபர்களைக் கவனிப்பது, இவர்களுடைய இயக்கத்தைக் கூர்ந்து நோக்குவது தனிப்பட்ட மகிழ்ச்சியும் இன்பமும் அளித்தது. எங்கள் கம்யூனில் பெத்ரோவ் என்பவன் ''புதை சேற்றில்'' இருந்ததை நாங்கள் கண்டோம். ''நீ 'புதை சேற்றில்' இருக்கிருய், ஒன்றும் செய்ய மாட்டேன் என்கிருய், எதிலும் உனக்கு ஆர்வம் இல்லே, எந்த விஷயத்திலும் அக்கறை இல்லே. நீ வரண்டவன், உற்சாகம் இல்லாதவன். எதுவும் உனக்குக் கிளர்ச்சி ஏற்படுத்துவது இல்லே'' என்று நாங்கள் அவனிடம் சொன்னுேம். பிரிவு அவனே மேற்கொண்டு செயலில் ஈடுபடுத்தியது. சில நாட்களில் அவன் பயனுள்ள வேலே செய்தான். எதிலோ அக்கறை காட்டினுன். பின்பு இன்னெரு முறை தன் திறமையைக் காட்டினுன். இதன் பிறகு அவன் சேமிப்பு ஊழியர் குழுவிலோ பின்பற்றும் ஊழியர் குழுவிலோ சேர்ந்து விட்டான்.

''புதைசேற்று'' மனப்பாங்கையும் ''காலாடிகள்'' மனப்பாங்கையும் அறவே ஒழிப்பதுதான் எங்கள் பணியாக இருந்தது.

''காலாடிகளுடன்'' எதிரெதிரான போர் நடந்தது. இதில் ஒளிவு மறைவு எதுவும் இல்லே. ''காலாடிகளே'' நேரடியாகத் தாக்கி வசப்படுத்தினுேம். அற்ப விஷயங்களுக்கு எல்லாம் அவர்களோடு பேசினுேம், பொதுக் கூட்டத்துக்கு அவர்களே அழைத்தோம். இது விடாப்பிடியான வேலே. கோரிக்கைகள் விடுக்கும் வேலே.

கடினமான நபர்களே, அதாவது ''புதைசேற்றுக்'' குழுவினரையும் அழுகும் செயற் குழுவினரையும் பொறுத்த

வரை, ஒவ்வொரு நபர் விஷயத்திலும் வெவ்வேறு வகையான வேலே செய்வது அவசியமாய் இருந்தது.

தனிநபர் வேலையை எடுத்துக் கொள்வோம். இங்குதான் ஆசிரியர் சமுதாயம் மிக முக்கியக் கருவியாக விளங்குகிறது. ஆசிரியர் சமுதாயத்தின் வேலையை எவையேனும் துல்லியமான சொற்களால் வரையறுப்பது மிகக் கடினம். ஆசிரியர் சமுதாயத்தின் வேலே நமது போதனை இயலில் யாவற்றிலும் கடினமான பிரச்சினை போலும். நம் நாட்டில் போதனை இயல் நூல்களில் எல்லா இடங்களிலும் ''போதனை ஆசிரியன்'' என்னும் சொல் ஒருமையிலேயே காணப்படுகிறது: ''போதனை ஆசிரியன் இத்தகையவனாக இருக்க வேண்டும். போதனை ஆசிரியன் இவ்வாறு செயல்பட வேண்டும்,'' ''போதனை ஆசிரியன் இவ்வாறு உரையாட வேண்டும்.''

போதனை இயல் தனித்த போதனை ஆசிரியனை நம்பி இருக்க முடியும் என்று என்னால் எண்ண முடியவில்லை. வழிகாட்டும் திறனும் கூர்ந்த நோக்கும், விடா முயற்சியும் கூரிய அறிவும் அனுபவமும் உள்ள திறமைசாலியான ஆசிரியன், சுருங்கக் கூறின் நல்ல ஆசிரியன் இல்லாவிட்டால் நமக்குக் கஷ்டமாய் இருக்கும் என்பது உண்மையே. ஆனால் நம் மூன்றரைக் கோடிக் குழந்தைகளுக்கும் இளைஞர்களுக்கும் போதனை அளிப்பதற்கு இம்மாதிரி ஆசிரியர்களின் தற்செயலான சித்திரிப்பை நம்பி இருக்க முடியுமா?

தனி ஆசிரியனை நம்பி இருப்பது என்றால், நல்ல ஆசிரியன் நல்ல போதனை அளிப்பான், மோசமானவன் மோசமான போதனை அளிப்பான் என்பதை உணர்வுபூர்வமாக ஏற்றுக் கொள்வதாக அர்த்தப்படும். திறமையுள்ள போதனை ஆசிரியர்கள் எத்தனை பெயர், திறமை இல்லாதவர்கள் எத்தனை பெயர் என்று யார் கணக்கு எடுத்திருக்கிறார்கள்? பிறகு, இன்னொரு பிரச்சினையைத் தீர்ப்போம், வாருங்கள்— போதனை ஆசிரியன் தானே போதனை பெற வேண்டும். அவன் எவ்வாறு போதனை அளிக்கப்பட வேண்டும்? அவனுடைய சுபாவம் எத்தகையது? அவன் எதை வழிகாட்டியாகக் கொண்டிருக்கிறான்? அவனுடைய வாழ்க்கை நோக்கம் என்ன? மைனஸ் மார்க் பெறத்தக்க போதனை ஆசிரியர்கள் எத்தனைபெயர் என்று ஒருவரும் கணக்கு எடுக்கவில்லை...

ஆனால் நாமோ, தனியான போதனை ஆசிரியனை நம்புகிறோம்.

என்னுடைய வாழ்க்கையில் நான் முதன்மையாக போதனை நோக்கங்களையும் பிரச்சினைகளையுமே அடிப்படையாகக் கொள்ள வேண்டி இருந்தது. தாங்களே போதனை பெறாத ஆசிரியர்கள் என்னிடம் வந்து சேர்ந்தபோது நான் பெரிதும் துன்பப்பட்டேன். ஆயுளிலும் வேலையிலும் அனேக ஆண்டுகளை நான் வீணாக்கினேன், ஏனென்றால், போதனை பெறாத இந்த போதனை ஆசிரியன் யாரையாவது போதித்துப் பயிற்றுவான் என்று நம்புவது பெருத்த அறிவீனம். தானே போதனை பெறாத போதனை ஆசிரியன் இருப்பதைவிட, போதனை ஆசிரியன் இல்லாமல் இருப்பதே மேல் என்ற ஆழ்ந்த உறுதி பின்னர் எனக்கு ஏற்பட்டது. திறமை அற்றவர்களும் போதனை பெறாதவர்களுமான நாற்பது பெயரைக் காட்டிலும் திறமையுள்ள நான்கு போதனை ஆசிரியர்கள் சமுதாயத்தில் இருப்பது மேல் என்று எண்ணினேன். திறமை அற்ற, போதனை பெறாத மனிதர்கள் சமுதாயத்தில் வேலை செய்தபோது நானே உதாரணங்களைக் கண்டேன். இம்மாதிரி வேலையின் விளைவுகள் எத்தகையவையாக இருக்க முடியும்? சமுதாயம் உருக்குலைவதாகத்தான் இருக்க முடியும். வேறு விளைவுகள் ஏற்பட முடியாது.

ஆகவே, போதனை ஆசிரியனைத் தெரிந்தெடுக்கும் பிரச்சினை மிகுந்த முக்கியமானதாக விளங்குகிறது. எப்படித் தெரிந்தெடுப்பது? எந்த அடையாளங்களைக் கொண்டு? நம் நாட்டில் இந்தப் பிரச்சினை மீது உரிய கவனம் செலுத்தப்படுவது இல்லை. எவனையும், எவனை வேண்டுமானாலும் போதனை ஆசிரியனின் பதவியில் அமர்த்தி, போதனை ஆசிரியனுக்கு உரிய சம்பளம் கொடுத்தால் போதும், அவனால் போதனை அளிக்க முடியும் என்று நம் நாட்டில் எண்ணப்படுகிறது. உண்மையிலோ, இது மிகக் கடினமான வேலை. விளைவைக் கொண்டு பார்க்கும் போது ஒருவேளை யாவற்றிலும் பொறுப்பு மிக்க வேலை. தனி மனிதனின் அதிகத்திலும் அதிகமான இறுக்கம் மட்டும் அல்ல, பேராற்றலும் பெருத்த திறமையும் இந்த வேலைக்குத் தேவை.

மோசமான போதனை ஆசிரியன் போல என் வேலைக்குத் தீங்கு செய்தவர்கள், அதைக் கெடுத்தவர்கள், பல ஆண்டு

களாக முயன்று சீராக்கியிருந்த வேலையைச் சீர்குலேத்தவர்கள் வேறு யாரும் இல்லே. எனவேதான், போதனே ஆசிரியர்களே இல்லாமல் வேலே செய்வது என்றும் உண்மையாகவே போதனே அளிக்க வல்ல ஆசிரியர்களே மட்டுமே பயன்படுத்திக் கொள்வது என்றும் கடைசி ஆண்டுகளில் நான் உறுதியாக முடிவு செய்தேன். இது எனது திட்டத்தை எதிர்பாராத விதத்தில் விரிவுபடுத்தியது.

பின்னர், தனி போதனே ஆசிரியர்கள் அறவே வேண்டாம் என்று வைத்துவிட்டேன். வழக்கமாகப் பள்ளி ஆசிரியர்களே மட்டுமே நான் பயன்படுத்தி வந்தேன். ஆனுல் அவர்களுக்கும் போதிக்கக் கற்பிப்பதற்கு நிறைய வேலே செய்ய வேண்டி இருந்தது. கணக்குப் போடவும் படிக்கவும் கடைச்சல் இயந்திரத்தில் வேலே செய்யவும் பயிற்றுவது போலவே போதனே அளிக்கப் பயிற்றுவதும் எளிது என்று நான் நம்புகிறேன். நான் அவ்வாறே பயிற்றினேன்.

இந்தப் பயிற்சியின் உள்ளடக்கம் யாது? முதன்மையாக போதனே ஆசிரியனின் சுபாவத்தைச் சீர்படுத்துவது, அவனுடைய நடத்தையைப் பண்படுத்துவது. பின்னர் அவனுடைய தனிக் கல்வி அறிவையும் திறமைகளேயும் ஒழுங்கமைப்பது. இத்தகைய கல்வி அறிவும் திறமைகளும் இல்லாமல் ஒருவனும் நல்ல போதனே ஆசிரியனுக இருக்க முடியாது, வேலே செய்ய முடியாது. ஏனென்ருல் அவன் குரல் பயிற்சி பெற்றிருக்க மாட்டான், சிறுவர்களுடன் பேச அவனுல் முடியாது, எந்த சந்தர்ப்பங்களில் எப்படிப் பேச வேண்டும் என்பது அவனுக்குத் தெரியாது. இந்தத் திறமைகள் இல்லாதவன் நல்ல போதனே ஆசிரியன் ஆகமுடியாது. நடிப்புத்திறன் இல்லாதவன், முக பாவங்களேத் தேவைக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளவும் தனது மன நிலேயை வெளிக்காட்டாமல் அடக்கிக் கொள்ளவும் இயலாதவன் நல்ல போதனே ஆசிரியனுக இருக்க முடியாது. போதனே ஆசிரியன் ஒழுங்கமைக்கவும் நடக்கவும், வேடிக்கையாகப் பேசவும், குதூகலமாய் இருக்கவும், கோபத்தைக் காட்டவும் வல்லவனுய் இருக்க வேண்டும். போதனே ஆசிரியன், தனது ஒவ்வோர் அங்க அசைவும் போதனே அளிக்கும் விதத்தில் நடந்து கொள்ள வேண்டும். குறித்த நேரத்தில் தான் விரும்புவது என்ன, விரும்பாதது என்ன என்பதை அவன் எப்போதும் அறிந்திருக்க வேண்டும்.

போதனை ஆசிரியன் இதை அறிந்திராவிட்டால், யாருக்கு அவன் போதனை அளிக்க முடியும்?

வருங்காலத்தில் போதனை இயல் கல்லூரிகளில் குரல் பயிற்சியும் நடிப்புப் பயிற்சியும் அங்கங்களையும் முகத்தை யும் விருப்பப்படி இயக்கும் பயிற்சியும் கட்டாயமாக அளிக் கப்படும் என்று நான் நம்புகிறேன். இத்தகைய பயிற்சி இல்லாமல் ஒருவன் போதனை ஆசிரியனுக வேலை செய்ய முடியும் என்று என்னுல் எண்ண முடியவில்லை. குரல் பயிற்சி, அழகாகப் பாடுவதற்கும் உரையாடுவதற்கும் மட்டும் முக்கிய மானது அல்ல. தன் கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் மிகத் துல்லியமாகவும் கேட்பவர் உள்ளங்களில் பதியும் படியும் கம்பீரமாகவும் வெளியிடுவதற்கும் அது தேவை யானது.

உதாரணமாக, கண்டனத்தை எப்படித் தெரிவிப்பது, உங்கள் கோபத்தையோ மனக் கடுப்பையோ எந்த அள வுக்குக் காட்ட உங்களுக்கு உரிமை உண்டு, இதைக் காட்ட உங்களுக்கு உரிமை உண்டா, கிடையாதா, உண்டு என்ருல் அதை எப்படிக் காட்ட வேண்டும் என்பவை எல்லாம் குரலைப் பொறுத்த விஷயங்கள். போதனை ஆசிரியனின் இந்த இடை யருத செயல் தான் போதனை ஆகும். போதனை மாணவன் உங்கள் உள்ளத்தையும் உங்கள் எண்ணங்களையும் புரிந்து கொள்வது, உங்கள் உள்ளத்தில் நடப்பதை அவன் அறிந்தி ருப்பதால் அல்ல, அவன் உங்களைக் காண்பதாலும் கேட்ப தாலுமே. நாம் நாடக மன்றத்துக்குப் போய், அருமையாக நடிக்கும் நடிகர்களை வியந்து நோக்குகிருேம் என்ருல், அங்கே இந்த நடிப்பு நமது அழகியல் இன்ப அனுபவம் ஆகும். இங்கேயும் மாணவனுக்கு முன் இருப்பவன் உயிருள்ள மனிதன். ஆனுல் இவன் நடிப்பவன் அல்ல, போதனை அளிப்பவன்.

இந்த விஷயத்தை நீண்ட நேரம் விவரிக்க என்னுல் முடியாது. போதனை ஆசிரியன் ஊக்கத்துடன் செயல் புரிப வனுக, போதனை வேலையில் உணர்வுபூர்வமாக ஈடுபட்ட வனுக இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியமானது.

இரண்டாவதாக, தனிமையில், இடர்களைத் தானே சமாளித்துவிடலாம் என்ற எண்ணத்துடன், தன் சொந்தப் பொறுப்பில் செயல் புரிய எந்த ஒரு போதனை ஆசிரியனுக்கும் உரிமை கிடையாது. போதனை ஆசிரியர்களின் சமுதாயம்

இருக்க வேண்டும். எங்கே போதனை ஆசிரியர்கள் சமுதாயமாக ஒன்றுசேரவில்லையோ, சமுதாயத்திடம் ஒரே வேலைத்திட்டமும் ஒரே தோரணையும் சிறுவர்களை அணுகுவதற்குரிய துல்லியமான ஒரே முறையும் இல்லையோ, அங்கே போதனை நிகழ்முறை எதுவும் இருக்க முடியாது. ஆகவே, சமுதாயமாக ஒன்றிணைந்தவர்களும் ஒரே கருத்தாலும் ஒரே கோட்பாட்டினுலும் ஒரே செயற்பாங்காலும் உத்வேகம் பெற்று ஒன்ருக வேலை செய்பவர்களுமான ஐந்து திறமை குறைந்த போதனை ஆசிரியர்கள் இருப்பது ஒவ்வொருவரும் தனித்தனியாக, அவரவர் விரும்பியபடி வேலை செய்யும் பத்து நல்ல போதனை ஆசிரியர்கள் இருப்பதை விட மேலாகும்.

இந்த விஷயத்தில் பல்வேறு திரிபுகள் இருக்க முடியும். அன்புக்குரிய ஆசிரியர் என்ற நிகழ்ச்சியை நீங்கள் கட்டாயம் அறிந்திருப்பீர்கள். நான் பள்ளி ஆசிரியன். நான் அன்புக்குரிய ஆசிரியன் என்றும் மற்றவர்கள் அன்புக்குரியவர்கள் அல்ல என்றும் நானே எண்ணிக் கொள்கிறேன். நானே அறியாமல் ஒரு குறித்த போக்கை நான் கடைப்பிடிக்கிறேன். மாணவர்கள் என்மேல் அன்பு செலுத்துகிருர்கள், நான் அன்புக்கு ஏற்றவன் ஆக முயல்கிறேன், மாணவர்களின் அன்புக்குப் பாத்திரம் ஆக முயற்சி செய்கிறேன். மொத்தத்தில், நான் அன்புக்குரியவன், அவர்கள் அன்புக்குரியவர்கள் அல்ல.

இது என்ன போதனை நிகழ்முறை? மனிதன் சமுதாயத்திலிருந்து தன்னைப் பிரித்துக் கொண்டு விட்டான். மாணவர்கள் தன்னை நேசிப்பதாகவும், எனவே தான் தனக்குப் பிடித்த வகையில், தன் விருப்பப்படி வேலை செய்யலாம் என்றும் மனிதன் எண்ணிக் கொள்கிருன்.

நான் என் துணையாசிரியர்களை மதித்தேன். போதனை வேலையில் மேதை வாய்ந்தவர்கள் என் துணைவர்களாக இருந்தார்கள். அன்புக்குரிய ஆசிரியனுக இருப்பது அவ்வளவாக அவசியம் இல்லை என்று நான் அவர்களுக்கு அறிவுறுத்தினேன். சொந்தத்தில் நான் குழந்தைகளின் அன்பைப் பெற ஒருபோதும் முயலவில்லை. தன்னுடைய சொந்தத் திருப்திக்காக ஆசிரியன் வலிந்து ஏற்படுத்தும் இந்த அன்பு, குற்றம் ஆகும் என்பது என் கருத்து. சில கம்யூன் உறுப்பினர்கள் ஒருவேளை என்னை நேசிக்கலாம். ஆனுல், நான் போதனை

அளித்த ஐந்நூறு பெயரும் குடிமக்களாகவும் உண்மை மனி தர்களாகவும் வாழ்க்கையில் அடி வைக்க வேண்டும் என்று நான் எண்ணினேன். என்னுடைய இந்தத் திட்டத்துக்குக் கூடுதலாக, என்மேல் நோய்த் தன்மை கொண்ட அன்பு செலுத்துவதையும் எதற்காகச் சேர்க்க வேண்டும்?

இந்தப் பிலுக்கு, இந்த அன்பு வேட்டை, அன்பைப் பற்றிப் பெருமை அடித்துக்கொள்ளும் இந்தப் போக்கு போதனை ஆசிரியனுக்கும் போதனைக்கும் பெருங்கேடு விளைக் கிறது. இந்தக் குசர்... நம் வாழ்வில் இருக்கக் கூடாது... என்று நான் உறுதியாக எண்ணினேன், என் தோழர்களையும் எண்ணச் செய்தேன்.

அன்பு உங்களுடைய முயற்சி இல்லாமலே, தானகவே வரட்டும். ஆனல் அன்புதான் குறிக்கோள் என்று ஒருவன் எண்ணினல் அது தீமை தவிர வேறில்லை... மாணவர்களின் அன்பைப் பெற அவன் பாடுபடாவிட்டால், மாணவர்கள் விஷயத்திலும் தன் சொந்த விஷயத்திலும் கண்டிப்பாகவும் நியாயமாகவும் நடந்து கொள்வது அவனுக்கு இயலும்.

பொதுக் கருத்தாலும் பற்றுறுதியாலும் பரஸ்பர உதவி யாலும் ஒன்றிணைந்ததும், பரஸ்பரப் பொருமை அற்றதும், மாணவர்களின் அன்பைத் தனிப்பட, தான் மட்டும் பெறு வதற்கான போட்டி இல்லாததுமான போதனை ஆசிரியர்கள் சமுதாயம், இத்தகைய சமுதாயம் மட்டுமே குழந்தை களுக்குப் போதனை அளிக்க முடியும். எனவே, பள்ளி இயக்கு நர்களுடையவும் கல்விப் பகுதித் தலைவர்களதும் செல்வாக் கையும் அதிகாரத்தையும் அதிகரிக்கும் பிரச்சினை உங்கள் மக்கள் கல்வித் துறைக் கமிஸாரகத்தின் ஆழ்ந்த பரிசீலனை யில் இருக்கிறது என்று செய்தித்தாள்களில் வெளியாகியுள்ள தகவலை நான் உற்சாகமாக வரவேற்கிறேன். ஆசிரியர்களின் வேலையில் கூட்டுத்துவத்தை அதிகரிக்க இது உதவும்.

''சோவியத் எழுத்தாளன்'' பதிப்பக ஆசிரியர் அலுவல கம், மாஸ்கோ பள்ளி ஆசிரியரால் எழுதப்பட்ட நூலின் கையெழுத்துப் பிரதியை அண்மையில் எனக்கு அனுப்பியிருந் தது. பள்ளியில் வேலை செய்யும் ஓர் ஆசிரியை இதில் வருணிக் கப்பட்டிருக்கிருள். பள்ளி ஆண்டு, ஆசிரியர் குழாம், மாண வர்கள், அவள் ஆகியோரின் வருணனை தன்மையில் எழுதப் பட்டிருக்கிறது.

இந்தக் கையெழுத்துப் பிரதியைப் பற்றி ''சோவியத் எழுத்தாளன்'' பதிப்பகத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. சிலர் இது கீழ்த்தரமானது என்றார்கள், வேறு சிலர் அருமையான நூல் என்றார்கள். என்னை நடுவனாகத் தெரிந்தெடுத்தார்கள்.

இந்த நூலை வெளியிட வேண்டும் என்றால் ஒரே நோக்கத்திற்காகத்தான் வெளியிட வேண்டும். இதில் ஒரு பள்ளி ஆசிரியையின் அருவருப்பு ஊட்டும் உருவம் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இதைப் படித்து, பள்ளி ஆசிரியை எப்படி இருக்கக் கூடாது என்பதை வாசகர்கள் தெரிந்து கொள்ள முடியும். இந்த நோக்கில் இது மிக உபயோகமான நூல். ஆனால் எழுதியவர் இந்த ஆசிரியையைப் பாராட்டிப் பரவசம் அடைகிறார்.

இவள் பள்ளி ஆசிரியை வடிவம் தாங்கிய புரட்டுக்காரி. மாணவர்களின் ''அன்பை'' அடையும் முயற்சியிலேயே எப்போதும் ஈடுபட்டிருப்பவள். பெற்றோர் எல்லோரும் இவளுக்குப் பயங்கரமானவர்களாகத் தோற்றம் அளிக்கிறார்கள். அவர்களை இவள் ''அப்பாமார்'', ''அம்மாமார்'' என்று ஆழ்ந்த இகழ்ச்சியுடன் குறிக்கிறாள். ''பெற்றோர் என்பது கவர்ச்சி அற்ற குடும்பம்.'' ஆனால் அவளோ, போதனை நிபுணி. எல்லா ஆசிரியர்களும் மோசமானவர்கள். ஒருவனுக்கு மண்டைக் கனம் அதிகம், இன்னொருவனுக்கு எதிலும் அக்கறை கிடையாது, மூன்றாமவன் சூழ்ச்சிக்காரன், நான்காமவன் சோம்பேறி. தலைமை ஆசிரியன் கையாலாகாதவன், அறிவீனன். அவள் ஒருத்திதான் மேதை வாய்ந்தவள்.

புத்தகம் முழுவதும் கீழ்த்தரமான, கொச்சைத்தனமான தொனியில் எழுதப்பட்டிருக்கிறது. சில ஆசிரியர்களிடம், ''சரளமாகப் பழகும் குணமும் வேலைத் திறமையும் நிறைய இருக்கின்றன, ஆனால் இயல்பான மேதை குறைவு''. அடிக்கொரு தரம், வேர்பீத்ஸ்கயாவின்* பாணியில் கனிவுள்ள

---

* **அ. அ. வெர்பீத்ஸ்கயா**—புனைகதை ஆசிரியை. உள நெகிழ்ச்சியும் உணர்ச்சிப் பெருக்கும் உள்ள நடையில் எழுதி வந்தாள். 1905ம் ஆண்டுப் புரட்சிக்குப் பின் தொடங்கிய பிற்போக்கு ஆண்டுகளில் சிறப்பாகப் பிரபலம் அடைந்தாள்.—**ப-ர்.**

பெருமூச்சு. அன்பு வேட்டை, அதே சமயம் மாணவர்கள் பற்றி இம்மாதிரி வருணனை: இந்தப் பெண் ''பட்டப் பகலை இருட்டாக்கி விடுவாள்''. இதோடு பாலுணர்ச்சிப் பிரச்சினைகள் மீது தனிப்பட்ட, நலமற்ற கவனம்.

எந்தப் பையன் எந்தப் பெண்ணை இரகசியமாகப் பார்த்தான், எந்தப் பெண் கடிதம் எழுதினாள், ஆசிரியை எப்படி மேதாவித்தனத்துடன் இந்தக் காதல் முயற்சிகளை இடைமுறித்தாள், எல்லோரும் ஆசிரியைக்கு எப்படி நன்றி பாராட்டினார்கள்—இதுவேதான் நூலின் உள்ளடக்கம் முழுவதும் என்று சொல்லலாம்.

தனிமையிலும் மாணவர்கள் முன்பும் சமூகத்தின் முன்னிலையிலும் பிலுக்கும் இத்தகைய ஆசிரியப் புரட்டர்கள் யாருக்கும் போதனை அளிக்க முடியாது. ஆசிரியர்களிடையே பொறுப்பு வாய்ந்த, ஆழ்ந்த போக்கு உள்ள போதகர்கள் உருவாக வேண்டும் என்றால் அதற்கு ஒரே வழி அவர்களை சமுதாயமாக ஒன்றிணைப்பது, போதனை ஆசிரியர்கள் சமுதாயத்தின் மையமான பள்ளி இயக்குநரை நடுவாகக் கொண்டு அவர்களை ஒன்று சேர்ப்பதுதான். இதுவும் மிக ஆழ்ந்த பிரச்சினை. நம் போதனை இயலார் இதிலும் பெருத்த கவனம் செலுத்த வேண்டும்.

போதனை ஆசிரியனிடம் இவ்வளவு நிறையக் கோர வேண்டும் என்றால், ஆசிரியர்களை சமுதாயமாக ஒன்று சேர்க்கும் நபரிடம் இன்னும் அதிகமாகக் கோர வேண்டும்.

போதனை ஆசிரியர்கள் சமுதாயம் நீடித்து இருப்பது மிக முக்கியமான நிலைமை ஆகும். நம் போதனை இயலார் இந்தப் பிரச்சினைமீது குறைவாகவே கவனம் செலுத்துகிறார்கள் என்று நான் எண்ணுகிறேன். எங்கள் கம்யூனில் குறித்த எண்ணிக்கையுள்ள கம்யூன் உறுப்பினர்கள் இருக்கிறார்கள், அவர்கள் கம்யூனில் இருக்கும் சராசரிக் காலம் ஐந்து ஆண்டுகள் என்று வைத்துக் கொண்டால், கம்யூனில் ஓர் ஆசிரியன் இருக்கும் காலமும் ஐந்து ஆண்டுகளுக்குக் குறைவாக இருக்க முடியாது. இது விதி, ஏனெனில் சமுதாயம் உண்மையான முறையில் ஒன்றிணைந்து வாழ்ந்தால் ஒவ்வொரு புதியவனும்—மாணவனும் சரி, ஆசிரியனும் சரி—புதியவனாகவே இருப்பான். இன்று வந்த ஆசிரியன் போதனை அளிக்க முடியும் என்று நினைப்பது தவறு. போதனை ஆசிரியனின் வெற்றி,

அவன் சமுதாயத்தின் எவ்வளவு பழைமையான உறுப்பினன், சமுதாயத்தை நடத்துவதில் அவன் எவ்வளவு பலத்தையும் சக்தியையும் ஈடுபடுத்தியிருக்கிறுன் என்பதைப் பொறுத்தி ருக்கிறது. ஆசிரியர்களின் சமுதாயம் மாணவர்களின் சமுதா யத்தை விட இளையதாய் இருந்தால் இயல்பாகவே அது பல வீனமாய் இருக்கும். அதற்காக சமுதாயத்தில் கிழவர்களை மட்டுமே சேர்க்க வேண்டும் என்பதல்ல. முதிய ஆசிரியன தும் தொடக்கநிலை ஆசிரியனதும் ஒலிப்பில் உள்ள சிறப்புத் தன்மைகளை நமது போதனை இயலார் ஆராய வேண்டும். போதனை ஆசிரியர்கள் சமுதாயம் தற்செயலாக அல்ல, அறிவார்ந்த முறையில் திரட்டப்பட வேண்டும். வயது முதிர்ந்த, அனுபவம் உள்ள ஆசிரியர்களின் குறித்த எண் ணிக்கை கட்டாயம் இருக்க வேண்டும். அப்போதுதான் போதனை இயல் கல்லூரிப் படிப்பை முடித்து, இன்னும் வேலை தொடங்க இயலாதிருக்கும் ஒரு யுவதி கட்டாயம் இருக்க வேண்டும். அவள் கட்டாயம் இருக்க வேண்டும், ஏனெனில் அதனுல் போதனை இயலின் மர்மம் நிகழும். முதிய ஆசிரியர்களும் மாணவர்களும் கொண்ட சமுதாயத்தில் இத்தகைய மங்கை வந்து சேரும் பொழுது, புரிந்துகொள்ள முடியாத அளவு நுட்பமான மர்ம நிகழ்ச்சி தொடங்கும். அது போதனை வேலையின் வெற்றியைத் திட்டப்படுத்தும். இந்த மங்கை முதிய ஆசிரியர்களிடமும் முதிய மாணவர் களிடமும் கற்பாள். முதிய ஆசிரியர்களிடம் அவள் கற்கும் விஷயம் அவளுடைய முறையான வேலைக்குத் தாங்கள் பொறுப்பாளிகள் என்பதை அவர்களுக்கு உணர்த்தும்.

ஆசிரியர் சமுதாயத்தில் எத்தனை மாதரும் எத்தனை ஆட வரும் இருக்க வேண்டும் என்ற பிரச்சினையும் தீர்க்கப்பட வேண்டும். இதைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். ஏனென்ருல் ஆடவர்கள் பெரும்பாலராய் இருப்பது நல்ல வேலைப் பாங்குக்கு ஏற்றது அல்ல. மாதர்கள் மிக அதிகமாய் இருப்பதும் ஒருச் சாய்ந்த வளர்ச்சி ஆகும்.

இவை தவிர, ஆசிரியனின் வெளித் தோற்றமும் பெருத்த முக்கியத்துவம் உள்ளது ஆகும். எல்லா ஆசிரியர்களுமே அழ காயிருப்பது விரும்பத்தக்கதுதான். என்ன ஆயினும் ஓர் அழகிய இளம் ஆசிரியர், ஓர் அழகிய யுவதி கட்டாயம் இருக்க வேண்டும்.

நான் அப்படித்தான் செய்தேன். என்னிடம் இருபத் திரண்டு ஆசிரியர்கள் இருந்தார்கள், ஓர் இடம் காலியாக இருந்தது. உள்ளவர்கள் எல்லோரும் என் போன்றவர்களே என்பதைக் கண்டேன். ஆசிரியர் சமுதாயத்தில் அழகியல்› வனப்பு, மாணவர்களைக் கவர்வதும் அவசியமாய் இருந்தது. மாணவர்கள் ஓரளவு காதல் கொள்ளட்டும். இந்தக் காதல் மிக மிக நல்ல வகையானதாக இருக்கும். பாலுணர்ச்சியைச் சேர்ந்ததாக இராது. கண்ணுக்குக் குளிர்ச்சியான ஒருவகை அழகுணர்ச்சியாக இருக்கும்.

ஆசிரியர்களில் எத்தனை பெயர் குதூகலப் பேர்வழிகளாக வும் எத்தனை பெயர் கடுகடுத்தவர்களாகவும் இருக்க வேண் டும் என்ற பிரச்சினையையும் ஆராய வேண்டும். கடுகடுப்பான வர்கள் மட்டும் கொண்ட சமுதாயத்தை என்னல் எண்ணிப் பார்க்க முடியவில்லை. ஒரு குதூகலப் பேர்வழியாவது. நகைச் சுவை உள்ளவன் ஒருவனுவது கட்டாயம் இருக்க வேண்டும். போதனை ஆசிரியர்கள் சமுதாயத்தின் கட்டமைப்பு பற்றி வருங்கால போதனை இயலில் ஒரு முழு நூல் இயற்றப்பட வேண்டும்.

எங்கள் கம்யூனில் தேர்ஸ்கி என்ற ஆசிரியன் இருந்தான். அவனை யாரேனும் என்னிடமிருந்து ஆசை காட்டி இழுத்துப் போய்விடுவார்களோ என்று நான் நடுங்கிக் கொண்டிருந் தேன். அவன் வியப்பூட்டும் அளவுக்குக் குதூகலம் உள்ள மனிதன். தனது குமிழியிட்டுப் பொங்கும் குதூகல சுபாவத் தால் என்னையும் மாணவர்களையும் அவன் ஆட்கொண்டு விட்டான். அவன் ஆழ்ந்த ஈடுபாடு இல்லாதவனுக இருந் தான். ஆனுல் என் முயற்சியால் அவன் உண்மையான நல்ல ஆசிரியன் ஆகிவிட்டான். சில சமயங்களில் அவன் எரிச்சல் ஊட்டுவான். அவன் குடும்பப் பற்று உள்ளவன். உதாரண மாக, ஒரு முறை நாங்கள் இசை நாடக மன்றம் சென்ருேம். அவன் தன் ஒரு வயதுக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்தான். ‘‘நாடக மன்றத்துக்குக் குழந்தையை எதற்காகக் கொண்டு வருகிருய்?’’ என்று கேட்டேன்.‘‘ஒரு வயது முதலே இசையைக் கேட்க இவன் பழக வேண்டும்’’ என்று பதில் அளித்தான்.

‘‘கம்யூன் உறுப்பினர்கள் இல்லாத போது கொண்டு வா’’ என்றேன் நான்.

ஆனல் பின்னர் அவன் அருமையான மனிதன் ஆகிவிட்டான். குதூகலம் இல்லாமல் ஒரு நிமிடங்கூட அவனல் எதுவும் செய்ய முடியாது. விதம் விதமாகக் கற்பனைகள் செய்வதிலும் ஓவியப் புதிர்கள் போடுவதிலும் இத்தகைய பிறவற்றிலும் அவன் அற்புதத் திறமை பெற்றிருந்தான். உதாரணமாக அவன் போடும் ஓவியப் புதிர் பாதிச் சுவர் அளவான பெரிய போஸ்டர். இந்த மனிதனின் மேதை என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தியது. இத்தனை நிறையப் புதிர்களைக் கற்பனை செய்ய இவனல் எப்படி முடிகிறது என்று வியப்பேன். போஸ்டர் பலவிதக் கேள்விகளால் நிறைந்திருக்கும். சில சுருக்கமானவை, சில நீண்டவை. இவற்றோடு ஓவியங்களும் வரை படங்களும் வேடிக்கைக் கேள்விகளும் இருக்கும். இவற்றை அவன் தனியே செய்வதில்லை. அவனிடம் ஒரு நூற்றைம்பது பெயர் வேலை செய்தார்கள். பெரிய ஆசிரியக் குழு. பத்திரிகைகளில் எதையாவது கண்டால் பெயர்த்து எடுத்துக் கொள்வார்கள், தாங்களாகவும் கற்பனை செய்வார்கள். இதற்கென்று தனி முறை இருந்தது. ஒரு புதிர் போஸ்டரில் இருக்கும். அதை விடுவிப்பதற்கு ஆயிரம் எண்கள். ஒருவன் அதை விடுவித்தால் அவனுக்கு ஆயிரம் எண்கள். இந்தக் கேள்வி போட்டவனுக்கும் ஆயிரம் எண்கள். நூறு பெயர் புதிரை விடுவித்தால் தலைக்குப் பத்து எண்கள், ஏனெனில் புதிர் எளிதாய் இருந்ததை இது காட்டியது.

இந்த ஓவியப் புதிர்களை மையமாகக் கொண்டு கம்யூன் உறுப்பினர்கள் எல்லோரையும் ஒன்று திரட்ட அவனல் முடிந்தது. மற்றவர்களையும் பற்றிக் கொள்ளும் தன் உற்சாகத்தை இதிலும் காட்டாதிருக்க அவனல் முடியவில்லை.

உதாரணமாக, பின் வரும் புதிர் எழுதி ஒட்டப்பட்டது: ''விடுமுறை நாளில் நான் கம்யூனுக்கு வட கிழக்கே நான்கு கிலோமீட்டர் தொலைவில் இருப்பேன். என் வலது பையில் சுவையான பொருள் இருக்கும். என்னைக் கண்டுபிடிப்பவன் ஆயிரம் எண்கள் பெறுவான்.''

விடுமுறை நாளில் கம்யூன் உறுப்பினர் எல்லோரும் கம்யூனுக்கு வட கிழக்கே நான்கு கிலோமீட்டர் தொலைவில், தேர்ஸ்கியைத் தேடப் புறப்பட்டுவிட்டார்கள். பையன்கள் திசையறி கருவிகளையும் உணவுப் பண்டங்களையும் எடுத்துக்

கொண்டு போனார்கள். ஆனால் அவன் மறைந்து விட்டான். நான் மதியச் சாப்பாட்டை ரத்து செய்தேன்.

''பையன்கள் எங்கே?''

அவர்கள் கம்யூனுக்கு வட கிழக்கில் தேர்ஸ்கியைத் தேடிக் கொண்டிருந்தார்கள்.

எத்தனை சுவையான நிகழ்ச்சிகள் நடந்தன என்று விவரிக்க முடியாது! இந்த விடுகதைத் தொடர் முடிந்ததும் தேர்ஸ்கி பின்வருமாறு அறிவித்தான்: ''இன்ன தேதியில் இத்தனை மணிக்கு உற்பத்தி மேற்பார்வையாளர் ஸலமோன் பரீஸவிச் கோகனுடைய காலணி வாரை அவிழ்த்துவிட வேண்டும். அவிழ்ப்பவன் இத்தனை எண்கள் பெறுவான்.''

ஸலமோன் பரீஸவிச் கோகன் தொந்தியும் தொப்பையுமாகப் பருத்த மனிதர். அவருக்கு விஷயம் தெரிந்து விட்டது, ஆத்திரம் பொங்கியது. ஆனால் மூன்று மணிக்குக் கம்யூன் உறுப்பினர்கள் எல்லோரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''நீங்கள் என்ன, என்னை மல்லாக்கக் கிடத்தப் போகிறீர்களா? அப்படிச் செய்வது சரி ஆகாது!''

உண்மையாகவே சரி ஆகாது... தந்திரமாக அவிழ்க்க வேண்டும். ஒரு தடவை ஒருவன் இதில் வெற்றி அடைந்தான்.

தேர்ஸ்கி உற்சாகம் நிறைந்தவன். பையன்களை வெவ்வேறு காரியங்களில் ஈடுபடுத்த அவனுக்கு முடிந்தது.

ஒரு தடவை தேர்ஸ்கி கம்யூன் உறுப்பினர்களுக்கும் கம்யூனைச் சேர்ந்த எல்லோருக்கும் முன்னே பின்வருமாறு அறிவித்தான்:

''உள்ளதைச் சொன்னால் நிரந்தர இயக்க இயந்திரம் தயாரிப்பது சாத்தியமே. இடைவிடாது இயங்கிக் கொண்டே இருக்கும் இயந்திரத்தை நிறுவக் கட்டாயம் முடியும்.''

அவன் ஆழ்ந்த நம்பிக்கையோடு பேசினான். அபார நடிப்புத் திறனும் பெற்றிருந்தான். எனவே பொறியாளர்கள் அவனுடைய செல்வாக்குக்கு உட்பட்டு விட்டார்கள். அவர்களும் பயிற்சி ஆசிரியர்களும் நிரந்தர இயக்க இயந்திரம் தயாரிக்க முற்பட்டார்கள்.

''நீங்கள் எதற்காக இப்படிச் செய்கிறீர்கள்? நிரந்தர இயக்க இயந்திரத்தை நிறுவ முடியாது என்பதுதான்

எல்லோருக்கும் தெரிந்த சேதி ஆயிற்றே'' என்று நான் அவனிடம் கூறினேன்.

''அட, இவர்கள் முயன்று பார்க்கட்டுமே. யாரேனும் ஒருவேளை நிறுவி விடலாம்'' என்றான் தேர்ஸ்கி.

நிரந்தர இயக்க இயந்திரத்தை நிறுவுவது சாத்தியமே என்று நான் கூட அனேகமாக நம்பத் தொடங்கினேன். இத்தகைய உற்சாகப் பேர்வழி ஆசிரியர் சமுதாயத்தில் இருக்க வேண்டும்.

மறு புறம், ஒரு போதும் புன்னகை செய்யாதவன், மிகவும் கடுத்தமான பேர்வழி, ஒருவருடைய குற்றத்தையும் மன்னிக்காதவன், யாராலும் கீழ்ப்படியாதிருக்க முடியாதவன் ஒருவனும் ஆசிரியர் சமுதாயத்தில் இருக்க வேண்டும்.

சில நிகழ்ச்சிகள் எனக்குச் சுவை ஊட்டியது உண்டு. அப்போதுதான் போதனை இயல் கல்லூரிப் படிப்பை முடித்த யுவதி ஒருத்தி ஒரு நாள் முறைவேலையில் இருப்பாள். அவளை யாராவது மாணவன் ஏமாற்றக் கூடும் ஆதலால் கம்யூன் முழுவதும் அவளுக்கு உதவுவதற்காகத் திரளும்.

''லீதியா பெத்ரோவ்னா, என்னிடம் பூட்சுகள் இல்லை. அதனால்தான் வேலைக்கு வர நேரம் ஆகி விட்டது!'' என்பான் ஒருவன்.

அவ்வளவுதான். அவள் செய்வது அறியாமல் திகைப்பாள். உடனே யாரேனும் மாணவன், ''அடேய், நீ பொய் சொல்கிறாய்!'' என்று கூறுவான்.

இந்த வார்த்தைகள் மாணவர் சமுதாயம் அனைத்தையும் திரட்டி விடும்.

மறு நாள் கடுத்தமான பேர்வழி முறை வேலை செய்வான். அவன் சரியாக ஆறு மணிக்கு வேலைக்கு வந்து விடுவான். ஒருவரையும் நேரம் கடந்து உறங்க விட மாட்டான். கதவைத் திறப்பான், மீசையை முறுக்குவான். அவன் யாரையும் விட மாட்டான் என்பது எல்லோருக்கும் தெரிந்து விடும்.

ஆசிரியன், போதனை ஆசிரியன் அல்லது பள்ளி ஆசிரியன், தண்டிக்கும் உரிமை பெற்றிருக்கக் கூடாது என்று எனது வேலையின்போது நான் உறுதி கொண்டிருந்தேன். தண்டிக்கவோ கண்டனம் செய்யவோ கூட ஆசிரியனுக்கு நான் உரிமை அளிக்கவில்லை. முதலாவதாக இது மிகக் கடினமான

விஷயம். இரண்டாவதாக, ஒருவரை ஒருவர் மிரட்டாமலும் ஒருவருக்கு ஒருவர் இடைஞ்சல் செய்யாமலும் இருப்பதற்கு, தண்டனை அளிக்கும் உரிமை ஒரே நபரிடம் இருக்க வேண்டும் என்று நான் எண்ணினேன். இதனால் ஆசிரியர்களின் வேலை அதிகக் கடினம் ஆயிற்று, ஏனென்றால் அவர்களுக்கு அதிகாரம் இருப்பது அவசியமாய் இருந்தது.

அதிகாரத்தைப் பற்றிப் பேசுகையில், ஒரு விஷயத்தைக் குறிப்பிடுகிறேன். அதிகாரம் ஒன்று கடவுளால் அளிக்கப் படுகிறது—ஒருவன் அதிகாரத்தோடு பிறக்கிறான், அவன் அதிகாரம் உள்ளவன் என்பதை எல்லோரும் காண்கிறார்கள், புரிந்து கொள்கிறார்கள்—அல்லது செயற்கையாக ஏற்படுத் தப்பட வேண்டும் என்று மிகப் பல ஆசிரியர்கள் நம்புகிறார் கள்.

''நீங்கள் மாணவர்கள் முன்னிலையில் ஆசிரியரைக் கடிந்து கொண்டீர்களே, ஏன்? அவருடைய அதிகாரத்தை நீங்கள் குலைக்கிறீர்கள்'' என்று அதனால்தான் பலர் சொல்லுகிறார் கள்.

என் கருத்துப்படி, அதிகாரம் பொறுப்பிலிருந்தே தோன்றுகிறது. ஒருவன் தன் செயலுக்குப் பொறுப்பு ஏற்க வேண்டும், பொறுப்பு ஏற்கிறான் என்றால், அதுவே அவனது அதிகாரம் ஆகும். இந்த அடிப்படையில் அவன் தனது நடத்தையைப் போதிய அளவு அதிகாரம் உள்ளதாக அமைத்துக் கொள்ள வேண்டும்.

முதற்படி சமுதாயத்துடன் அதிகத்திலும் அதிகமாக நெருங்கிப் பழகுவதும் அதனுடன் அதிகத்திலும் அதிகமாக நட்பு கொள்வதும் தோழமை முறையில் போதனை அளிப்ப தும் ஆசிரியனின் வேலையில் அடங்கி இருக்க வேண்டும். போதனைத் துணைக் கருவிகள் விஷயம் சிக்கலான, நீண்ட கதை. உதாரணமாக, சமுதாயத்தின் ஓர் உறுப்பினன் கட்டுப் பாட்டை மீறினால், மோசமாக நடந்து கொண்டால், பிரிவு இந்த விவகாரத்தை விசாரிக்கும்படி ஆசிரியன் முதன்மை யாக ஏற்பாடு செய்ய வேண்டும் என்று நான் கோரினேன். பிரிவைச் செயலுக்குத் தூண்டுவது, தனி நபருக்கு சமுதாயம் கோரிக்கைகள் விடும்படித் தூண்டுவது, ஆசிரியனின் வேலையில் அடங்கி இருக்க வேண்டும்.

தனி ஆசிரியர்களின் வேலை முறையை விரிவாக விளக்க என்ருல் முடியாது. இதற்கு மிகுந்த நேரம் தேவைப்படும். ஆனல் போதனை ஆசிரியன் என்ற முறையில் மாணவர்களுட னும் தனிநபர்களுடனும் நான் எப்படி வேலை செய்தேன் என்பதைச் சொல்லுகிறேன்.

தனிநபர்களைப் பொறுத்தவரை நேரடியாகத் தாக்குவதே மேல் என நான் மதித்தேன், மற்றவர்களுக்கும் அவ்வாறே யோசனை சொன்னேன். ஒரு பையன் கெட்ட, அருவருப்பான காரியம் செய்தால், ''நீ அருவருக்கத்தக்க காரியம் செய் திருக்கிருய்'' என்று நான் மறைக்காமல் கூறிவிடுவேன்.

போதனை ஆசிரியன் கையாள வேண்டிய நய நுட்பம் பற்றி வெகுவாக எழுதப்படுகிறதே, அது உங்கள் கருத் தின் உளமார்ந்த தன்மையில் அடங்கி இருக்க வேண்டும். நான் எதையும் மறைக்கவோ, பூசி மெழுகவோ ஒருப்பட மாட்டேன். உண்மையாக நினைப்பதை அப்படியே சொல்லி விடுவேன். இவ்வாறு செய்வது யாவற்றிலும் உளமார்ந்தது, எளியது, யாவற்றிலும் அதிகப் பயன் விளைப்பது. ஆனல் எப்போதும் பேச முடியாது.

உரையாடல் மிகக் குறைவாகவே பயன் விளைக்கிறது என்று நான் கருதுகிறேன். எனவே, எனது உரையாடல்கள் தேவை இல்லை என்று கண்டதுமே நான் ஒன்றும் சொல்ல வில்லை.

உதாரணமாக, ஒரு பையன் ஒரு பெண்ணை அவமதித்து விட்டான். எனக்கு இந்த விஷயம் தெரிய வந்தது. இதைப் பற்றிப் பேசுவது அவசியமா? பேச்சு இல்லாமலே விஷயம் என்ன என்பதை அவன் தெரிந்து கொள்வது எனக்கு முக்கி யம். நான் அவனுக்கு ஒரு கடிதம் எழுதி உறையில் இட்டு அனுப்பினேன்.

என்னிடம் இதற்கு வேண்டிய ''அஞ்சல்காரர்கள்'' இருந்தார்கள் என்பதைச் சொல்லிவிட வேண்டும். ஈக்கள் போன்று கூட்டுக் கண்கள் கொண்ட பத்து வயதுச் சிறுவர் கள் இவர்கள். யாரை எங்கே காணலாம் என்பது அவர் களுக்கு எப்போதும் தெரியும். வழக்கமாக இம்மாதிரி அஞ்சல்காரன்—அழகான சிறுவன்—பெருத்த முக்கியத்து வம் உள்ளவன். நான் அவனிடம் உறையைக் கொடுப்பேன். ''தோழர் எவ்ஸ்திக்னேயெவ், இன்று இரவு 11 மணிக்கு

என்னிடம் வரும்படி கேட்டுக் கொள்கிறேன்'' என்று எழுதிய கடிதம் உறையில் இருக்கும்.

கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது, என்ன நடந்தது, எவ்ஸ்திக்னேயெவை நான் எதற்காக அழைக்கிறேன் என்பது எல்லாம் என்னுடைய அஞ்சல் காரனுக்கு நன்ருய்த் தெரியும். ஆனல் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள மாட்டான்.

''கடிதத்தைக் கொண்டு கொடு'' என்று நான் அவனிடம் சொல்வேன். வேறு ஒன்றும் சொல்ல மாட்டேன். அவன் என்ன செய்வான் என்பது எனக்குத் தெரியும்.

அவன் உணவுச்சாலைக்குப் போவான்.

''உனக்குக் கடிதம்'' என்பான்.

''என்ன சேதி?''

''அந்தோன் ஸெம்யோனவிச் உன்னைக் கூப்பிடுகிருர்.''

''எதற்காக?''

''இதோ சொல்லுகிறேன். நேற்று நீ இன்னுர் மனம் நோகும்படி நடந்துகொண்டாயே, நினைவு இருக்கிறதா?''

பத்தரை மணிக்கு இந்த அஞ்சல்காரன் வருவான்.

''நீ தயாரா?''

''தயார்.''

''அவர் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்.''

சில சந்தர்ப்பங்களில் இந்த யெவ்ஸ்திக்னேயெவால் பொறுக்க முடியாது. இரவு 11 மணிக்கு அல்ல, பிற்பகல் 3 மணிக்கே என்னிடம் வந்து விடுவான்.

''என்னைக் கூப்பிட்டீர்களா?''

''இல்லை, இப்பொழுது அல்ல, இரவு 11 மணிக்கு.''

அவன் பிரிவுக்குப் போவான். அங்கே பையன்கள் அவனை விசாரிப்பார்கள்.

''என்ன சேதி? குற்ற விசாரணைக்கா?''

''ஆமாம்.''

''எதற்காக?''

இவ்வாறு இரவு 11 மணிக்குள் பிரிவில் பையன்கள் அவனைச் சக்கை சாருகப் பிழிந்து எடுத்து விடுவார்கள். அவன், பாவம், அன்றைய நிகழ்ச்சிகளால் அலைப்புண்டு, வெளிறிப் போய், இரவு 11 மணிக்கு என்னிடம் வருவான்.

''புரிந்து கொண்டாயா?'' என்று கேட்பேன்.

''புரிந்து கொண்டேன்.''

''போ.''

அதற்கு மேல் எதுவும் வேண்டியதில்லே.

வேறு சந்தர்ப்பங்களில் நான் வேறு விதமாக நடந்து கொள்வேன்.

''உடனே வரச் சொல்லு!'' என்று அஞ்சல்காரனிடம் கூறுவேன்.

அழைக்கப்பட்டவன் வந்ததும் நான் நினைப்பதை எல் லாம் அவனிடம் சொல்லி விடுவேன். அவன் கடினமானவன், என்னை நம்பாதவன், எனக்கு எதிரான போக்கு உள்ளவன், என்னைச் சந்தேகிப்பவன் என்ருல் நான் அவனுடன் பேச மாட்டேன். மூத்த மாணவர்களைக் கூட்டி, அவனை அழைத்து, மிகவும் சடங்கு முறையான தோரணையில், இன்முகத்துடன் அவனிடம் பேசத் தொடங்குவேன். எனக்கு முக்கியமானது நான் என்ன சொல்கிறேன் என்பது அல்ல, மற்றவர்கள் அவனை எப்படி நோக்குகிருர்கள் என்பதுதான். அவன் என்னை நிமிர்ந்து பார்ப்பான், ஆனுல் தோழர்களைப் பார்க்க அஞ்சுவான்.

''மேற்கொண்டு தோழர்கள் உனக்குச் சொல்லுவார் கள்'' என்பேன்.

நான் முன்கூட்டிக் கற்பித்ததைத் தோழர்கள் அவனுக்கு எடுத்து உரைப்பார்கள். அவர்கள் தாங்களாகவே இதைச் சிந்தித்ததாக அவன் எண்ணிக்கொள்வான்.

சில வேளைகளில் தனிப்பட்ட முறை தேவைப்படும். நான் பிரிவு முழுவதையும் அழைத்த சந்தர்ப்பங்கள் இருந் தன. ஆனுல் ஒருவனைக் கண்டிப்பதற்காகப் பிரிவு முழுவதை யும் அழைத்தேன் என்பதைக் காட்டாமல் இருக்கும் பொருட்டுப் பிரிவு அனைத்தையும் தேநீர் பருக அழைத்தேன். அதாவது, மேஜைமேல் தேநீர், பணியாரங்கள், எலுமிச்சம் பழம் முதலியவற்றை வைத்தேன். வழக்கமாக ஒவ்வொரு வாரமும் ஏதாவது ஒரு பிரிவு என்னிடம் வரும். வழக்கமாக, விஷயம் என்ன என்பது பிரிவுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ள அதற்கு மிகுந்த ஆவல் உண்டாகும். தேநீர் பருகு கையில், உரையாடலும் கேலிப் பேச்சுக்களும் நடக்கும் போது, குற்றம் செய்தவன் யார் என்றே எண்ணமிடுவார் கள் கம்யூன் உறுப்பினர்கள். சில வேளைகளில், குற்றவாளி யார் என்பதை நான் சாடையாகக் கூடக் காட்ட மாட்டேன்.

அவர்களே பேச்சு நடுவில் யார் குற்றவாளி என்று சொன்ஞல் உடனே அவனைக் கேலியும் செய்வார்கள். தேநீர் பருகிய பின் எல்லோரும் நல்லுணர்ச்சிகளுடன், நல்ல மனநிலையில் உறங்கப் போவார்கள்.

''எல்லாம் அருமையாக இருந்தது, ஆனுல், நீ எங்களை எப்படிச் சங்கடத்தில் மாட்டிவிட்டாய், பார்த்தாயா?''

அடுத்த வாரம் இதே பிரிவை மறுபடி தேநீர் சாப்பிட அழைப்பேன். இது சரி பார்ப்பதற்கான தேநீர் விருந்து என்பதைப் பிரிவினர் புரிந்து கொள்வார்கள். குற்றம் செய்தவனிடம் தாங்கள் பேசியதாகவும் அவன் வாக்களித்ததாகவும் அவனுக்கு ஒரு மேற்பார்வையாளனை நியமித்திருப்பதாகவும் அவர்களே எனக்குத் தெரிவிப்பார்கள்.

''கவலைப்படாதீர்கள்! எல்லாம் நன்ருக நடக்கும்!''

சில சமயங்களில் நான் வகுப்பை இம்மாதிரித் தேநீர் விருந்துக்கு அழைப்பேன்.

எப்போது தேநீர் விருந்து நடக்கும், அதற்கு யார் அழைக்கப்படுவார்கள் என்பது பிரிவுக்கு வழக்கமாகத் தெரியாது ஆகையால் பிரிவினர் எல்லோரும் தயார் ஆவார்கள். நல்லுடை அணிந்து நேர்த்தியாகக் காட்சி தர முயல்வார்கள். (அவர்களிடம் ஒடிகொலோனும் இருந்தது.) ஏதேனும் ஒழுங்கீனம் உள்ள பிரிவும் தனி நபர்களும் தேநீர் பருக அழைக்கப்பட்டு விடுவோமோ என்று வழக்கமாகக் கூச்சப் படுவார்கள்.

ஒரு தடவை தேநீர் விருந்து தொடங்கியதும் ஏதோ தீய செயல் கண்டுபிடிக்கப்பட்டது. முறைவேலைக் கமாண்டர் தேநீர் பருகுவதை நிறுத்தும்படி கூறிஞன். இதற்கு உரிய காரணங்கள் இருந்தன. மறு நாள் காலை பிரிவு முழுவதும் இந்தக் காரணத்தால் துன்பப்பட்டது.

''என்ன, தேநீர் விருந்துக்கு அழைக்கப்பட்டீர்களா? தேநீர் சாப்பிட்டீர்களா?'' என்று மற்றவர்கள் கேட்டார்கள்.

''இல்லை...''

இவை எல்லாம் தனி நபரைச் சீர்படுத்துவதன் வடிவங்கள். மாணவனே கூறும் வடிவங்கள் சிறப்பாக முக்கியமானவை. வழக்கமாக ஒரு சிறுவஞே சிறுமியோ வந்து,

''உங்களிடம் நான் இரகசியமாகப் பேச வேண்டும்'' என்று சொல்வார்கள்.

இது யாவற்றிலும் நட்பார்ந்த, சிறந்த வடிவம்.

ஆனால் சில சந்தர்ப்பங்களில் நேரடித் தாக்கை மாற்றி, சுற்று வழியாக அணுகுவதை நான் மேலாகக் கருதினேன். சமுதாயம் அனைத்தும் தனி மனிதனுக்கு எதிராகக் கிளர்ந்தெழும் சமயங்களில் நான் இப்படிச் செய்வது வழக்கம். அப்போது நேரடியாகத் தாக்குவது கூடாது. அந்த நபர் காப்பு அற்றவன் ஆகிவிடுவான். சமுதாயம் அவனுக்கு எதிராக இருக்கும். நான் அவனுக்கு எதிராக இருப்பேன். மனிதன் முறிந்து போகக் கூடும்.

ஒரு முறை, பின்வரும் நிகழ்ச்சி நடந்தது. கம்யூனில் ஒரு பெண் இருந்தாள். இனியவள், நல்லவள், ஆனால் முன்பு அனாதையாகத் தெருவில் திரிந்தவள். அவளைச் சீர்படுத்துவது எங்களுக்கு மிகக் கடினமாய் இருந்தது. ஆனால் ஓர் ஆண்டு கழிந்ததும் அவள் ஒழுங்குபடத் தொடங்கினாள். அப்போது அவளுடைய தோழியின் சிறு அலமாரியிலிருந்து ஐம்பது ரூபிள்கள் திடீரென்று காணாமல் போய் விட்டன. லேனாதான் அவற்றைத் திருடினாள் என்று எல்லோரும் சொன்னார்கள். நான் சோதனை போட அனுமதி கொடுத்தேன். கம்யூன்காரர்கள் சோதனை போட்டார்கள். பணம் கிடைக்கவில்லை. விவகாரம் முடிந்தது என்று கருதும்படி கூறினேன்.

ஆனால் சில நாட்களுக்குப் பின் பொழுது போக்குக் கழகத்தின் படிப்பறையில், திரைக்குப்பின், ஜன்னல்களை மூடுவதற்கான விசேஷ சாதனத்தில் இந்தப் பணம் மறைத்து வைக்கப்பட்டிருந்ததைச் சிறுவர்கள் கண்டு பிடித்தார்கள். லேனா இந்த ஜன்னல்களின் அருகே நடமாடியதையும் கையில் ஏதோ வைத்திருந்ததையும் தாங்கள் பார்த்ததாகப் பையன்கள் சொன்னார்கள்.

கமாண்டர்கள் சபை அவளை அழைத்தது.

''நீதான் திருடினாய்!'' என்று எல்லாச் சிறுவர்களும் கூறினார்கள்.

அவள் திருடினாள் என்று சிறுவர்கள் உண்மையிலேயே நம்புவதை நான் உணர்ந்தேன். திருட்டுக் குற்றத்துக்காக அவளைக் கம்யூனிலிருந்து நீக்கி விட வேண்டும் என்று அவர்கள் கோரினார்கள். ஒருவராவது அவள் சார்பில் பேச விரும்

பவில்லை என்பதைக் கண்டேன். வழக்கமாகத் தங்கள் தோழிக்குப் பரிந்து பேசும் பெண்கள் கூட இவளை நீக்கிவிட வேண்டும் என்று பிடிவாதமாகக் கோரினார்கள். உண்மையில் திருடியவள் அவள் தான் என்பதும் எனக்குத் தெரிந்தது. அதில் சந்தேகத்துக்கே இடம் இல்லை.

இத்தகைய சந்தர்ப்பங்களில் சுற்று வழியான அணுகுமுறையை மேற்கொள்ள வேண்டியிருக்கும். நான் சொன்னேன்:

''இல்லை, இவள் திருடினாள் என்பதை நீங்கள் நிரூபிக்கவில்லை. இவளை நீக்குவதற்கு நான் அனுமதிக்க மாட்டேன்.''

அவர்கள் திகைப்புடன் என்னை நோக்கினார்கள்.

''திருடியவள் இவள் அல்ல என்று உறுதியாக நம்புகிறேன்'' என்றேன் நான்.

அவள்தான் திருடினாள் என்று அவர்கள் வாதித்தார்கள். அவள் திருடவில்லை என்று அழுத்திக் கூறினேன் நான்.

''எதைக் கொண்டு இப்படி நினைக்கிறீர்கள்.''

''இவளுடைய கண்களைப் பார்த்துத் தெரிந்து கொண்டேன்.''

மெய்யாகவே கண்களைப் பார்த்து நான் அடிக்கடி விஷயத்தைத் தெரிந்து கொண்டது உண்டு என்பதைச் சிறுவர்கள் அறிந்திருந்தார்கள்.

மறு நாள் அவள் என்னிடம் வந்தாள்.

''நீங்கள் எனக்குப் பரிந்து பேசியதற்கு நன்றி. இவர்கள் வீணாக என்னைத் தாக்கினார்கள்.''

''அது எப்படி? நீதானே திருடினாய்?'' என்றேன் நான்.

இந்தத் திடீர்த் திருப்பத்தால் நான் அவளைப் பிடித்துவிட்டேன். அவள் வாய் விட்டு அழுது குற்றத்தை ஒப்புக் கொண்டாள். அவள் திருடினாள் என்று தெரிந்து கொண்டே அவளைக் காப்பதற்காகப் பொதுக் கூட்டத்தில் நான் ''புளுகினேன்'' என்ற இரகசியம் அவளுக்கும் எனக்கும் மட்டுமே தெரியும். இதனால் அவள் ஆசிரியன் என்ற முறையில் என் போதனைக்கு முழுமையாக ஆட்பட்டு விட்டாள்.

இது பொய். ஆனால் சமுதாயத்தின் சீற்றத்தை நான் கண்டேன். அவள் வெளியேற்றப் பட்டிருக்கலாம். இதைத் தவிர்ப்பதற்கு இந்த முறையை மேற் கொள்வது அவசியமாய் இருந்தது. இத்தகைய சுற்றுப் போக்குகளை எதிர்ப்பவன்

நான். இது ஆபத்தான விஷயம். ஆனால் இந்த சந்தர்ப்பத்தில் நான் பொதுக் கூட்டத்தை ஏமாற்றியது அவளுக்காகவே என்பதை அந்தப் பெண் புரிந்து கொண்டாள். எங்களுக்குள் பொது இரகசியம் இருக்கிறது என அவள் அறிந்து கொண்டாள். இது போதனை இலக்கு என்ற முறையில் அவளை முழுமையாக எனக்கு ஆட்படுத்தியது. ஆனால் இந்தச் சுற்றுப் போக்குகள் மிகக் கடினமானவை, சிக்கலானவை. அபூர்வமாகச் சில சந்தர்ப்பங்களிலேயே இவற்றை மேற்கொள்ளலாம்.

விரிவுரை நான்கு

## சமுதாயத்தில் உழைப்பு போதனை, உறவுகள், முறை, தோரணை

உழைப்பு போதனை பற்றி எனது கருத்துக்களைச் சுருக்கமாகக் கூறிவிட்டு முடிவான பகுதிக்கு—முறையையும் தோரணையையும் பற்றிய பகுதிக்கு—வர விரும்புகிறேன்.

நமது புரட்சியின் தொடக்கம் முதல் நம்முடைய பள்ளி உழைப்புப் பள்ளி என்று அழைக்கப்பட்டது உங்களுக்கு நினைவு இருக்கும். ஆசிரியர்களான நாம் எல்லோரும் உழைப்பு முறையின் பாதிப்பை விட, ''உழைப்பு'' என்ற சொல்லின் கவர்ச்சிக்கு வசமாகி இருந்தோம், உழைப்புக் கோட்பாட்டின் கவர்ச்சிக்கு ஆட்பட்டிருந்தோம். குடியேற்றங்களில் உழைப்புக்கான வாய்ப்புக்கள் பள்ளிகளில் உள்ளவற்றைக் காட்டிலும் அதிகமாய் இருந்தன என்பது உண்மையே. ஆனால் கோர்க்கி, த்ஸெர்ழீன்ஸ்கி குடியேற்றங்களில் வேலை செய்த பதினாறு ஆண்டுகளில், போதனையில் உழைப்பு ஆற்றும் பங்கு பற்றிய எனது போக்கிலும் உழைப்பு நிகழ்முறைகளை ஒழுங்கமைப்பதிலும் உழைப்பு முறையையே புரிந்து கொள்வதிலும் கூட மிகச் சிக்கலான வளர்ச்சிப் பாதையை நான் கடக்க நேரிட்டது.

*1935*ம் *1936*ம் ஆண்டுகளில் த்ஸெர்ழீன்ஸ்கி காலனியில் இருந்த உழைப்புச் சூழ்நிலையை *1920*ம் ஆண்டில் என்னால் கற்பனை கூடச் செய்திருக்க முடியாது.

உழைப்பு ஒழுங்கமைப்பின், அதன் வளர்ச்சியின் எந்தப் பாதையை நான் மேற்கொண்டேனே அது சரியான பாதை என்று என்னால் உறுதியாகச் சொல்ல முடியாது. ஏனென்றால் இந்தத் துறையில் நான் சுதந்திரம் உள்ளவனாக இல்லை. என்னுடைய வேலையுடன் தாற்காலிகமாகத் தொடர்பு கொண்டவர்கள் தங்கள் நோக்கு நிலையையும் தங்கள் மாறுதல்களையும் வடிவங்களையும் அதில் புகுத்தினார்கள். இவர்களுடைய பற்பல கருத்துக்களையும் நோக்கு நிலைகளையும் நான் சார்ந்திருந்தேன். பதினாறு ஆண்டுக் காலம் முழுவதிலும் நான் மற்றவர்களுக்கு அருகாகச் செல்லவும் அவ்வப்போது இருந்த சூழ்நிலைகளுக்கு ஏற்ப என் போக்கை அமைத்துக் கொள்ளவும் நேர்ந்தது. கோர்க்கி குடியேற்றத்தில் முதன்மையாக வறுமைக்கு ஏற்ப நான் என்னை இசைத்துக் கொள்ளவும் தேவையிலிருந்து, ஏழ்மைச் சூழ்நிலையிலிருந்து உழைப்புக் கோட்பாட்டை உருவாக்கவும் வேண்டி இருந்தது. த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில், எனது தலைமை அதிகாரிகளிடமிருந்து வந்த தனிப்பட்ட போக்குகளுக்கு என்னை இசைத்துக் கொள்வதும் சிலவற்றுடன் போராடுவதும் கூட எனக்கு அவசியம் ஆயிற்று.*

எனது சமுதாயத்தின் வரலாற்றில் முற்றிலும் ஆதர்சமானவை என்று நான் ஓரளவு உரிமையுடன் குறிப்பிடக் கூடிய சில காலப்பகுதிகள் இருந்தன என்று நினைக்கிறேன். த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் இந்தக் காலப் பகுதி கிட்டத்தட்ட **1930-1931**ம் ஆண்டுகளில் நிலவியது.

இந்தக் காலப் பகுதியை ஆதர்சமானது என்று நான் ஏன் குறிப்பிடுகிறேன்? இந்தக் காலப் பகுதியில் என் கம்யூன் உறுப்பினர்கள் எல்லோரும் உண்மையான உற்பத்தியில்

---

* கம்யூன் நிர்வாகக் குழுவின் சில உறுப்பினர்கள், கம்யூன் மாணவர்கள் நாள்தோறும் ஆறு மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்றும், அவர்களுடைய பள்ளிப்படிப்பு நேரம் அதற்கு ஏற்பக் குறைக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். மாறாக, பள்ளிப் படிப்புக்குக் குறைந்தது ஆறு மணி நேரம் ஒதுக்கப்பட வேண்டும் என்றும் தொழிற்சாலையில் மாணவர்களின் வேலை நேரம் நாள்தோறும் இரண்டு மணி நேரமாகக் குறைக்கப்பட வேண்டும் என்றும் மக்காரென்கோ கருதினார்.

வேலை செய்தார்கள். அதாவது, ஒரு நிறுவனம் இருந்தது, அதில் தொழில் நிதித் திட்டமும் சீரான ஒழுங்கும் இருந்தன. நல்ல தொழிற்சாலையின் எல்லா வடிவங்களும்—திட்ட வகுப்பு உற்பத்திப் பிரிவு, அளவுமானத்தை முறைப்படுத்தும் பிரிவு, இன்னும் சரியாகச் சொன்னால், ஒவ்வொரு வேலைக்கும் உரிய அளவு மானம், எல்லா வேலை இடங்களுக்கும் இடையே சீரான பரஸ்பரச் சார்பு, உற்பத்தியாகும் இயந்திரப் பகுதிகளின் எண்ணிக்கையும் உற்பத்தி அளவுமானங்களும் தர அளவுமானங்களும் அடங்கிய, கண்டிப்பாகத் தயாரிக்கப் பட்ட பகுதிகள் பட்டியல் ஆகியவை—அதில் இருந்தன.

அந்தக் காலப் பகுதியில் எங்கள் உற்பத்தித் தொழில் முழுவதும் லாபகரமாக இருந்தது. தனது செலவை மட்டும் இன்றி கம்யூன் உறுப்பினர்களின் அன்றாட வாழ்க்கைச் செலவையும் அது சரிக்கட்டியது, சேமிப்புக்கு வழி வகுத்தது. அதாவது எங்களிடம் உண்மையான உற்பத்தித் தொழில் இருந்தது. அதே சமயம், கம்யூன் உறுப்பினர்கள் சம்பளம் வாங்கவில்லை. இது விவாதத்துக்கு உரிய பிரச்சினை. இன்று வரை இது விவாதத்துக்கு உரியதாகவே இருந்து வருகிறது. இத்தகைய சோதனை நிகழ்த்திய வேறு நிலையங்களை நான் அறியேன்.

அந்தக் காலத்தில் நான் சம்பளத்துக்கு எதிராய் இருந்தேன். சமுதாயத்தின் நலன்களை அடிப்படையாகக் கொண்டு உழைப்பின் உற்பத்தித் திறன் உயர்த்தப்படுவது, இடையறாது நிறைந்து பொங்கும் உழைப்பு உற்சாகத்தை உயர்த்துவது, திடீர்த் தாக்கு உற்சாகத்தையோ, இந்த வாரம் அல்லது மாதத்திற்கு உரிய அணித்தான லட்சியங்களை நிறைவேற்றும் உற்சாகத்தையோ அல்ல, அமைதியான, ஒரு சீரான, சமுதாயத்தின் தொலைதூர வருங்கால வாய்ப்புக்களைக் காண்கிற உற்சாகத்தை உயர்த்துவது, உள, உடல், கொள்கைவாதச் சக்திகளை ஒருங்கு திரட்டுவது, ஆசிரியனுக்குத் தேவைப்படும்படியான பேரளவான வேலையை இந்த உற்சாகத்தின் செல்வாக்கினால் நிறைவேற்றுவது... இத்தகைய உற்சாகம் மிக மதிப்புள்ள போதனை என்று நான் எண்ணினேன். ஒழுக்க நெறி நலத்தைக் காட்டும் இந்த ஓவியத்தைச் சம்பளம் ஓரளவு கெடுத்துக் கிழித்துவிடும் என்ற ஆழ்ந்த உறுதியை நான் கொண்டிருந்தேன்.

சம்பளம் ஏற்படுத்தியதால் அதிகப்படியான சாதனைகள் எவையேனும் நிறைவேற்றப் பட்டன என்று என்னுல் சொல்ல முடியாது. எனவே நான் என் நோக்கைத் தொடர்ந்து வலியுறுத்தி வந்தேன். மாணவர்கள் சம்பளம் வாங்காமல் வேலே செய்தார்கள், தேவையானவை எல்லாவற்றையும் செய்தார்கள், வேலேயின் அளவுமானத்தையும் திட்டத்தை யும் உயர்த்திஞர்கள், பொருளியல் நோக்கிலும் முழு நலம் பெற்றிருந்தார்கள் என்பதை நான் சுட்டிக் காட்டினேன்.

ஆனுல் என்னேச் சூழ்ந்து இருந்தார்கள் பெருத்த செல்வாக்கு உள்ள எதிரிகள். என் போதனே நோக்கங்களில் இவர்களுக்குக் கொஞ்சங்கூட அக்கறை இல்லே. சம்பளம் உழைப்பின் தீவிரத்தையும் உழைப்பில் மாணவர்களின் அக்கறையையும் அதிகமாக்கும் என்று இவர்கள் நம்பிஞர்கள். இந்த நோக்கை என் தலேமை அதிகாரிகள் வெகுவாக ஆதரித் தார்கள். எனவே, இந்தப் போக்கை எதிர்த்துப் போராட வாய்ப்புக்களோ வலிமையோ என்னிடம் இல்லே. அதனுல்தான் கடைசி ஆண்டுகளே நான் சம்பளச் சூழ்நிலேயில் கழித்தேன்.

எனவே, மற்றக் கருத்துக்களே நிராகரிக்கவும், அவை உழைப்பு போதனேயின் எதிர்மறைக் கருத்துக்கள் என்று எண்ணவும் இப்போது என்னுல் முடியும். இத்தகைய கருத்துக் கள் உற்பத்தி இல்லாதபோது, சமுதாய உழைப்பு இல்லாத போது, தனிப்பட்ட முயற்சிகள், அதாவது, உழைப்பு போதனே அளிப்பதை நோக்கமாகக் கொண்டது போன்ற உழைப்பு நிகழ்முறை இருக்கும்போது ஏற்படக் கூடியவை.

உற்பத்தி நிலேமைகள் இன்றிக் கம்யூன் உறுப்பினர் களுக்கு உழைப்பு போதனே அளிப்பதை இப்போது என்னுல் கற்பனே செய்ய முடியவில்லே. இத்தகைய போதனேயும், அதாவது உற்பத்தித் தன்மை இல்லாத உழைப்பு போத னேயும் ஒருவேளே சாத்தியம் ஆகக் கூடும். இத்தகைய பேதானேயை நான் ஒப்புநோக்கில் குறுகிய காலம் அனுபவித் தேன். கோர்க்கி குடியேற்றத்தில் ஆரம்ப ஆண்டுகளில், உற்பத்திக் களமும் உற்பத்தி இயந்திர சாதனங்களும் இல்லாமையால், உற்பத்திச் சுய சேவையைக் கொண்டும் உற்பத்தி நிகழ்முறை எனப்படுவதைக் கொண்டும் நான் ஒரு வகையில் திருப்தி அடைய வேண்டி வந்தது... என்ன ஆயினும், மதிப்புக்களேப் படைப்பதை நோக்கமாகக் கொள்ளாத

உழைப்பு போதனையின் உபயோகமான பகுதி ஆகாது என்று நான் உறுதி கொண்டிருக்கிறேன். ஏனென்றால் பயிற்சி உழைப்பு எனப்படுவது கூட, உழைப்பு உண்டாக்கக் கூடிய மதிப்புக்கள் பற்றிய புரிவையே அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்.

கோர்க்கி குடியேற்றத்தில் வறுமை காரணமாகவே நான் உற்பத்தி தொடங்க அவசரப்பட்டேன். இது விவசாய உற்பத்தி. குழந்தைகள் கம்யூனின் நிலைமைகளில் விவசாயம் அனேகமாக எப்போதுமே நஷ்டமே விளைக்கும். இரண்டு ஆண்டுகளில், அதுவும் நி. எ. ஃபெரே என்னும் விவசாய நிபுணரின் அசாதாரண அறிவும் திறமையும் காரணமாக, லாபகரமான விவசாயம் நடத்த எனக்கு முடிந்தது. அது தானியப் பயிர் வேளாண்மை அல்ல. கால்நடை வளர்ப்பு. எனது முக்கிய உற்பத்திக் களமாக இருந்தது பன்றிப் பண்ணை. கடைசி ஆண்டுகளில் எங்களிடம் இருநூறு பெண் பன்றிகளும் ஆண் பன்றிகளும் பல நூறு பன்றிக் குட்டிகளும் இருந்தன. இந்தப் பண்ணை மிக நவீனத் தொழில் நுட்பச் சாதனங்கள் அமைந்ததாய் இருந்தது. பிரத்தியேகமாகக் கட்டப்பட்ட பன்றித்தொழு இருந்தது. கம்யூன் உறுப்பினரின் உறங்கறைகளில் இருந்ததற்குக் குறையாத துப்புரவு அதில் நிலவியது. குழாய்களும் வடிகால்களும் மடைகளும் இறைவை இயந்திரங்களும் அடங்கிய தொகுப்பு இந்தத் தொழுவைச் சுத்தம் செய்வதற்காக அமைக்கப்பட்டிருந்தது. அங்கே நாற்றம் கூட இல்லை. பன்றித் தொழுவங்கள் பகட்டாகக் காட்சி தந்தன. நவீனத் தொழில் நுட்பச் சாதனங்கள் அமைந்ததும் தீனிச் சேமிப்பு உள்ளதுமான இந்தப் பண்ணை எங்களுக்கு நிறைய வருவாய் தந்தது, நாங்கள் ஓரளவு வசதியாக வாழ உதவிற்று. நன்றாக உண்ணவும் உடுக்கவும் நாங்கள் வாய்ப்பு பெற்றோம். தவிர, பள்ளிச் சாதனங்களை யும் நூலகத்தையும் விரிவுபடுத்த எங்களால் முடிந்தது. நல்ல நாடக மன்றம் கட்டி உரிய சாதன வசதிகள் ஏற்படுத்தவும் எங்களுக்கு இயன்றது. இந்தப் பணத்தைக் கொண்டு நாங்கள் குழல் இசைக் குழுவுக்குத் தேவையான இசைக் கருவிகளும் திரைப்பட இயந்திரமும் பிறவும் வாங்கினோம். இருபதுக்களில் எந்த மானியப் பணத்தையும் கொண்டு எங்களால் வாங்க முடியாதிருந்தவை இவை.

தவிர, முன்னுள் குடியேற்ற உறுப்பினர்களுக்கும் நாங்கள் உதவினேம். இவர்களுடைய எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது. முன்பு குடியேற்றத்திலிருந்த கல்லூரி மாண வர்கள் வறுமை நிலையில் இருந்தால் அவர்களுக்கு உதவி அளித்தோம். மணம் புரிந்து கொண்ட பலருக்கு உதவினேம். பயணங்களை மேற்கொள்வதும் விருந்தினரை வரவேற்பதும் மிகுந்த செலவு ஏற்படுத்தும் விஷயங்கள். நாங்கள் மிக அடிக்கடி நாடக மன்றங்களுக்குப் போனேம். மொத்தத்தில், தனது உழைப்புக் கடமைகளை நிறைவேற்றும் ஒவ்வொரு சோவியத் குடிமகனுக்கும் இருக்க வேண்டிய எல்லா நலங் களையும் பெற்றிருந்தோம்.

நான் குறிப்பிட்ட இந்த எல்லா வசதிகளும் உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்துவதற்கு மிகுந்த நம்பகமான தூண்டுதலாக இருந்தன. எனவே, சம்பளத்தைப் பற்றி அப்போது நான் நினைக்கவே இல்லை.

மாணவர்களிடம் கைச் செலவுக்குப் பணம் இருப்பது இன்றியமையாதது என்பதை நான் உணர்ந்தேன். கைச் செலவுக்குப் பணம் கொடுப்பதைப் பொதுவாகவே பெரிதும் ஆதரிப்பவன் நான்... வாழ்க்கையில் அடி வைப்பவன் சொந்த வரவு செலவு பற்றிய ஓரளவு அனுபவம் பெற்றிருக்க வேண்டும், பணத்தை முறையாகச் செலவிட அறிந்திருக்க வேண்டும். பணம் என்றுல் என்ன என்பதை அறியாதவனுக ஒருவன் வாழ்க்கையில் அடி வைக்கக் கூடாது. ஆனுல் உக்ரே னியக் கல்வித்துறை மக்கள் கமிஸார் குடியேற்ற மாணவர் களுக்குக் கைச் செலவுப் பணம் கொடுப்பதை அப்போது கண்டிப்பாக எதிர்த்தார். இவ்வாறு செய்வதால் நான் வர்த்தக மனப்பான்மையை வளர்ப்பேன் என்றுர். எனவே, யாரிடமும் இந்த விஷயத்தைச் சொல்வதில்லை என்று மாணவர்களிடம் முன்கூட்டி வாக்குறுதி பெற்ற பிறகே கைச்செலவுப் பணம் கொடுக்க என்னுல் முடிந்தது...

இந்தக் கைச் செலவுப் பணத்தை ஒவ்வொரு மாணவனும் செய்த தனித்தனி உழைப்பைப் பொறுத்து அல்ல, சமுதா யத்துக்கு ஒரு மாணவன் மொத்தத்தில் செய்த தொண்டின் படி நான் கொடுத்து வந்தேன்.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனிலும் நான் இதே போன்ற நிலை மையில் இருந்தேன். அங்கே விவசாயம் அல்ல, உற்பத்தித்

தொழில் நடந்தது. அங்கே கம்யூன் உறுப்பினர்கள் உற்பத்தியை இன்னும் அதிகமாகச் சார்ந்திருந்தார்கள். கோர்க்கி குடியிருப்புக்கு அரசு மானியப் பணம் கிடைத்து வந்தது. ஆனால் த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனுக்கு ஒரு கோப்பெக்கு கூடக் கிடைக்கவில்லை. தான் நிலவிய காலம் முழுவதும் அது அரசினிடமிருந்து எவ்வித உதவியும் பெறவில்லை என்று நினைக்கிறேன். எனவே, சமுதாயத்தில் அதிகப்படி வசதிகள் மட்டும் அல்ல, வழக்கமான உணவு, கம்யூன் உறுப்பினர்கள் சாதாரணமாக வயிறு நிறையச் சாப்பிடுவது கூட சமுதாயத்தில் அவர்களுடைய உழைப்பையே சார்ந்திருந்தது.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில், மிகவும் கடினமான நிலைமைகளில் நான் வேலை தொடங்க நேர்ந்தது. கோர்க்கி குடியேற்றத்தில் தொடக்கத்தில் இருந்தவற்றை விட மிக அதிகக் கடினமானவை இந்த நிலைமைகள். கோர்க்கி குடியேற்றத்தில் வேறு ஒன்றும் இல்லாவிட்டாலும் மானியப் பணமாவது இருந்தது. த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனுக்கோ, அதுவும் கிடைக்கவில்லை. த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூன் மிக ஆடம்பரமாகக் கட்டப்பட்டது. தொடக்க ஆண்டுகளில் அது ஓரளவு தருமத்தில் நடக்கும் ஸ்தாபனத்தின் முறையில் ஒழுங்கமைக்கப்பட்டிருந்தது. பெ. எ. த்ஸெர்ழீன்ஸ்கியின் நினைவை என்றென்றும் நிலைத்திருக்கச் செய்யும் விருப்பத்துடன் கட்டிடம் எழுப்பப்பட்டது. அது மிக அழகிய கட்டிடம். சோவியத் யூனியனின் மிகப் பிரபலமான கட்டிடக் கலைஞரால் நிறுவப்பட்ட மிக நேர்த்தியான கட்டிடங்களில் இது ஒன்று. அதன் திட்ட வரைவிலோ முகப்பின் சித்திர அமைப்பிலோ கட்டிடத்தின் அணிகளிலோ சாளரங்களின் வடிவிலோ எவ்வித இசைவின்மையையும் இப்பொழுதும் காண முடியாது. அதில் அருமையான உறங்கறைகளும் நேர்த்தியான முன்கூடமும் குளி தொட்டிகளும் துவலைக் குழாய்களும் இருந்தன. நேர்த்தியான வகுப்பறைகள் விசாலமானவை, அழகியவை. கம்யூன் உறுப்பினர்களுக்கு விலை மிக்க கம்பள உடைகள் தரப்பட்டன, போதிய மாற்றுடைகளும் அளிக்கப்பட்டன, ஆனால் உருப்படியான கடைச்சல் இயந்திரம் ஒன்று கூட அமைக்கப்படவில்லை. எங்களிடம் காய்கறித் தோட்டமோ, நிலப் பகுதியோ இல்லை. மானியப் பணமும் கிடைக்கவில்லை. எப்படியாவது சமாளித்துக் கொள்வார்கள் என்று எண்ணப்பட்டது.

உக்ரேனின் செக்கா* ஊழியர்கள் தங்கள் சம்பளத்தில் $^{1}/_{2}$ சதவிகிதத்தைக் கம்யூனுக்கு நன்கொடையாக வழங்கி வந்தார்கள். தொடக்கத்தில் இந்த நன்கொடையைக் கொண்டே கம்யூன் வாழ்க்கை நடத்தி வந்தது. நன்கொடை மூலம் மாதம் சுமார் இரண்டாயிரம் ரூபிள்கள் கிடைத்தன. எனக்கு வேண்டியிருந்தவையோ மாதத்துக்கு நாலாயிரம், ஐயாயிரம் ரூபிள்கள். பள்ளிக்கூடம் உட்பட எங்கள் நடப்புச் செலவுகளுக்கு இவ்வளவு பணம் தேவைப்பட்டது. துண்டு விழுந்த இரண்டாயிரம், மூவாயிரம் ரூபிள்களைப் பெறுவதற்கு ஒரு வழியும் இல்லை, ஏனெனில் வேலை செய்ய ஒரு வகையும் இல்லை. ஆதாம், யேவாள் காலத்தியத் தொழிற்கூடங்கள் இருந்தன. விவரம் தெரியாமையால் இவற்றை முழுமையாக நம்பி இருந்தது கல்வித் துறை மக்கள் கமிஸாரகம். காலணிகள் தயாரிக்கும் கூடம், தையல் கூடம், தச்சு வேலைக் கூடம் ஆகியவை இவை. இந்தத் தொழிற் கூடங்கள்—காலணிகள் தயாரிக்கும் கூடமும் தையல் கூடமும் தச்சு வேலைக் கூடமும் —போதனை இயல் உழைப்பு நிகழ்முறையின் அடியும் முடியுமாகக் கருதப்பட்டன என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்த அழகில் காலணித் தொழிற்கூடத்தில் சில ஜோடி பூட்சுக் கட்டைகளும் சில மணைகளும் செருப்பூசிகளும் சம்மட்டிகளும் இருந்தனவே தவிர, ஒரு இயந்திரமோ தோல்களோ இல்லை. கைகளால் செருப்புத் தைப்பவர்களை நாங்கள் பயிற்றுவோம், அதாவது, தற்போது நமக்கு அறவே தேவையில்லாத தொழில் தேர்ச்சியை மாணவர்களுக்கு அளிப்போம் என்று எண்ணப்பட்டது.

தச்சுத் தொழில் கூடத்திலும் இவையே போன்ற சாதனங்கள் இருந்தன. சில இழைப்புளி பெஞ்சுகளும் சில இழைப்புளிகளும் இவை. எல்லா வேலைகளையும் கைகளால் செய்து, நல்ல தச்சுத் தொழிலர்களை நாங்கள் பயிற்றுவோம் என்று கருதப்பட்டது.

தையல் கூடமும் புரட்சிக்கு முந்திய முறையில் அமைக்

---

* செக்கா. புரட்சி எதிர்ப்பு, மறைமுக நாச வேலை ஆகியவற்றை எதிர்த்துப் போராடுவதற்கான அனைத்து ருஷ்ய அசாதாரணக் கமிஷன். அரசுப் பாதுகாப்பு நிறுவனம். 1917ம் ஆண்டு டிசெம்பரில் அமைக்கப்பட்டது. 1922ல் அரசாங்க அரசியல் நிர்வாகமாக மாற்றப்பட்டது.—ப-ர்.

கப்பட்டிருந்தது. நாங்கள் நல்ல இல்லக் கிழத்திகளைப் போதித்துப் பயிற்றுவோம், தேவைப்பட்டால் குழந்தைத் துணிகள் கத்தரித்துத் தைக்கவும் ஒட்டுப் போடவும் தங்கள் ஜாக்கெட்டுகளைத் தைத்துக் கொள்ளவும் அவர்கள் வல்லவர்களாய் இருப்பார்கள் என்று எண்ணப்பட்டது.

இந்தத் தொழிற்கூடங்கள் எல்லாம் கோர்க்கி குடியேற்றத்திலேயே எனக்கு அருவருப்பு ஊட்டின. இங்கேயோ, இவை எதற்காக அமைக்கப்பட்டிருக்கின்றன என்று எனக்குப் புரியவே இல்லை. எனவே, எனது கமாண்டர்கள் சபையின் இசைவுடன் இவற்றை ஒரு வாரத்திற்குப் பின் நான் மூடிவிட்டேன். கம்யூனின் சொந்தத் தேவைகளுக்காக ஓரிரு சாதனங்களை வைத்துக் கொண்டேன்.

முதல் மூன்று ஆண்டுகள் த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூன் மிகப் பெரிய வறுமையில் உழல நேர்ந்தது. சில சந்தர்ப்பங்களில் நாள் முழுவதும் நாங்கள் ரொட்டி மட்டுமே சாப்பிட்டோம். முதல் எட்டு மாதங்களுக்கு நான் சம்பளமே பெறவில்லை. கம்யூன்காரர்களுக்குக் கொடுக்கப்பட்ட அதே ரொட்டியை நானும் சாப்பிட வேண்டி வந்தது. கம்யூனின் வறுமை எவ்வளவு பெரிதாய் இருந்தது என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்... சில நேரங்களில் கம்யூனில் ஒரு கோப்பெக்கு கூட இல்லாதிருந்தது. இந்த வறுமையால் நாங்கள் துன்பப்பட்டோம், மனம் புண்ணுேம். ஆயினும் உழைப்பின் வளர்ச்சிக்கு இந்த வறுமையே அருமையான தூண்டுகோலாக விளங்கிற்று. செக்கா ஊழியர்கள்—இதன்பொருட்டு நான் அவர்களுக்குப் பெரிதும் நன்றி பாராட்டுகிறேன்—மானியம் வாங்குவதற்கு இசையவில்லை. கல்வித்துறை மக்கள் கமிஸாரகத்திடம், ''மாணவர்களைப் பராமரிப்பதற்கு எங்களுக்குப் பணம் கொடுங்கள்'' என்று உதவி கேட்க அவர்கள் ஒருப்படவே இல்லை. கம்யூனைக் கட்டிவிட்டுக் குழந்தைகளைப் பராமரிக்க வகை இல்லாதிருந்தது உண்மையிலேயே வெட்கம் அளித்தது. எனவே நாமே உழைத்துச் சம்பாதிக்க வேண்டும் என்பதே, பிழைப்பு நடத்துவதற்காக உழைத்துச் சம்பாதிக்கும் ஒளிவு மறைவற்ற ஆசையே எங்கள் எல்லா முயற்சிகளுடையவும் நோக்கமாய் இருந்தது.

முதல் ஆண்டு எங்கள் தச்சுத் தொழில் கூடத்தில் நாங்கள் மிக நிறைய வேலை செய்தோம். அன்றாட வீட்டு வாழ்க்

கைக்குத் தேவையான நாற்காலிகள், அலமாரிகள் முதலிய வற்றை நாங்கள் தயாரித்தோம். வாங்குவதற்கும் ஆட்கள் இருந்தார்கள். நாங்கள் தயாரித்தவை மிக மோசமாய் இருந்தன. வாங்குபவர்கள் அதிருப்தி அடைந்தார்கள். வழக்கமாக எங்களுக்கு நஷ்டமே ஏற்பட்டது. பலகைகள், மின்சாரம், ஆணிகள், பசை முதலியவற்றின் விலை நாங்கள் தயாரித்த சாமான்களுக்கு நிர்ணயித்த விலைக்குச் சரியாய் இருந்தது. எங்கள் உழைப்புக்குக் கூலி கிடைக்கவில்லை.

நற்காலமாக வாய்த்த ஒரு நிலைமை எங்களுக்கு உதவி யது. உற்பத்தி மேற்பார்வையாளராக ஸலமோன் பரீஸவிச் கோகன் என்பவரை நாங்கள் அழைத்தோம். போதனை இயலைப் பொறுத்தவரை பெரிதும் கோட்பாடுகள் அற்ற மனிதர் இவர். ஆனால் அளவு கடந்த செயலூக்கம் உள்ளவர். இந்தத் தோழருக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன். போதனை இயல் நோக்கில் கோட்பாடு இல்லாதவர் ஆயினும், என் வேலையில் முற்றிலும் புதிய போதனைக் கோட்பாடுகளைப் புகுத்தினார் இவர். இதன்பொருட்டு இவருக்குத் தனிப்பட்ட முறையில் எப்போதாவது நான் நன்றி தெரிவிக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

தம் முதல் சொற்களாலேயே இவர் என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தினார். பருத்துக் கொழுத்து, தொந்தியும் தொப்பையு மாக இருந்தார் அவர். ஓயாமல் அவருக்கு மூச்சு வாங்கியது. ஆனால் படு பிடிவாதக்காரர் அவர்.

கம்யூனுக்கு வந்ததும் அவர் சொன்னார்:

''என்ன? நூற்றைம்பது கம்யூன்காரர்கள், முன்னூறு கரங்கள், தங்கள் சாப்பாட்டுக்குச் சம்பாதிக்க முடியவில்லை யா? இது எப்படி நடக்க முடியும்? அவர்கள் தங்கள் வாழ்க் கைச் செலவுக்கு உழைத்துச் சம்பாதிக்க வல்லவர்களாய் இருக்க வேண்டும். வேறு விதமாக இருக்க முடியாது.''

நான் முன்பு சந்தேகித்து வந்த கோட்பாடு இது. தாம் சொன்னது சரி என்பதை அவர் ஒரு மாதத்தில் நிரூபித்துக் காட்டினார். ஆனால் என்னுடைய பல போதனைக் கருத்துக் களை நான் அவருக்காக விட்டுக் கொடுக்க நேர்ந்தது.

முதலில் அவர் ஓரளவு துர்ச்சாகசச் செயலுடன் வேலை தொடங்கினார். கட்டிடக்கலைக் கல்லூரிக் கட்டுமான நிர்வாக அலுவலகத்துக்குப் போனார்.

''உங்கள் கல்லூரிக்கு வேண்டிய மேஜைகள், நாற்காலி கள் முதலியவற்றை நான் செய்து தருகிறேன்'' என்றார்.

இவ்வாறு சொல்வதற்கு எவ்வித ஆதாரமும் அவரிடம் இல்லை. மேஜை, நாற்காலிகள் முதலியன செய்யும் திறமை எங்களுக்கு இல்லை. அவற்றைச் செய்வதற்குத் தேவையான சாதனங்களும் இயந்திரங்களும் எங்களிடம் இல்லை, மூலப் பொருள்கள் இல்லை. ஸலமோன் பரீஸவிச் கோகனும் நூற்றைம்பது கம்யூன் உறுப்பினர்களுமே எங்களிடம் இருந் தார்கள்.

நல்ல வேளையாக, அந்த மனிதர்கள் எளிதில் நம்பி விட்டார்கள், வெகுளிகளாய் இருந்தார்கள்.

''ஆகா, செய்து தாருங்களேன்'' என்றார்கள்.

''ஆர்டர் எழுதுவோம்.''

ஆர்டர் எழுதப்பட்டது. விரிவுரை மன்றத்துக்குப் பல விதச் சாதனங்கள் இத்தனை, மேஜைகள் இத்தனை, நாற்கா லிகள் இத்தனை, அலமாரிகள் முதலியன இத்தனை என்று விவரமாகப் பட்டியல் எழுதப்பட்டது. மொத்த விலை இரண்டு லட்சம் ரூபிள்கள். இந்தப் பட்டியலைக் கண்டதும், மருத்துவரை அழைத்து ஸலமோன் பரீஸவிச்சின் உடல் வெப்பத்தை அளக்கச் சொல்லுவோமா என்று நான் நினைத் தேன்.

''இந்தப் பொறுப்பை நீங்கள் எப்படி ஏற்றுக் கொண் டீர்கள்?'' என்று கேட்டேன்.

''செய்து தருவோம்'' என்றார் அவர்.

''இருந்தாலும், எதைக் கொண்டு வேலை தொடங்கு வோம்? நமக்குப் பணம் வேண்டும், பணமோ இல்லையே.''

''எப்போதுமே, மனிதனிடம் பணம் இல்லாத சமயத்தில் அவன் பணம் இல்லை என்று சொல்வான். பிற்பாடு எங்கிருந்தாவது பணம் திரட்டி விடுவான். நாமும் திரட்டு வோம்.''

''எங்கிருந்து? யார் தருவார்கள்?''

''தரக்கூடிய அசடர்கள் உலகில் இல்லாமல் போய்விட் டார்களா என்ன?''

சொன்னால் நம்ப மாட்டீர்கள், ஆனால் கொடுப்பவரை அவர் தேடிக் கண்டுபிடித்து விட்டார். அதே கல்லூரியில்,

கோகனுடைய யோசனைக்கு இசைந்த (இந்தச் சொல்லுக்கு மன்னிக்க வேண்டும்) ''அசடர்'' ஒருவர் கிடைத்தார்.

''நாங்கள் நாற்காலி மேஜைகளும் அலமாரிகளும் தயாரிப் போம். ஆனால் அவற்றை வைப்பது எங்கே? நீங்களோ இப்போதுதான் வானக் கிடங்கு தோண்டுகிறீர்கள். நாங்கள் தட்டுமுட்டுச் சாமான்களைச் சீக்கிரம் செய்து முடித்து விடுவோம். ஆனால் அவற்றை எங்கே வைப்பது?'' என்றார் ஸலமோன் பரீஸவிச் கோகன்.

''ஆமாம், வைக்க இடம் இல்லைதான்'' என்று அந்த மனிதர் ஒப்புக் கொண்டார்.

''நாங்கள் அவற்றை எங்களிடம் வைத்திருக்க முடியும்'' என்றார் கோகன்.

''உங்களிடம் அதற்கு இடம் இருக்கிறதா என்ன?''

''இல்லை. ஆனால் நாங்கள் பண்டசாலை கட்ட முடியும். அதற்கு ஐம்பதாயிரம் ரூபிள்கள் வேண்டும்.''

''இந்தாருங்கள் ஐம்பதாயிரம் ரூபிள்கள்.''

நாங்கள் ஐம்பதாயிரம் ரூபிள்களைப் பெற்றுக் கொண் டோம். ஆனால் பண்டசாலை கட்டுவதில்லை என்று நானும் கம்யூன் உறுப்பினர்களும் கோகனும் தீர்மானித்தோம். மரத்தைச் செப்பம் செய்யும் இயந்திரங்களும் மூலப் பொருள் களும் வாங்கினோம். கோகன் மேற்கொண்டு முன்பணம் வாங் கினார். கட்டிடக்கலைக் கல்லூரிக்கு வேண்டிய சாதனங்களை அவர் தயாரிக்கவே இல்லை. சந்தையில் விற்பனை ஆகக் கூடிய பல வித சாமான்களைத் தயாரிக்கத் தொடங்கினார். சந்தையில் விற்கும் பொருட்டு சாதாரண நாற்காலிகள் செய்யலானார். ஆரம்பத்தில் கோணல் மாணலான, ஒன்றுக் கும் உதவாத நாற்காலிகள் செய்யப்பட்டன. கம்யூன் உறுப்பினர்கள் நாற்காலிகள் செய்வதில் தேர்ச்சி பெறும் வரையில் வெறும் கால்கள் தயாரிப்பார்கள் என்றார் கோகன். வேலைப் பிரிவினையை அவர் அமல்படுத்தினார். நான் இதைப் பெரிதும் சந்தேகித்தேன்.

அவர் வேலையைப் பின்வருமாறு பிரித்தார்: ஒருவன் இழைத்தான், இன்னொருவன் ரம்பத்தால் அறுத்தான், மூன் றாமவன் துப்புரவு செய்தான், நான்காமவன் மெருகிட்டான், ஐந்தாமவன் கண்காணித்தான், மற்றவர்கள் இவ்வாறே வெவ்வேறு வேலைகளைச் செய்தார்கள். ஆனால் போதனை

நிகழ்முறை எதுவும் வாய்க்கவில்லை. என் கம்யூன்காரர்கள் இதைக் கவனித்து, நாம் இங்கே ஒரு வேலையும் கற்க மாட்டோம் என்றார்கள். இது அவசியமான வேலை, கம்யூனுக்காக வேலை செய்வது அவசியந்தான், ஆனால் பயனும் ஏற்படும் படியும் வேலை கற்பதும் முடியும்படியும் ஒழுங்கமைக்க வேண்டும். பலகைகளை இழைப்பதிலும் கால்கள் செய்வதிலும் கற்றுக்கொள்ள ஒன்றும் இல்லை என்று பொதுக் கூட்டத்தில் அவர்கள் கூறினார்கள்.

ஸலமோன் பரீஸவிச் கோகன், தம் துறையில் உண்மையாகவே விஷயஞானம் உள்ளவராக இருந்தார். நாற்காலி தயாரிப்பதை அவர் பற்பல தனி வேலைகளாகப் பிரித்தார். ஒவ்வொரு கம்யூன் உறுப்பினனும் இவற்றில் ஒரே ஒரு வேலையை மட்டும் செய்தான். ஆனால் இந்த முறையின் பயனாக நாங்கள் ஏராளமான நாற்காலிகளைத் தயாரிக்கலானோம்.

விரைவில் எங்கள் முகப்பு வெளி நாற்காலிகளின் குவியல்களால் நிறைந்து விட்டது. நாற்காலிகள் தரத்தில் படுமோசமாக இருந்தன என்பது உண்மையே. தொடக்கத்தில் கோகன் பல விதங்களில் சீர்படுத்தினார். நாற்காலிகள் செய்து முடிந்ததும் அவர் வச்சிரப் பசையையும் மரத்தூளையும் கலந்து தனிவகை லப்பம் தயாரித்தார். இந்த லப்பத்தால் எல்லா ஓட்டைகளையும் அடைத்தார், மெருகிட்டார். ஆறு மாதங்களில் அவர் ஆரம்ப மூலதனமான ஐம்பதாயிரம் ரூபிள்களை இரண்டு லட்சம் ரூபிள்கள் ஆக்கி விட்டார். அப்போது அவர் மேலும் இயந்திரங்களும் கட்டுமான மரமும் வாங்கி நாடக மன்றச் சாதனங்கள் தயாரிக்கத் தொடங்கினார்...

பிற்காலத்தில் கோகன் இந்தப் பொறுப்பை மற்றவர்களிடம் விட்டு விட்டு, தமது தேர்ச்சிக்கும் இயற்கைத் திறமைக்கும் அதிகம் பொருந்துவதான தரவுத் துறைத் தலைவர் பதவியை ஏற்றார். அவருடைய முந்திய பொறுப்பைப் புதிய பொறியாளர் ஒருவர் ஏற்றார். எனினும், சிறு சிறு தனி வேலை நிகழ்முறைகளாக உழைப்புப் பிரிவினை செய்வது பயனுள்ளது என்ற உறுதி எனக்கு ஏற்பட்டது. அகன்ற விழிகளுடன் இதை நேருக்கு நேராகப் பார்க்கையில், இது மனச் சோர்வு ஏற்படுத்துகிறது. ஆனால் அதைக் குறித்த காலப் பகுதியில் பார்க்கும்போது அது பயங்கரமாகவே

இல்லை. ஒவ்வொரு தனிச் சிறுவனும் சிறுமியும் குறித்த நேரத்தில் ஒரே ஒரு வேலையைத் திரும்பத் திரும்பச் செய்கிறார்கள், இது அவர்களுக்கு எவ்விதத் தேர்ச்சியும் அளிப்பதில்லை என்று தோன்றலாம் தான். ஆனால் கம்யூனில் கழிக்கும் சில ஆண்டுக் காலத்தில் ஒவ்வொரு கம்யூன் உறுப்பினனும் மிகப் பெருத்த எண்ணிக்கையில் இத்தகைய பல்வேறு வேலைகளைச் செய்கிறான். முடிவில் பகுதிகளை ஒன்று சேர்ப்பது போன்ற சிக்கலான வேலைகளை மேற்கொள்கிறான். இவ்வாறு அவன் உண்மையில் மிகுந்த தேர்ச்சி பெற்ற தொழிலாளி ஆகி விடுகிறான். அவன் விரிவான சமூக உற்பத்திக்கு இன்றியமையாத தொழிலாளி ஆகிறான், வெறும் குடிசைத் தொழிலாளி அல்ல.

மரச் சாமான்கள் தயாரிக்கும் வேலையிலேயே நான் சதா காலமும் ஈடுபட்டிருந்தால் என் கம்யூன் உறுப்பினர்கள் மரச் சாமான்கள் தயாரிக்கும் தொழிற்சாலையில், அதுவும் விரிவான உழைப்புப் பிரிவினை கொண்ட தொழிற்சாலையில் மட்டுமே வேலை செய்யத் தகுதி பெற்றிருப்பார்கள் என்பது உண்மையே. ஆனால் வர்த்தகத் துறை வெற்றி, பொருள் உற்பத்தித் திறனில் கிடைத்த வெற்றி எங்கள் தேவைகள் முழுவதையும் நிறைவேற்ற வாய்ப்பு அளித்தது. எனவே, ஸலமோன் பரீஸவிச் கோகனது வருகைக்கு ஓராண்டுக்குப் பின் செக்கா அதிகாரிகளுக்கு நன்றி தெரிவித்து, அவர்கள் தங்கள் சம்பளங்களிலிருந்து எங்களுக்கு நன்கொடை வழங்குவதை நிறுத்தும்படி கேட்டுக் கொண்டோம். இன்னும் ஓர் ஆண்டுக்குள் எங்கள் பணம் ஆறுலட்சம் ரூபிள்கள் பாங்கில் சேமிக்கப்பட்டு விட்டன.

எங்கள் உற்பத்தி எங்களுக்கு அளித்த நன்மை இது. ஆறு லட்சம் ரூபிள்கள் சேமிப்பில் இருந்ததால் நாங்கள் தருமத்தில் நடக்கும் நிறுவனமாக இன்றி, நம்பத் தகுந்த. பெரிய தொழில் நிலையம் ஆகி விட்டோம்.

கட்டுமானத்துக்கு எங்களை நம்பிக் கடன் கொடுத்தது பாங்கு. 1931ல் நாங்கள் முதல் தொழிற்சாலையைக் கட்டினோம். இது உலோகத் தயாரிப்புத் தொழில்துறையைச் சேர்ந்த பெரிய தொழிற்சாலை. அது வரை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்த மிகச் சிக்கலான இயந்திரங்களான துரப்பணக் கருவிகளை இது தயாரித்தது. இந்தத்

துரப்பண இயந்திரங்களுக்குத் தனி மோட்டாரும் நூற்று ஐம்பது பகுதிகளும் பல தொங்கு பல் சக்கரங்களும் உண்டு. எனவே கடைச்சல் இயந்திரங்களும் பல் வெட்டும் இயந்தி ரங்களும் மிகச் சிக்கலான பகுதி இணைப்பும் வார்ப்பட வேலை யும் இவற்றைத் தயாரிக்கத் தேவைப்பட்டன. ஆயினும், மரச் சாமான்களின் தயாரிப்பில் பெற்ற வேலைப் பிரிவினை அனுபவத்தைப் பயன்படுத்தி, உலோகக் கருவிகளின் தயாரிப் பில் மிக விரைவாகத் தேர்ச்சி பெறுவது எங்களுக்குச் சாத்தியம் ஆயிற்று. ஒரு பகுதியைத் தயாரிப்பதில் ஈடுபட்டு அந்த நிகழ்முறையை முற்றிலும் செவ்வைப்படுத்தும் மனித னின் உளப்பாங்கு உலோகத் தொழிலிலும் பயன்பட்டது. மிகச் சிக்கலான இயந்திரங்களைச் செலுத்துவதில் தேர்ச்சி பெற எங்களுக்குச் சுமார் ஒன்றரை மாதக் காலம் தேவைப் பட்டது. இவ்வளவிற்கும் இந்த இயந்திரங்களை இயக்கியவர் கள் பதின்மூன்று, பதினான்கு வயதுப் பையன்கள்.

உலோகத் தயாரிப்புத் தொழிற்சாலையில் எங்கள் வேலை மிக வெற்றிகரமாக நடந்ததால் நாங்கள் நிழற்படக் கருவி கள் செய்யும் தொழிற்சாலையைக் கட்டத் தொடங்கினோம். பல்வகை நுணுக்கங்கள் கொண்ட இந்தத் தொழிற்சாலை சொந்த இயந்திர சாதனங்களின் உதவியால் நிறுவப்பட்டது. கம்யூனின் தற்போதைய நிழல் படக் கருவித் தொழிற்சாலை அதன் சொந்தத் தொழிற்சாலை ஆகும். அங்கே உள்ள சில இயந்திரங்களை வெகு சில தொழிற்சாலைகளிலேயே காண லாம். ஒரு மிக்ரோன் (மீட்டரில் பத்து லட்சத்தில் ஒரு பங்கு) வரை துல்லியமான மிகச் சிக்கலான செய்முறை உள்ளவை இவை. அதாவது, இந்தத் தொழிற்சாலையில் மிகச் சிக்கலான கருவிகளும், கருவிகளின் தொகுப்பும் விஞ்ஞான சாதனங் கள், கொண்டதும் நுட்பமானதும் ஆகிய கண்காணிப்பு உத்தியும் தேவைப்பட்டன. மொத்தத்தில் இது மிகச் சிக்க லான உற்பத்தித் தொழில்.

உழைப்புப் பிரிவினையுடன் நாற்காலிகள் தயாரிப்பதை நாங்கள் தொடங்கியிருக்காவிட்டால் இந்தத் தொழிற்சாலை அமைப்புக்கு எங்களால் வந்திருக்க முடியாது என்று நான் உறுதியாக எண்ணுகிறேன். எதிலிருந்து தொடங்குவது என்பது முக்கியம் அல்ல, நவீன நுணுக்கங்களின் படி அமைந்த உற்பத்தியின் தர்க்கப் பொருத்தமே முக்கியம் என்று நான்

புரிந்து கொண்டேன். உழைப்புப் பிரிவினையும் திட்ட வகுப்பும் இத்தகைய நுணுக்கங்களாகும்.

உற்பத்தித் தொழிலில் அனுபவம் இல்லாதவனுக்கு உற்பத்தியில் திட்டம் என்பது என்ன என்று புரிந்து கொள்வது கடினம். எத்தனை மேஜைகளும் நாற்காலிகளும் செய்ய வேண்டும் என்று கணக்கிடுவது மட்டும் திட்டம் அல்ல. அளவுமானங்களும் உறவுகளும் நுட்பமாகப் பின்னிப் பிணைந்தது ஆகும் திட்டம். எல்லாப் பகுதிகளும் அம்சங்களும் சேர்ந்த பின்னல் இது. ஓர் இயந்திரத்திலிருந்து மற்றொன்றுக்கு இயங்குவதாகும் இது. மூலப் பொருளின் தரப் பொருத்தம், மூலப் பொருள் தரவு, கருவி வினியோகம், அதன் செப்பம், நிறைவுபாடு முதலியவற்றுக்கு முன்கூட்டி வகை செய்ய வேண்டும். கண்காணித்துச் சரி பார்ப்பதற்கான தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். நல்ல உற்பத்தித் தொழிலில் கண்காணித்துச் சரிபார்ப்பது பல்வகைப் பொருத்தங்கள், அளவுமானங்கள், நிலைமைகள் ஆகியவற்றின் தொகுப்பு ஆகும். மனிதனது செயலின் சிக்கலான ''சாதன அமைப்பு'' ஆகும் இது. இம்மாதிரிச் ''சாதன அமைப்பில்'' நம்முடைய குடிமக்களைப் பயிற்ற வேண்டும். ஏனென்றால் அவர்கள் குடிசைத் தொழிலில் அல்ல, மிக நவீனத் தொழில் நுட்ப முறைப்படி ஒழுங்கமைந்த பெரிய அரசு அளவான உற்பத்தித் தொழிலில் பங்கு ஆற்றுகிறார்கள்.

த்ஸெர்ஜீன்ஸ்கி கம்யூனில் இந்தச் சாதன அமைப்பு ஏற்பட்ட பின், காலணித் தொழில் கூடத்தையோ தையல் தொழில் கூடத்தையோ மட்டும் அல்ல, கைகளால் மரச் சாமான்கள் செய்யும் தொழில் கூடத்தைக் கூட என்றால் எண்ணிப் பார்க்க முடியவில்லை...

எங்கள் கம்யூனில் உழைப்பு போதனை படிப்படியாக உற்பத்தித் தொழில் போதனையாகப் பரிணமித்தது. அதன் விளைவு என்ன ஆகும் என்று நானே எதிர்பார்க்கவில்லை. ஆனால் கடைசி ஆண்டுகளில் எனது கம்யூனில் பதின்மூன்று, பதினான்கு வயதுப் பையன்கள் கணிதமும் நுட்பமான அறிவும் தேவையாய் இருந்த கடைச்சல் இயந்திரங்களின் தொகுப்பை இயக்கிய போது நான் வியப்பு அடையவில்லை.

மூலப் பொருளின் தரத்தையும் உளியின் தரத்தையும் அறிந்திருப்பதும் வரைபடத்தைப் படிக்கத் திறன் பெற்றிருப்

பதும் பிறவும் இந்த வேலைக்குத் தேவை என்பதை நான் சொல்லப் போவதில்லை. பதினான்கு, பதினைந்து வயதுச் சிறுவன் தேர்ந்த கடைச்சல் இயந்திரத் தொழிலாளியாக இருந்து கொண்டு கடைச்சல் இயந்திரத் தொழிலாளிகளின் குழுவை மேல் பார்க்கிறான். அவன் அருகே பதினாறு, பதினேழு வயதுப் பையன் தொழிற்கூடத் தலைவனாகப் பணி ஆற்று வதைக் காண்கிறீர்கள். ஆனால் இது ஒப்பு நோக்கில் சாதாரண மான தொழிற்கூடம். பத்தொன்பது வயது இளைஞனோ, சிக்கலான தொழிற்கூடத்துக்குத் தலைவனாய் இருக்கிறான். உதாரணமாக, முன்பு என் அஞ்சல்காரனாக இருந்தவனும் ஓடவும் தோழனைக் கண்டுபிடிக்கவும் மட்டுமே திறமை கொண்டிருந்தவனும் ஆன வலோத்யா கோஸர், சிக்கலான இயந்திரத் தொழிற்கூடத் தலைவனாகப் பணி ஆற்றினான்.

வயது வந்த மனிதனுக்கு ஒருவேளை பத்து ஆண்டுகள் தேவைப்படும் இந்தப் பாதையை உற்பத்தித் தொழிலில் வேலை செய்யும் சிறுவன் ஓரிரு ஆண்டுகளில் கடந்து விடுகிறான். நான் கடந்து வந்த இந்தப் பாதை அவ்வளவு சுளுவானது அல்ல. சிறுவர்களும் சிறுமிகளும் தங்கள் உற்பத்தித் தொழி லில் இவ்வளவு பெரிய தேர்ச்சி பெறுவார்கள் என்பதை எடுத்த எடுப்பில் நம்ப முடியவில்லை. சிறுமிகளைப் பற்றி ஒரு திருத்தம் செய்வது அவசியம். உற்பத்தியில் பெருத்த அளவு மானங்களை அவர்களும் விரைவில் எட்டி விடுகிறார்கள், ஆனால் உலோகத் தயாரிப்பில் அல்ல. பகுதிகளை இணைப்பது, பொருத்துவது ஆகியவற்றிலும் கடினமற்ற உடல் உழைப்பு தேவைப்படும் உற்பத்தித் தொழிலிலும், சிறப்பாக பார்வைக் கண்ணாடி வில்லைகள் தயாரிப்பதிலும் அவர்கள் விரைந்த தேர்ச்சி பெறுகிறார்கள். இத்தகைய கண்ணாடி வில்லைகள் தயாரிப்பதற்குத் துப்புரவும் வெளித் துல்லியமும் அதிகமாகத் தேவைப்படுகின்றன. துல்லியமான அங்க அசைவு களும் கவனமும் தேவைப்படும் துறையில் பெண்கள் பையன் களை முந்திவிட்டார்கள். சிறுவர்கள் அமைப்பு வரைவில் அதிகத் திறமை பெற்றிருந்தார்கள், சிறுமிகளோ, சிக்கலும் பொறுப்பும் வாய்ந்த செய்முறைகளில் துல்லியமாகவும் ஒழுங்கமைப்புடனும் வேலை செய்யும் திறமையில் சிறுவர் களை மிஞ்சி விட்டார்கள். கண்ணாடி வில்லைகள் தயாரிக்கும் வேலையைப் பையன்களால் சமாளிக்க முடியவில்லை. இந்த

வேலை முழுதும் பெண்களிடம் ஒப்படைக்கப்பட்டது. மிக நுண்ணிய தொகுப்புக்களைப் பொருத்தும் செய்முறைக்குத் துல்லியமான கை அசைவும் துல்லியமான பார்வையும் பகுதிகள் மேஜை மேல் மிக ஒழுங்காகக் குறித்த இடங்களில் வைக்கப்பட்டிருப்பதும் தேவை. இங்கும் உற்பத்தியிலும் உற்பத்தி ஒழுங்கமைப்பிலும் பெண்கள் பையன்களை முந்தி விட்டார்கள்.

பொதுவாகவே பையன்கள் ஆர்வம் மிக்க உலோகத் தயாரிப்பாளர்களாக இருந்தார்கள். பெண்களுக்கோ, உலோகம் இத்தகைய ஆர்வத்தை ஏற்படுத்தவில்லை. இரும்பு, செம்பு, நிக்கல் முதலிய உலோகங்கள் சிறுவர்களுக்கு எப்போதும் உள்ளக் கிளர்ச்சி ஏற்படுத்துகின்றன. சிறுமிகளோ, கடைச்சல் இயந்திரங்களையும் சுழல் இயந்திரங்களையும் விட்டுத் தூர விலகினுர்கள். பசைக் கலவைகள், தெறிக்கும் துளிகள், அழுக்கு ஆகியவற்றுடன் சம்பந்தப்பட்ட வேலைக்குரிய இயந்திரங்களை அவர்கள் நெருங்குவதே இல்லை.

கம்யூன் சிறுமிகள் உலோக வார்ப்புத் தொழிற்கூடத்தில் ஒருபோதும் வேலை செய்து பார்க்கவில்லை.

எனது சமுதாயம் தன் கடைசி ஆண்டில் மேற்கொண்ட உழைப்பு இத்தகையது.

இந்த உழைப்பைப் போதனைச் செயல்முறையின் வழக்கமான புரிவின் நோக்கில் ஆராய்ந்தால், அதாவது தனி மாணவன், அவனுடைய போதனை ஆசிரியன் என்ற நோக்கில் பார்த்தால், உற்பத்தித் தொழில் சரி அல்லாத சாதன அமைப்பு கொண்ட போதனைச் செயல்முறையாகத் தோன்றக் கூடும். ஆனுல் சமுதாயத்திலும் குறித்த காலப் பகுதி முழுவதிலும் அதைப் பார்வையிட்டால் அது மிக விரும்பத்தக்கதாகத் தோற்றம் அளிக்கும்.

எல்லா விதச் சிக்கலான உற்பத்தித் தொழிலும் பலவகைச் சுவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்ற விரிவான வாய்ப்பு அளிக்கிறது. இந்தக் காரணத்தாலேயே அது நல்லது.

எங்கள் ''ஃபேத்'' நிழற்படக் கருவி உற்பத்தித் தொழில் போன்ற உற்பத்தித் தொழிலில் பெரிய அமைப்புப் பட வரைவுப் பிரிவு இருக்கிறது. இந்தப் பிரிவில் பதிற்றுக் கணக்கில் அமைப்புப் பட வரைவாளர்கள் வேலை செய்கிருர்கள்.

இது தவிர, திட்ட வகுப்புப் பிரிவு, கண்காணிப்புப் பிரிவு, பெரிய கருவித் தொழிற்கூடம், வர்த்தகப் பிரிவு ஆகியவை உள்ளன. எனவே ஒவ்வொரு மாணவனுக்கும் தனது இயல்பான விருப்பத்துக்குப் போக்கு விட வாய்ப்பு கிடைத்தது. மாதிரி அமைப்பு அலுவலகத்தில் (மாதிரி அமைப்பாளர்கள், அமைப்புப் பட வரைவாளர்கள்) கம்யூன் உறுப்பினர்களே பணி ஆற்றினர்கள். அதாவது, இந்த வேலையில் இயல்பான நாட்டமும் திறமையும் இருந்தவர்கள் இங்கு வேலை செய்தார்கள்.

கருவித் தொழிற்கூடம் யாவற்றிலும் அதிகமான தேர்ச்சியை அளித்தது. அதாவது சிறுவன் எல்லாத் தொழிற்கூடங்களிலும் பிரிவுகளிலும் வேலை செய்த பின் முடிவாகக் கருவித் தொழிற்கூடத்தில் தனது உற்பத்தித் தொழிற் கல்வியை நிறைவுபடுத்திக் கொள்கிருன். அங்கிருந்து அவன் இயந்திர வார்ப்பாளனுக வெளியேற முடியும், அதாவது கருவித் தயாரிப்பாளனுக்கு உரிய தலைசிறந்த தேர்ச்சி பெற முடியும்.

கம்யூனிலிருந்து வெளியேறும் மனிதனது சுபாவத்தைப் போதித்து உருவாக்குவதற்கு இந்த உற்பத்தித் தொழில் செயல்முறையின் ஒவ்வொரு பகுதியும் பயனுள்ளதாய் இருப்பதைக் காண்கிறேன். கம்யூனிலிருந்து வெளியேறிக் கல்லூரிகளில் பயிலும் கம்யூன் உறுப்பினர்கள் நகரத்திலிருந்து வந்து அடிக்கடி என்னைக் காண்கிருர்கள். இவர்கள் எல்லோரும் உயர் கல்வி பெற்றவர்கள், அல்லது பெறுபவர்கள். வரலாற்று அறிஞர்கள், புவி இயலார், மருத்துவர்கள், பொறியாளர்கள், மாதிரி அமைப்பாளர்கள் முதலியோர் இவர்களில் இருக்கிருர்கள். ஆனல் எல்லாருடைய சுபாவத்திலும் கண்ணேட்டங்கள், பழக்க வழக்கங்கள், நோக்கு நிலைகள் முதலியவற்றிலும்விரிவும் பல்வகைப்பாடும் உள்ள தனி இயல்பு காணப்படுகிறது.

அண்மையில் ஒரு மருத்துவன் என்னைப் பார்க்க வந்தான். கம்யூனில் அவன் மெருகிடும் பெரிய இயந்திரத்தில் மெருகிடுபவனுக வேலை செய்தான் என்பது எனக்கு நினைவு இருக்கிறது. அந்த இயந்திரத்தில் பகுதிகள் முற்றுக, மில்லிமீட்டரின் நூறில் ஒரு பங்கு வரை துல்லியம் ஆக்கப்பட்டன. அவன் அந்த வேலையைச் செய்து வந்தான்.

''இந்தா, மில்லிமீட்டரில் நூறில் ஒரு பங்கு அராவி எடு'' என்று மேஸ்திரி அவனிடம் சொல்லுவான்.

அவன் பகுதியை இயந்திரத்தில் கொடுத்து அராவிவிட்டு, சரி பார்க்காமலே, அளவு கருவிகள் எவற்றையும் பயன் படுத்தாமலே, ''இந்தாருங்கள், நூறில் ஒரு பங்கு'' என் பான்.

அவனுடைய கண்களும் கைகளும் இயந்திரமும் அவ்வளவு பழகித் தேர்ந்திருந்தபடியால் அவன் சரி பார்க்காமலே வேலை செய்தான். இயந்திரத்தின் விஷயத்தில் அவனுடைய நுண் உணர்வு முழுமையாகச் செப்பம் அடைந்திருந்தது. இந்த அருமையான மெருகுத் தொழிலாளன் இப்போது மருத்துவன். ஆனால் அவனுடைய தத்துவத்தில் துல்லியத்துக்கு அளவுகடந்த மதிப்பு இருப்பதை இப்போதும் நான் உணர்கிறேன். கம்யூன் உறுப்பினர்களை நோக்குகையில், ஒழுங்கமைப்பு, பல்வகை உற்பத்தி வேலைகளில் அவர்கள் பெற்ற தேர்ச்சிகள் அவர்களுடைய நடத்தையில் இப்போதும் பிரதிபலிப்பதை நான் காண்கிறேன்.

தனக்குச் சொந்தமான தொழிற்சாலை உள்ளதும் அந்தத் தொழிற்சாலைக்குப் பொறுப்பு ஏற்பதுமான சமுதாயம், ஒழுங்கமைப்பாளருக்கு உரிய பல திறமைகளைப் பெறுகிறது. சோவியத் யூனியனின் குடி மக்களுக்கு ஒருவேளை யாவற்றிலும் அதிகமாகத் தேவையான திறமைகள் இவை. ஒவ்வொரு பொதுக் கூட்டத்திலும், கமாண்டர்களின் உற்பத்தி ஆலோசனைக் கூட்டம் ஒவ்வொன்றிலும், சிறு கூட்டங்களிலும் குழுக்களிலும், தொழிற்கூடத்திலும், அன்றாட உரையாடலின் போதும் இந்த ஒழுங்கமைப்புத் திறமை பயிலப்படுகிறது. ஒவ்வொரு தனித் தொழிலாளியிடம் மட்டும் இன்றி, ஒழுங்கமைப்பாளன் என்ற முறையில் ஒவ்வொரு கம்யூன் உறுப்பினனிடமும் பொறுப்பைக் கோருவதற்கு சமுதாயம் எப்போதும் பழகுகிறது. உற்பத்தியின் சிக்கல் முழுவதையும் நீங்கள் கருத்தில் கொள்வது அவசியம் என்றால், உற்பத்தித் தொழிலின்பால் மனிதனுடைய உறவின் சிக்கல் முழுவதையும் கூட நீங்கள் கருத்தில் கொள்வது அவசியம் ஆகும். இயந்திரத் தொழிற்கூடம், பார்வைக் கண்ணாடித் தொழிற்கூடம், பொருத்திச் சேர்க்கும் ஒரு தொழிற்கூடம், பொருத்திச் சேர்க்கும் வேறொரு தொழிற்

கூடம், கருவித் தொழிற்கூடம் ஆகியவற்றின் பயிற்சி மாணவர்கள் வீற்றிருக்கும் பொதுக் கூட்டத்தில், எவையேனும் பகுதிகள் பற்றுக்குறையாய் இருக்கும் பிரச்சினையை எவனுவது கிளப்புவான். பொருத்திச் சேர்க்கும் தொழிற்கூடத்தினர் தங்கள் கருத்தை வெளியிட்டு விட்டு, பொருத்திச் சேர்க்கும் தொழிற்கூடத்துடன் எவ்விதத் தொடர்பும் இல்லாதவர்களைக் கருத்து வெளியிடும்படி கேட்டுக் கொள்வார்கள். அந்த மனிதர்களும் கருத்து வெளியிடுவார்கள். அதாவது எது பற்றுக்குறையாய் இருக்கிறது என்பதை அவர்கள் புரிந்து கொண்டிருப்பார்கள், ஒழுங்கமைப்பாளர்கள் என்ற முறையில் கருத்து வெளியிடுவார்கள்.

ஒழுங்கமைப்புத் திறமைக்கு இன்னும் அதிகமான பயிற்சி தொழிற்கூடத்திலேயே வேலையின் போது கிடைக்கிறது. கடைச்சல் இயந்திரத் தொகுப்புக்குத் தலைமையேற்று நடத்துவதற்கு, தனி இயக்குநனுக்கும் ஒழுங்கமைப்பாளனுக்கும் உரிய திறமை தேவைப்படுகிறது.

இத்தகைய உற்பத்தித் தொழிலை ஒழுங்கமைப்பது அவ்வளவு எளிதல்ல என்பதை நான் அறிவேன். ஆனால் எளிய விஷயங்களைப் பற்றி மட்டுமே பேசுவதும் கூடாது அல்லவா? எனக்கும் இந்த உற்பத்தித் தொழிலை ஒழுங்கமைக்கப் பதினறு ஆண்டு உழைப்பு தேவைப்பட்டது. வறுமையும் போராட்டமும் நிறைந்த பதினறு ஆண்டுகள் தேவைப்பட்டன. அதனால் என்ன? எந்தக் குழந்தைகள் சமுதாயமும், ஆழ்ந்த முறையில் உற்பத்தியை மேற்கொள்ள விரும்பினல், பத்து ஆண்டுகளுக்குக் குறையாத காலம் செலவிடத்தான் செய்யும். இந்த உற்பத்தித் தொழிலுக்காகப் போராடிய முதல் தலைமுறைகள் எல்லா நலங்களையும் அனுபவிக்காமலே போய்விடும். அடுத்த தலைமுறைகள் அவற்றை அனுபவிக்கும்.

முதல் தலைமுறைகள் மனத்தாங்கலுடன் போகும் என்று எண்ணலாகாது. வருங்காலத்துக்காகக் குறிக்கப்பட்ட லட்சியங்களின் பொருட்டுப் போராடுவது தேர்ச்சியும் போதனையும் பெறுவதன் அர்த்தத்தில் மிகுந்த மதிப்பு உள்ளது. ஒருவேளை இந்தச் செயல்முறை அனைத்திலும் முக்கியமாகத் திகழ்வது, சமுதாயத்தின் இந்த ஒன்றித்த போராட்டம்,

விரைந்த முன்னேற்றம், தெளிவாகக் குறிக்கப்பட்ட லட்சியங்களை நோக்கி விரைவது தான் போலும்.

எனது சமுதாயத்துக்கு முன் தெளிவாக வரையறுக்கப்பட, கடினமான குறிக்கோள் எப்போதும் இருந்தது. அது இந்தக் குறிக்கோளை நோக்கி முன்னேறியது. வெறுமே முன்னே செல்லவில்லை. இடர்களையும் வறுமையையும் தனக்கு உள்ளே ஏற்பட்ட உராய்வுகளையும்கூட வெற்றி கொண்டது. இது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. தெளிவாக வரையறுக்கப்பட்ட குறிக்கோள்களை நோக்கி முன்னேற்றம் நிகழும் போது, ''தெளிவாக வரையறுக்கப்பட்ட குறிக்கோள்களை நோக்கி முன்னேறுவது'' என்ற சொற்கள் உணர்வுபூர்வமாகக் குறிக்கப்பட்டால், சம்பளப் பிரச்சினை அவ்வளவு கோட்பாட்டு முக்கியத்துவம் உள்ளதாக இருக்காது. உற்பத்தி உழைப்பு உள்ள சமுதாயத்தில் உழைப்பின் சாதனைகள் மிகத் துலக்கமாகத் தென்படும். அதில் வாழ்க்கை வசதிகளும் தெளிவாகப் புலப்படும். சேமிக்கப்படும் ஒவ்வொரு ரூபிளும் மறு நாள் நிலைமை இன்னும் மேம்படும் என்ற நம்பிக்கையை ஊட்டும். இத்தகைய சமுதாயத்தில் ஒவ்வொரு மனிதனையும் அவனுடைய தனிப்பட்ட சம்பளத்தால் தூண்டுவது அவசியம் இல்லை.

எங்கள் கம்யூனில் சம்பளம் கொடுப்பது பின்னுல் வழக்கத்துக்கு வந்தது. ஆனுல் சமுதாயப் பாங்கைக் காப்பாற்றவும் சிறு வயதில் சம்பளத்தால் ஏற்படக் கூடிய தீமையைத் தவிர்க்கவும் எனக்கு முடிந்தது. குடும்பம் உள்ள, குடும்பத்துக்கும் குழந்தைகளுக்கும் பொறுப்பு உள்ள வயது வந்த மனிதனுக்குச் சம்பளம் கொடுப்பது ஒரு விஷயம். குழந்தைகள் சமுதாயத்தில், ஒவ்வொருவனும் நன்ருக உடை அணியும் பொருட்டு நான் முழு மூச்சாகப் பாடுபட்டு வந்தேன். குழந்தைகள் நன்கு உடுக்கவும் அவர்கள் குளிரில் வருந்தாமல் வெப்பமான நிலைமைகளில் இருக்கவும் பள்ளிக் கல்வி பெறவும் நான் பொறுப்பு ஏற்றுக்கொண்டேன். எனவே சம்பளம் ஓரளவு அதிகப்படியான வசதியே ஆகும். நல்ல சமுதாயத்தில் இந்த வசதி சம்பளம் இல்லாமலே கிடைக்கும். பையன்கள் வாங்கும் சம்பளம் எல்லாம் என் பொறுப்பில் இருக்க வேண்டும் என்று நான் ஏற்பாடு செய்தேன். கம்யூன் உறுப்

பினர்களின் பொதுக் கூட்டம் இவ்வாறு தீர்மானித்தது. கம்யூன் உறுப்பினர்கள் பணத்தைக் கையில் வாங்குவதைவிட வருங்கால வாழ்க்கைக்காக நிதிமனேயில் சேமித்து வைப்பதி லேயே அதிக அக்கறை காட்டினுர்கள்.

இந்த விஷயத்தில் கடைசியாகப் பின்வரும் முறை கடைப்பிடிக்கப்பட்டது: முதலாவதாக, ஒவ்வொரு கம்யூன் உறுப்பினனும் தனது சம்பளத்தில் பத்து சதவிகிதத்தைக் கமாண்டர்கள் சபை நிதிக்கு ஒதுக்கிஞன். இது கொஞ்சம் அல்ல. சம்பளத்தில் பத்து சதவிகிதம் என்பது மிகப் பெரிய தொகை.

இவ்வாறு எங்களிடம் மிக விரைவில் பெரிய நிதி சேர்ந்து விட்டது. இந்த நிதி தனிக் கம்யூன் உறுப்பினர்களுக்குச் சொந்தமாகக் கருதப்படவில்லே. கமாண்டர்கள் சபை அதை நிர்வகித்தது. இந்த நிதி பண்பாட்டு வேலேயைத் தீவிரப் படுத்துவதற்கும் முன்ஞள் கம்யூன் உறுப்பினர்களுக்கு உதவு வதற்கும் முதன்மையாகப் பயன்பட்டது.

''வானியா வோல்சென்கோவுக்கு நல்ல இசைத் திறமை இருக்கிறது.அவனே இசைக் கல்லூரியில் சேர்ப்பது,கல்லூரிப் படிப்பை முடிக்கும் வரை அவனுக்கு மாதாமாதம் நூறு ரூபிள்கள் அதிகப்படியாகக் கொடுப்பது'' என்று கமாண்டர் கள் சபை தீர்மானம் நிறைவேற்றும் போது அது எவ்வளவு முக்கியமானது என்பதை உங்களால் கற்பனே செய்ய முடி யாது.

த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனில் இவ்வாறு உபகாரச் சம்பளம் பெற்றவர்கள் பதிற்றுக் கணக்கில் இருந்தார்கள். நான் கம்யூனே விட்டு விலகிய ஆண்டில் நூறு பெயர் வரை உபகாரச் சம்பளம் பெற்று வந்தார்கள். ஒருவன் குடும்பத்துடன், தகப்பஞருடனும் தாயாருடனும் தொடர்பு கொண்டிருந்தால் கல்லூரியில் கிடைக்கும் உபகாரச் சம்பளம் அவனுக்கு முற்றி லும் போதுமானது. ஆஞல் அவன் தனியனுய் இருந்தால் இது அவனுடைய எல்லாத் தேவைகளேயும் நிறைவேற்றப் போதுமானது அல்ல. மாணவனுடைய படிப்புத் தேர்ச்சியை யும் வகுப்பையும் பொறுத்து ஐம்பது முதல் நூறு ரூபிள் கள் வரை அதிகப்படி உபகாரச் சம்பளம் அளித்ததன் வாயிலாகக் கம்யூன் மிக உபயோகமான மனிதாபிமானச் செயல் புரிந்து வந்தது.

கம்யூனின் முன்னுள் உறுப்பினர்கள் வறுமை நிலையில் இருந்து அந்த வறுமை அவர்களுடைய சோம்பேறித்தனத்தால் இன்றி உண்மைக் காரணங்களால் ஏற்பட்டிருந்தால் அவர்களுக்கும் உதவி இந்த நிதியிலிருந்தே அளிக்கப்பட்டது. கம்யூன் உறுப்பினர்கள் முடிவாக வாழ்க்கையில் அடி வைக்கும் வரை அவர்களுடைய விதிக்குப் பொறுப்பு ஏற்கக் கம்யூனுல் முடிந்தது இந்த நிதி இருந்ததால் தான்.

கம்யூன் உறுப்பினர்களின் சம்பளத்திலிருந்தே உருவாயிற்று இந்த நிதி. தன்னுடைய சம்பளத்தின் பத்து சதவிகிதம் கமாண்டர்கள் நிதிக்குப் போய்விடுகிறது என்பது குறித்து மறைமுகமாகவோ வெளிப்படையாகவோ ஒரு கம்யூன் உறுப்பினன் கூட, நான் அவனோடு கழித்த ஆண்டுகளில் ஒருபோதும் அதிருப்தி தெரிவிக்கவில்லை. கம்யூனில் பயிற்சி முடிந்து வெளியேறிய ஒவ்வோர் உறுப்பினனுக்கும் ''சீர்வரிசைகள்''—கட்டில், போர்வை, மேல்கோட்டு, அரை டஜன் உள்ளாடைகள், சூட்டு முதலியவை, அதாவது ஒரு குடும்பம் தன் மகன் பிரிந்து செல்லும் போது அவனுக்கு அளிக்கும் பொருள்கள் யாவும்—இந்த நிதியிலிருந்து கொடுக்கப்பட்டன என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த நிதி கம்யூன் உறுப்பினர்களின் வாழ்க்கையை வழிகாட்டி நடத்த உதவிற்று. நடைமுறையில் சரிபார்க்கப்படாத நம் ஆயிரம் போதனை இயல் வாதங்களைக் காட்டிலும் இத்தகைய நிதி அதிக மதிப்பு உள்ளது.

கம்யூன் உறுப்பினர்களுடைய சம்பளத்தின் எஞ்சிய பகுதி நிதிமனையில் சேமிக்கப்பட்டது. கம்யூனிலிருந்து வெளியேறும் போது ஒவ்வொரு கம்யூன் உறுப்பினனிடமும் ஆயிரம் ரூபிள்களுக்குக் குறையாத சேமிப்பு இருக்க வேண்டும் என்று எண்ணப்பட்டது. இந்தப் பணத்தை அவன் கம்யூனில் இருக்கும் போது பெற முடியாது. என் கையெழுத்து இல்லாமல் ஒருபோதுமே இந்தப் பணம் கொடுக்கப்பட முடியாது. இரண்டாயிரம், இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபிள்கள் பெற்ற கம்யூன் உறுப்பினர்களும் இருந்தார்கள். கம்யூனில் வாழ்ந்த ஐந்து, ஆறு ஆண்டுகளில் சேமிக்கப்பட்ட தொகைகள் இவை. முடிவாக, கைச் செலவுக்காகச் சிறு தொகை கொடுக்கப்பட்டது. ஒவ்வோர் ஆண்டும் நாங்கள் பயணங்கள் செய்தோம். நான் இவற்றை மிக முக்கியமான

வையாகக் கருதினேன். இவை வெறும் பயணங்கள் அல்ல, மிகப் பெரிய நடவடிக்கைகள். கம்யூனில் நாங்கள் ஆறு பயணங்களை மேற்கொண்டோம். இந்தப் பயணங்களை நாங் கள் பின்வருமாறு நடத்தினேம்: முதலில் ரெயில் பயணம். பின்பு குறைந்தது எண்பது, நூறு கிலோமீட்டர் நடைப் பயணம். அங்கே முகாம் போடுவது. திரும்பி நடை. பின்னர் மீண்டும் ரெயில் பயணம். இந்தப் பயணங்கள் இலையுதிர் காலத்திலிருந்தே திட்டமிடப்பட்டன. அடுத்த கோடையைக் கழிப்பது பற்றிய திட்டம் என்ற வகையில் ஒவ்வொரு பயண மும் எனக்கு முக்கியமாய் இருந்தது. கோடையில் எங்கே போகலாம் என்று எண்ணமிட்டு, அதே கனவாக நீங்கள் ஆயத்தங்கள் செய்வீர்கள் அல்லவா, அவ்வாறே எங்கள் சமுதாயம் ஆயத்தங்கள் செய்தது. தொழிற்சாலைகள் நின்ற தும் இந்தக் கோடை விடுமுறையை எப்படிக் கழிப்போம் என்பதை நாங்கள் அறிந்திருந்தோம்.

ஒவ்வொரு பயணத்தையும் நான் மிகப் பெருத்த முக்கி யத்துவம் உள்ளதாகக் கருதினேன். எனவே ஒவ்வொரு நபரையும் சமுதாயம் அனைத்தையும் ஆண்டு முழுவதும் இந்தப் பயணத்துக்கு ஆயத்தப்படுத்தினேன். பொருள் நிலைமைகளுக்கு வகை செய்தேன். பண்பாட்டு நோக்கிலும் பிற விதங்களிலும் முன்னேற்பாடுகள் செய்தேன். உதாரண மாக, காக்கேஷியாவுக்கு—விளாதிகாக்கேஷியா, திபிலிஸி, பத்தூமி ஆகிய இடங்களுக்குப்—பயணம் செய்வதற்குக் குளிர்காலம் முழுவதும் ஏற்பாடுகள் செய்ய வேண்டி இருந் தது. எங்கே இரவுகளில் தங்கலாம், சாப்பிடலாம், யாருடன் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம் என்று தெரிந்துவருவதற்கு முன்னேடியை அனுப்புவது அவசியமாய் இருந்தது. கம்யூன் உறுப்பினன் ஒருவன் முன்னேடியாக அனுப்பப்பட்டான். கடைசி ஆண்டுகளில் பயணங்களை ஏற்பாடு செய்வதில் நாங் கள் மிக நுட்பமான தேர்ச்சி பெற்று விட்டோம். உதாரண மாக, ஹார்க்கவிலிருந்து ஐந்நூறு பெயர் கொண்ட சமுதா யத்துடன் புறப்படும் போது எத்தனுவது கிலோமீட்டரில், எந்தக் கிலோமீட்டர் கம்பத்தின் அருகே கம்யூன் உறுப்பினன் இவனேவ் கம்யூன் உறுப்பினன் பெத்ரோவிடம் பாண்டு வாத்தியத்தைக் கொடுப்பான் என்பதை நாங்கள் அறிந்திருந் தோம். இந்த வாத்தியத்தை ஜார்ஜிய இராணுவச் சாலை

நெடுகிலும் எடுத்துச் செல்ல வேண்டி இருந்தது. நானூறு கிலோமீட்டர் தூரம் ஒருவனே அதை எடுத்துச் செல்ல முடியவில்லை. தேவைப்பட்ட போது இவனேவ் பாண்டு வாசித்தான். கம்யூன் மாணவர்கள் முறை வைத்துக்கொண்டு தலைக்குப் பத்து கிலோமீட்டர் தூரம் அதை எடுத்துச் சென்றார்கள். எந்தக் கிலோமீட்டர் கம்பத்தின் அருகே எந்தக் கம்யூன் மாணவனுக்கு பாண்டு வாத்தியம் கை மாற்றப்பட வேண்டும் என்பது முன்பே திட்டமாகத் தெரிந்திருந்தது.

நடைப் பயணம் கடுங்காவல் தண்டனை ஆகி விடாமல் இருப்பதற்கு இத்தகைய சில்லறை விஷயங்களைக் கூட முன் கூட்டித் திட்டமிடுவது அவசியம். ரெயில் ஏறுவது, இரவு தங்குவது முதலிய முக்கியமான விஷயங்களுக்கும் முன்னேடிப் பயணமும் பார்வை இடுவதும் தேவை. இரவு தங்குவதற்கு முகடு வேய்ந்த இடமும் அருகில் தண்ணீரும் பேசுவதற்கும் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்வதற்கும் மனிதர்களும் இருக்கும் படி பார்த்துக் கொள்ள வேண்டும்.

எங்களுடைய மிகப் பெரிய பயணம் ஹார்க்கவ், நீழ்னி நோவ்கரத், ஸ்தாலின்கிராத், ஸோச்சி, ஒதேஸ்ஸா, ஹார்க்கவ். இந்தப் பயணத்துக்கு ஒன்றரை மாதங்கள் தேவைப்பட்டன. மிகப் பெரிய முன்னேற்பாடு செய்ய வேண்டி இருந்தது. வோல்கா ஆற்றில் நாங்கள் பதினைந்து நாட்கள் கப்பல் பயணம் செய்தோம்.

''பயணத்தைத் தொடர்வோமா, நிறுத்துவோமா?'' என்று கப்பல் தலைவன் தினந்தோறும் கேட்பான்.

''தொடர்வோம், விரைவாக!'' என்று மாணவர்கள் அவனுக்குப் பதில் அளிப்பார்கள்.

கப்பல் தலைவன் வோத்கா கூட எங்கள் அனுமதியின் பேரிலேயே குடித்தான். அவன் மொந்தைக் குடியன். ஒரு தடவை ஸமாராவின் அருகே கப்பலை அவன் திடரில் செலுத்தி விட்டான். அதன் பின் நாங்கள் அவனைப் பொதுக் கூட்டத் துக்கு அழைத்தோம். கப்பல் தரை தட்டியதால் மாணவர் களுக்கு ஒரே கும்மாளம். ஆயினும் பயண முடிவுவரை வோத்கா குடிக்கக் கூடாது என்று நாங்கள் கப்பல் தலை வனிடம் சொல்லிவிட்டோம்.

ஒவ்வொரு கம்யூன் மாணவனும் பயணத்துக்கு ஆயத்தங் கள் செய்து கொண்டான், கைச் செலவுப் பணத்தை மிச்சம்

பிடித்துச் சேர்த்து வைத்தான். ஏனெனில் பயணத்தில் நிறைய அரிய பண்டங்கள் கிடைக்கும் என்றும் அவற்றை வாங்கிக் கொள்ளலாம் என்றும் மாணவர்கள் எண்ணினர்கள். வழக்கமாக அரிய பொருள்கள் எவையும் இரா. மாணவர்கள் பணப்பைகள் வாங்குவார்கள், எலுமிச்சைச் சாறு குடிப்பார்கள், மிட்டாய்கள் சாப்பிடுவார்கள். இவை எல்லாம் ஹார்க்கவிலும் கிடைக்கக் கூடியவை. ஆயினும் உலியானவ்ஸ்கில் தின்ற மிட்டாய்கள் ஹார்க்கவில் தின்னக்கூடிய மிட்டாய்களை விடச் சுவையாய் இருப்பதாக அவர்களுக்குத் தோன்றியது.

ஒவ்வொரு கம்யூன் மாணவனும் பணத்தைத் தன்னிடம் அல்ல, என் பணப் பெட்டியில் சேமித்து வைப்பான். எனவே ஒவ்வொரு பயணத்தின் போதும் நான் ஐம்பது, அறுபது ஆயிரம் ரூபிள்கள் நிறைத்த பெட்டியை எடுத்துச் செல்வேன்.

இவ்வாறு இந்தச் சாதனங்கள் யாவும் மாணவர்களின் பண ஆசையை, சம்பளம் பெறும் பேராசையை மட்டுப்படுத்த உதவின. எல்லா வசதிகளும் நிறைந்த சமுதாயத்தில் இத்தகைய பேராசை போதனைச் செயல்முறையில் கடினமான, விரும்பத்தகாத அதிகப்படிச் சுமை ஆகி இருக்கும்.

ஒரு விஷயத்தை உங்களுக்குக் கூற மறந்து விட்டேன். உற்பத்தியின்பால் பள்ளிக் கல்வியின் உறவு, பள்ளிக் கல்வியின்பால் உற்பத்தியின் உறவு ஆகியவற்றில் எந்த விதமான இணைவையும் நான் இடைவிடாது எதிர்த்து வந்தேன். இதற்காக நான் பெருத்த கண்டனத்துக்கும் உள்ளானேன். இப்போதும் நான் இந்த இணைவை எதிர்க்கிறேன். நமது வட்டாரத்திலோ கம்யூனிலோ பத்து ஆண்டுப் பள்ளி கல்வித் துறை மக்கள் கமிஸாரகத்தின் எல்லாக் கோரிக்கைகளுக்கும் இணங்க நடந்து வந்தால்—இந்தக் கோரிக்கைகள் நாள் தோறும் அதிகரித்து வருகின்றன—பள்ளிக் கல்வியை உற்பத்தியுடன் இணைப்பது தேவை இல்லை. அது மட்டும் அல்ல, இணைவே இல்லாதிருப்பது பயனுள்ளது என்று நான் கருதுகிறேன்.

இணைவுக்கு ஆதரவாகச் செய்யப்படும் பிரசாரங்கள் கூட்டுப் பாடமுறை மீது இருந்த நம்பிக்கையின் மீத மிச்சங்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன். கூட்டுப் பாடமுறையையோ நான் எப்போதுமே வெறுத்து வந்தேன்.

ஏனென்ருல் இயைபுகள் சுதந்திரமாக உரு ஆவதற்கு ஓரளவு பங்கு அளிக்கப்பட வேண்டும் என்பது என் எண்ணம். இவ்வாறு உரு ஆவதே மனிதனுடைய ஆளுமைக்கு விரிவையும் தனித் தன்மையையும் அளிக்க முடியும். இயைபுகள் விஷயத்தில் தனி மனிதனை ஊக்கத்துடன் செயல்படுத்த நாம் எங்கே முயல்கிருேமோ அங்கே வரண்ட, சுவையற்ற ஆளுமையையே நம்மால் உரு ஆக்க முடியும்.

எனவே, என்னுடைய நடைமுறை வேலையில் எனது உறுதியான கருத்துக்களில் ஒரு விலக்கத்துக்கு மட்டுமே நான் இடம் கொடுத்தேன். ஒவ்வொரு வகுப்பிலும் அமைப்புப் பட வரைவுக்கு இரண்டு பாடங்களை அதிகம் ஆக்கியது தான் இந்த விலக்கம். மற்ற விஷயங்களில், பிற பள்ளிகள் போலவே எங்கள் பள்ளி போதனை ஆசிரியர்கள் சபையால் வழிநடத்தப்பட்டது. உற்பத்தியுடன் அது எவ்விதத் தொடர்பும் கொண்டிருக்கவில்லை. அறிவியல்கள், படிப்பு, பயிற்சி ஆகியவற்றின் ஒவ்வொரு துறையிலும் நம் நாட்டில் அதற்கு உரிய விதிகளும் கோரிக்கைகளும் குறிக்கோள்களும் உண்டு. இந்தக் கோரிக்கைகள் ஒவ்வொருவரையும் சமமாகத் திருப்திப்படுத்த வேண்டும்.

விளைவாக மிக உறுதியான, இயல்பான இணைவு ஏற்பட்டது. கம்யூனில் பயிற்சி முடிந்து வெளியேறிய மாணவன் உற்பத்தித் தொழிலையும் உற்பத்தித் தொழில் ஒழுங்கமைப்பையும் உற்பத்திச் செயல்முறையையும் அறிந்திருந்ததோடு நடுத்தரக் கல்வியும் பெற்றுத் தேர்ந்திருந்தான்.

சித்தாந்தக் கருத்துக்களின் பிரதிநிதிகள் எனக்கு மறுப்பு தெரிவித்தார்கள். நடுத்தரக் கல்வியும் கடைச்சல் இயந்திர வேலையில் தேர்ச்சியும் அருமையான சேர்க்கை என்றும் இந்தச் சேர்க்கையில் மேற்கொண்டு எதையும் கூட்டுவது தேவையில்லை என்றும் நான் சொன்னேன். ஒருவன் கடைச்சல் இயந்திரத்தில் வேலை செய்யத் திறன் பெற்றிருந்தால் அதற்காகக் குறை சொல்லுவது சரி அல்ல் என்றேன்.

சட்டத்தை மீறுபவனது சுபாவத்தை மாற்றி அமைப்பதும் அவனுக்குச் சரியான போதனை அளிப்பதும் முழுமையான நடுத்தரக் கல்வி தரப்பட்டால்தான் சாத்தியம் ஆகும் என்று பொதுவாகவே நான் எண்ணுகிறேன். முழுமையற்ற நடுத்தரக் கல்வி முழுமையான நடுத்தரக் கல்வி போன்று

இத்தகைய நம்பிக்கையை அளிப்பதில்லை என்று ஏற்கனவே உங்களுக்குக் கூறியிருக்கிறேன்.

இப்போது என்னுடைய விரிவுரையின் கடைசிப் பகுதிக்கு வருகிறேன். போதனை சமுதாயத்தில் உருவாக்கப்பட வேண்டிய ஆளுமையின் முக்கிய வகையையும் தன்மையையும் பற்றியது இது. இந்த விஷயத்தை போதனை இயலாரான நாம் இன்னும் முழுமையாக ஆராயவில்லை என்று எண்ணுகிறேன். நமது சோவியத் ஆளுமையின் இயல்பு பூர்ஷ்வா சமூகத்தில் உள்ள ஆளுமையின் இயல்பிலிருந்து கோட்பாட்டு நோக்கில் வேறானது. எனவே நமது போதனையும் கோட்பாட்டு நோக்கில் வேறானதாய் இருக்க வேண்டும். இது எனது உறுதியான கருத்து.

பூர்ஷ்வா சமூகத்தில் போதனை என்பது தனி நபரின் ஆளுமையை வாழ்க்கைப் போராட்டத்துக்கு ஏற்றதாக உருவாக்குவது ஆகும். இத்தகைய போராட்டத்துக்கு இன்றியமையாத பண்புகள் இம்மாதிரி ஆளுமையில் பொருந்தி இருக்க வேண்டியது முற்றிலும் இயல்பானதே. தந்திர புத்தி, வாழ்க்கைச் சாமர்த்தியம், தனித்த போராட்டத்துக்கு, தனக்காகப் போராடும் தனி மனிதனுக்கு உரிய பண்பு ஆகியவை இவை.

பூர்ஷ்வா சமூகத்தில் மனிதனுக்கு இன்றியமையாத சார்புகளின் தொகுப்பு நம் நாட்டின் பழைய பள்ளிகளிலும் எல்லா வித பூர்ஷ்வாப் பள்ளிகளிலும் போதிக்கப்படுவது முற்றிலும் இயல்பானதே. இந்த சமூகத்தில் மனிதன் இருக்கும் சார்புகளின் தொடர் நம் சமூகத்தில் உள்ளதிலிருந்து முற்றிலும் வேறானது.

முதியவர்களான நாம் எப்படிக் கல்வி பயின்றோம் என்பது உங்களுக்கு நினைவு இருக்கும். நீ பணக்கார வர்க்கத்தையும் ஜார் அதிகாரிகளையும் சார்ந்து இருப்பாய் என்று அடிக்கு ஒரு தரம் நம்மிடம் யாரும் சொல்லவில்லைதான். ஆனால் நமக்கு அளிக்கப்பட்ட போதனை அனைத்திலும் இந்தக் கருத்து நிறைந்திருந்தது. பணக்காரன் ஏழைக்கு உதவ வேண்டும் என்று சொல்லப்பட்டபோது, நேர்த்தியும் அழகும்கூட வாய்ந்ததாகத் தோன்றிய இந்தக் கோரிக்கையில், பணக்காரனுக்கும் ஏழைக்கும் இடையே வாழ்க்கையில் நிலவும் சார்பு ஒரு வகையில் குறிக்கப்பட்டது. பணக்காரன்

ஏழையாகிய எனக்கு உதவுவான் என்பது, பணக்காரனிடம் செல்வம் இருக்கிறது, அவன் எனக்கு உதவ வல்லவன், நான் அவனுடைய உதவியை, அவனுடைய பிச்சையை நம்பி இருக்க மட்டுமே முடியும் என்று அர்த்தப்பட்டது. வறியவன் ஆன நான், பணக்காரனின் உபகாரத்துக்குப் பாத்திரமானவன். வாழ்க்கையில் எனக்கு எதிர்ப்பட வேண்டிய சார்புகளது தொகுப்பை என் மனதில் ஆழமாகப் பதிய வைக்கும் செயல் இதில் அடங்கி இருந்தது. பதவியையும் நல்லெண்ணத்தையும் செல்வத்தையும் அருளையும் இரக்கம் இன்மையையும் சார்ந்திருப்பது—சார்புகளின் இந்தச் சங்கிலித் தொடருக்கு மனிதன் பயிற்றப்பட்டான்.

நமது மாணவனும் சார்புகளின் ஒரு வகைத் தொகுப்புக்குப் பயிற்றப்படுகிறான். பூர்ஷ்வா சமூகத்தின் சார்புத் தொகுப்பிலிருந்து, அதாவது சுரண்டலிலிருந்தும் வாழ்க்கை நலங்களின் சமமற்ற வினியோகத்திலிருந்தும் விடுதலை பெற்றுவிட்டதால் மாணவன் சார்புகளின் எல்லாவிதத் தொடரிலும் இருந்து பொதுவாகவே விடுதலை பெற்றுவிட்டதாக நினைப்பது பயங்கரமான மருட்சி ஆகும். சோவியத் சமூகத்தில் சார்புகளின் வேறு வகையான தொடர் நிலவுகிறது. வெறும் கூட்டமாக இன்றி ஒழுங்கமைந்த வாழ்க்கையில் இருப்பவர்களும் குறித்த லட்சியத்தை நோக்கி முன்னேறுபவர்களும் ஆன சமூக உறுப்பினர்களின் சார்பு இது. நம்முடைய இந்த ஒழுங்கமைந்த தன்மையில் உள்ள செயல் முறைகளும் நிகழ்ச்சிகளுமே நம் சோவியத் மனிதனது ஒழுக்க நெறிப் பண்பையும் அவனது நடத்தையையும் உருவாக்குகின்றன.

சோவியத் சமூகத்தில் வாழும் அளவுக்கு ஏற்ப நாம் அனைவரும் வளர்கிறோம். நாம் சமுதாய உறுப்பினர்கள் என்ற வகையில் வளர்கிறோம். அதாவது, சார்புகளின் குறித்த தொகுப்பில் இருப்பவர்கள் என்ற முறையில் வளர்கிறோம். என்னுடைய வேலையில் இந்த நோக்கில் நான் இறுதி வரை சென்றேனா இல்லையா என்பதை அறியேன். ஆயினும் போதனையின் இந்த உள்ளடக்கம் எனக்கு மற்ற எல்லாவற்றையும் விட அதிக அக்கறை ஊட்டியது. ஏற்கனவே கட்டுப்பாட்டைப் பற்றிப் பேசிய போது இந்த விஷயத்தை ஒரு சிறிது குறிப்பிட்டேன்.

இந்தப் பிரச்சினையை இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு சமுதாயத்தைச் செயல் புரிகையில் பார்வையிடுவோம். சமுதாயத்தை, வெறும் கும்பலை அல்ல. அதாவது, குறிப்பிட்ட பொதுக் குறிக்கோள்கள் உள்ள சமுதாயத்தைப் பார்வையிடுவோம். இந்த சமுதாயத்தில் சார்புகள் மிகவும் சிக்கலானவை. ஒவ்வொரு தனிநபரும் தனது சொந்த விருப்பங்களை மற்றவர்களுடைய விருப்பங்களுடன் இசைவித்துக் கொள்ள வேண்டும். முதலாவது சமுதாயம் அனைத்தின் விருப்பங்களுடனும் இரண்டாவது தனது முதற்படி சமுதாயத்தின், நெருங்கிய குழுவின் விருப்பங்களுடனும் சொந்த விருப்பங்களை இசைவித்துக் கொள்ள வேண்டும். சொந்தக் குறிக்கோள்கள் பொதுக் குறிக்கோள்களுக்கு எதிராகச் செல்லாதவாறு இசைவித்துக் கொள்ள வேண்டும். எனவே, பொதுக் குறிக்கோள்கள் என்னுடைய சொந்தக் குறிக்கோள்களையும் வரையறுக்க வேண்டும். பொதுக் குறிக்கோள்கள், தனிநபரின் குறிக்கோள்கள் ஆகியவற்றின் இந்த இசைவே சோவியத் சமூகத்தின் இயல்பாகத் திகழ்கிறது. பொதுக் குறிக்கோள்கள் முக்கியமானவையாக, ஆதிக்கம் வகிப்பவையாக மட்டும் இன்றி, என் சொந்தக் குறிக்கோள்களுடன் இணைந்தவையாகவும் எனக்கு விளங்குகின்றன. குழந்தைகள் சமுதாயம் இவ்வாறு மட்டுமே அமைக்கப்பட முடியும் என்பது கண்கூடு. அது இவ்வாறு அமைக்கப்படாவிட்டால் அது சோவியத் போதனை அல்ல என்று உறுதியாய்ச் சொல்வேன்.

தனிநபரின் குறிக்கோள்களும் சமுதாயக் குறிக்கோள்களும் எதிரெதிராக இருக்கும் பிரச்சினைகளும் இந்தக் குறிக்கோள்களை ஒருங்கிசைப்பது பற்றிய பிரச்சினைகளும் சமுதாயத்தின் நடைமுறையில் ஒவ்வோர் அடியிலும் எதிர்ப்படுகின்றன. பொதுக் குறிக்கோள்களுக்கும் தனிநபரின் சொந்தக் குறிக்கோள்களுக்கும் இடையே இந்த முரண்பாடு சமுதாயத்தில் உணரப்பட்டால் அது சோவியத் முறையில் அமைந்த சமுதாயம் அல்ல, தவறாக ஒழுங்கமைக்கப்பட்டிருக்கிறது என்று அர்த்தமாகும். தனிநபரின் குறிக்கோள்களும் பொதுக் குறிக்கோள்களும் எங்கே பொருந்துகின்றனவோ எங்கே எவ்வித இசைவின்மையும் இல்லையோ, அங்கேதான் சமுதாயம் சோவியத் முறையில் அமைந்தது ஆகும்.

ஆனுல் தற்காலத்திய அன்றுட நடைமுறை விவரங்களி லிருந்து விலகி ஒதுங்கினுல் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியாது. ஒவ்வொரு தனிக் கம்யூன் உறுப்பினனதும் ஒவ்வொரு தனி சமுதாயத்தினதும் நடைமுறையிலேயே இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணப்பட முடியும். நான் வேலைப் பாங்கு என்று குறிப்பிடுவதே நடைமுறை ஆகும். போதனை வேலைப் பாங்கு தனி நூலுக்கு உரிய விஷயமாக மதிக்கப்பட வேண்டும் என்று கருதுகிறேன். இந்தப் பிரச் சினை அவ்வளவு முக்கியமானது.

கம்யூன் உறுப்பினர்களின் பரஸ்பர உறவுகள், தோழனுக் கும் தோழனுக்கும் உள்ள உறவுகள் என்ற விவரத்தை எடுத்துக் கொள்வோம். இந்தப் பிரச்சினை புதியது அல்ல போலத் தோன்றினுலும் நமது போதனை இயல் சித்தாந்தத்தில் இதற்கு முழுமையாகத் தீர்வு காணப்படவில்லை. புரட்சிக்கு முந்திய போதனை இயலில் இந்தப் பிரச்சினை அனேகமாக நிலவியிருக்க முடியாது. புரட்சிக்கு முந்திய சமூகத்தில் போன்றே புரட்சிக்கு முந்திய போதனை இயலில் மனிதனுக்கு மனிதன் உள்ள உறவுகள் ஒரு தனி நபருக்கும் மற்ெருரு தனி நபருக்கும் இடையே உள்ள உறவுகளாக, அதாவது தனித்து இயங்கும் இரண்டு சுதந்திர உலகங்களுக்கு இடையே உள்ள உறவுகளாகக் கருதப்பட்டன. நல்ல மனிதனை உருவாக்குவது பற்றியும் பெருந்தன்மையுள்ள மனிதனை உருவாக்குவது பற்றியும் இன்னின்ன மாதிரி மனிதனை உருவாக்குவது பற்றியும் பேச முடிந்தது.

நமது போதனை இயலில் தோழனைப் போதித்து உரு வாக்குவது பற்றி, ஒரு சமுதாயத்தின் உறுப்பினனுக்கும் இன்ெருரு சமுதாயத்தின் உறுப்பினனுக்கும் உள்ள உறவுகள் பற்றிப் பேசமுடியும். இவர்கள் கட்டற்றவர்கள் அல்ல, வெற்று வெளியில் சுழல்பவர்கள் அல்ல. தங்கள் உறுதிமொழி களாலோ சமுதாயத்துடன் உள்ள உறவுகளாலோ, சமுதா யத்தின்பால் தங்களுக்கு உள்ள கடமையாலோ சமுதாயத் தின் விஷயத்தில் தங்களுக்கு உள்ள கௌரவத்தாலோ, சமுதாயத்தின் விஷயத்தில் தங்கள் இயக்கங்களாலோ இணைந்தவர்கள். ஒரு சமுதாயத்தின் உறுப்பினர்கள் இன் ெருரு சமுதாயத்தின் உறுப்பினர்களுடன் கொண்டிருக்கும்

ஒழுங்கமைந்த இந்த உறவு போதனையின் அமைப்பில் நிர்ணயகரமாக இருக்க வேண்டும்.

சமுதாயம் என்பது என்ன? இது வெறும் கூட்டம் அல்ல. ''குழந்தை இயலார்'' கற்பித்ததுபோல ஒருவர் மீது ஒருவர் பாதிப்பு விளைக்கும் தனி நபர்களின் குழு அல்ல இது. சமுதாயம் என்பது ஒரு குறிக்கோளை நோக்கி முன்னேறும் தனி நபர்களின் கூட்டு. சமுதாயத்தின் உறுப்புக்களைப் பெற்றுள்ள, ஒழுங்கமைப்பட்ட நபர்கள் இவர்கள். சமுதாயத்தின் ஒழுங்கமைப்பு இருக்கும் இடத்தில் சமுதாயத்தின் உறுப்புக்கள் இருக்கின்றன, சமுதாயத்தின் நம்பிக்கைக்கு உரிய, அதிகாரம் பெற்ற நபர்களின் ஒழுங்கமைப்பு இருக்கிறது. தோழனுக்கும் தோழனுக்கும் உள்ள உறவு பற்றிய பிரச்சினை, நட்பு பற்றிய பிரச்சினை அல்ல, அன்பு பற்றிய பிரச்சினை அல்ல, அண்டை வாழ்க்கை பற்றிய பிரச்சினை அல்ல. இது பொறுப்புள்ள சார்பு பற்றிய பிரச்சினை. தோழர்கள் சம நிலைமைகளில் இருந்தாலும், ஒரே வரிசையில் அருகருகாகச் சென்றாலும், கிட்டத்தட்ட ஒரே மாதிரிக் காரியங்கள் செய்தாலும் அவர்கள் வெறும் நட்பினால் இணைக்கப்பட்டிருக்கவில்லை, வேலையில் பொதுப் பொறுப்பினால், சமுதாயத்தின் வேலையில் பொதுப் பங்கு ஆற்றுவதனால் இணைக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஒரே வரிசையில் செல்லாமல் வெவ்வேறு வரிசைகளில் செல்லும் தோழர்களின் உறவுகள் சிறப்பாக அக்கறைக்கு உரியவை. சமமான சார்பு இல்லாத, ஒரு தோழன் மற்றொரு தோழனுக்குக் கீழ்ப்படியும் இடத்தில் உள்ள தோழர்களின் உறவுகள் சிறப்பாக அக்கறைக்கு உரியவை. சம நிலை அற்ற, கீழ்ப்படிவு உறவுகளை ஏற்படுத்துவது குழந்தைகள் சமுதாயத்தில் மிகுந்த சாமர்த்தியம் தேவைப்படும், மிகக் கடினமான வேலை. நம் போதனை இயலார் யாவற்றிலும் அதிகமாக அஞ்சும் விஷயம் இது. தோழன் தோழனுக்குக் கீழ்ப்படியத் திறன் பெற்றிருக்க வேண்டும். வெறுமே கீழ்ப்படிந்தால் போதாது, கீழ்ப்படியத் திறன் பெற்றிருக்க வேண்டும்.

அவ்வாறே தோழன் தோழனுக்குக் கட்டளை இட, அதாவது காரியங்களையும் பொறுப்புக்களையும் அவனிடம் ஒப்படைத்து அவற்றை நிறைவேற்றும்படி கோரத் திறன் பெற்றிருக்க வேண்டும்.

தோழனுக்குக் கீழ்ப்படியும் இந்தத் திறமை, செல்வத்துக்கோ, வலிமைக்கோ, தானம் அல்லது பிச்சை வாங்குவதற்காகவோ கீழ்ப்படிவது அல்ல, சமுதாயத்தின் சம உரிமை உள்ள உறுப்பினர்களுக்குக் கீழ்ப்படிவது, குழந்தைகள் சமுதாயத்திற்கு மட்டும் இன்றி வயது வந்தவர்கள் சமுதாயத்திற்கும் மிகக் கடினமான காரியம். பழங்காலத்தின் மீதமிச்சங்கள் இன்னும் எஞ்சி இருந்தால் அவை எல்லாம் இந்த இடத்திலேயே குவிகின்றன. சமுதாயம் எனக்கு அதிகாரம் அளித்திருக்கும் ஒரே காரணத்தால் எனக்குச் சமமானவனுக்குக் கட்டளை இடுவது சிறப்பாகக் கடினமானது. இங்கு மிகச் சிக்கலான உளப் பாங்கு செயல்படுகிறது. சமுதாயத்துக்கு என் பொறுப்பை நான் உணரும் போதுதான், கட்டளை இடுவதன் வாயிலாக நான் சமுதாயத்தின் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன் என்று உணரும்போது தான், தோழனுக்குக் கட்டளை இடுவது, அவனிடம் பொறுப்பை ஒப்படைப்பது, அவனைச் செயலுக்குத் தூண்டுவது, அவன் செயலுக்குப் பொறுப்பு ஏற்பது எனக்கு இயலும். இதை நான் உணராவிட்டால், சொந்த ஆதிக்கத்துக்கும் அதிகார வேட்கைக்கும் புகழ் வேட்கைக்கும் நமது முறைக்குப் பொருந்தாத பிற உணர்ச்சிகளுக்கும் போக்குகளுக்குமே எனக்கு வாய்ப்பு எஞ்சி இருக்கும்.

விஷயத்தின் இந்த அம்சத்தின் மீது நான் சிறப்பாக மிகுந்த கவனம் செலுத்தினேன். அதனால் தான் சமுதாயத்தில் சார்புகளையும் கீழ்ப்படிதலையும் பற்றிய மிகச் சிக்கலான கோட்பாட்டை நான் கடைப்பிடித்தேன். உதாரணமாக, முறைவேலைக் கமாண்டரான இந்தச் சிறுவன் இன்று சமுதாயத்துக்குத் தலைவன். ஆனால் இதே சிறுவன் நாளை புதிய தலைவனுக்குக் கீழ்ப்படிவான். இத்தகைய போதனைக்கு இவன் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறான்.

இந்த விஷயத்தில் நான் இன்னும் முன்னே சென்றேன். சமுதாயத்தால் அதிகாரம் அளிக்கப் பெற்ற தனிநபர்களின் பரஸ்பரச் சார்பை, கீழ்ப்படிவதும் கட்டளை இடுவதும் முடிந்த வரை அடிக்கடி எதிர்ப்படும் வகையில் பின்னிப் பிணைக்க நான் முயன்றேன்...

இதனால்தான் நான்... முதற்படி சமுதாயங்களின் தொகுப்பை அமைத்தேன். இதைத் தனிநபர் தலைமை விதி

களின்படி அமைத்தேன். தலைமை அதிகாரத்தைக். கமாண் டருக்கு வழங்கினேன். சமுதாயத்தைப் பத்து பத்து பெயர் கொண்ட பிரிவுகளாகப் பகுக்க முயன்றேன். அதிகாரம் பெற்ற வர்களின் எண்ணிக்கை முடிந்தவரை அதிகமாய் இருக்க வேண்டும் என்பதற்காக இவ்வாறு செய்தேன். முடிந்த வரை அதிக எண்ணிக்கையில் பல்வேறு கமிஷன்களை அமைக்க முயன்றேன். கடைசிக் காலத்தில் தனிநபருக்குப் பொறுப்பு அளிக்கும் வடிவத்தை மேற்கொண்டேன்.

இந்த வடிவத்தைக் கையாள்வதற்கான ஒரு வாய்ப்பைக் கூட நான் நழுவ விட வில்லை. என் நினைவுக்கு வரும் முதல் சந்தர்ப்பத்தை எடுத்துக் கொள்கிறேன். பையன்களை ஒரு உறங்கறையிலிருந்து மற்றதற்கு மாற்ற வேண்டும். புதிய பை யன்கள் வந்திருப்பதற்கு ஏற்ப உறங்கறைகளில் மாணவர் களின் குழுக்களை மாற்றி அமைக்க வேண்டும். புதிய வர்கள் எப்போதும் முதிய பிரிவுகளில் வினியோகிக்கப்பட்டார்கள். இத்தனை மணிக்கு உறங்கறைகளில் மறு குடியேற்றம் நிகழ வேண்டும் என்று கமாண்டர்கள் சபை தீர்மானிக்கும். ஒவ்வொருவனும் படுக்கைகளை மட்டுமே உடன் எடுத்துச் செல்ல அனுமதிக்கப்பட்டான். கட்டில்கள், மேஜைகள், படங்கள், அலமாரிகள் ஆகியவை எவையும் எடுத்துச் செல் லப்படலாகாது என்பது விதி. குடி மாற்றம் சரியாக நடப் பதை மேற்பார்க்கும் பொறுப்பு, கோஸிர் என்பவனுக்கு அளிக்கப்படுவதாக வைத்துக் கொள்வோம். தொடக்கக் காலத்தில் இது அவ்வளவு எளிதாய் இல்லை. பையன்கள் இந்தக் கோஸிருக்குக் கீழ்ப்படியவில்லை, அசட்டையாகக் கைகளை வீசினார்கள். நானூறு நபர்களைக் கீழ்ப்படிய வைப் பது எப்படி என்று தெரியாமல் அவனே திகைத்தான்.

கடைசிக் காலத்தில் இது இயலும்படி செய்வதில் நான் வெற்றி அடைந்தேன். இது மட்டும் அல்ல. கோஸிரும் மற்றவர்களும் தம்தம் இடங்களில் இருப்பார்கள். கோஸிர் தாழ்வாரத்தில் நின்று, விரலையோ புருவத்தையோ கண் ணையோ ஒரு தரம் அசைப்பதன் மூலம், செய்ய வேண்டிய காரியத்தைச் செய்து விடுவான். அவனுடைய குறிப்பை எல்லோரும் புரிந்து கொண்டார்கள். கோஸிர் வெற்றிக்குப் பொறுப்பு ஏற்றிருக்கிறான்; ஒருவன் சிறந்த படத்தைத் தன் உறங்கறைக்கு எடுத்துச் சென்றால், கோஸிர் அதைக் கவனிக்

காமல் விட்டு விட்டால் அதற்குப் பதில் சொல்ல வேண்டியவன். கோஸிர்தான் என்பது பையன்களுக்குத் தெரிந்திருந்தது.

உதாரணமாக, மாலை வண்டியிலிருந்து இருபது அகதிகளைக் கொண்டுவர வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். கமாண்டர்கள் சபை இதற்காக ஐந்து ஆறு பெயர் கொண்ட தனிக் குழுவைத் தெரிந்தெடுப்பது வழக்கம். இந்தக் குழுவுக்குத் தலைவனாக ஸெம்ளியான்ஸ்கி என்பவன் நியமிக்கப் பட்டான் என்று வைத்துக் கொள்வோம். தான் குழுவின் கமாண்டர் என்பதை அவனும் நன்றாகப் புரிந்து கொண்டான், குழுவில் இருந்த ஐந்து, ஆறு பெயரும் அவனுடைய எல்லா உத்தரவுகளுக்கும் உடனே கீழ்ப்படிந்தார்கள். இதில் அவர்களுக்கு ஏதோ ஒரு திருப்தி ஏற்பட்டது. தங்களுக்குத் தலைமை ஏற்று, தங்களுக்காகப் பதில் அளிக்கும் மையம் ஒன்று இருக்கிறது என்பதை அவர்கள் கண்டார்கள்.

நடவடிக்கை முழுவதும் தன்மீது சார்ந்திருந்ததை ஸெம்ளியான்ஸ்கி புரிந்து கொண்டான். குழுவும் இதைப் புரிந்து கொண்டது. ரெயில் நிலையங்களில் கூறைகளிலிருந்தும் ரெயில் வண்டிகளிலிருந்தும் அகதிகளைப் பிடித்து இறக்க வேண்டி இருந்தது. இதற்கு நம்பத்தக்க, ஊக்கமுள்ள பையன்கள் தேவைப்பட்டார்கள்—அழுமூஞ்சிகளும் சோனிகளும் அல்ல. இத்தகைய பையன்களைக் குழுவினர் தெரிந்தெடுத்தார்கள். ஸெம்ளியான்ஸ்கி இந்தப் பொறுப்பை நிறைவேற்றினான். நான் இதை மேற்பார்க்க முடியவில்லை. இந்தப் பொறுப்பு பற்றி ஸெம்ளியான்ஸ்கியே அறிக்கை செய்ய வேண்டி இருந்தது.

எனக்கு நேரம் இல்லை. ஆயினும், எவ்வளவு நேரம் கடந்து விட்டாலும் சரி, எவ்வளவு கடினமாய் இருந்தாலும் சரி, அறிக்கையைக் கேட்கும் வாய்ப்பை நான் தவற விட வில்லை. வேலை திருப்திகரமானது, நல்லது அல்லது திருப்தி அளிக்காதது என்று கருத்து தெரிவித்தேன். வேறு எவ்வித முடிவும் செய்யப்பட வில்லை. அன்று எதிர்ப்பட்ட ஒரு நிகழ்ச்சிக்குப் பொறுப்புள்ள மனிதனும் அவனுக்கு உதவுவதற்கு வெவ்வேறு பிரிவுகளைச் சேர்ந்த சில சிறுவர்களும் கிடைக்காத நாள் ஒன்று கூடக் கம்யூனில் இருக்க வில்லை. பையன்கள் சண்டையிட்டுக் கொண்டார்கள், சமாதானத்

துக்கு வர மாட்டோம் என்றார்கள் என வைத்துக் கொள்வோம். உடனே ஒரு தோழன் நியமிக்கப் படுவான். சச்சரவின் சாரம் என்ன என்று நன்றாகத் தெரிந்து கொண்டு, பையன்களைச் சமாதானப்படுத்தி, பொறுப்பு நிறைவேற்றப் பட்டதாக அறிக்கை செய்வது இந்தத் தோழனின் கடமை.

பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு ஏற்ற போதனைக் கருவியாக விளங்கியது ஆழ்ந்த பொறுப்பு உணர்ச்சி. பிரிவின் பொது அமைப்பின் விஷயத்தில் இது அதிகப்படிப் பகுதியாகஇருந்தது என்பது கூறாமலே விளங்கும். இது வெறும் காட்சிப் பகுதி அல்ல.வேலைக்கு உத்தரவாதம் ஏற்கும் உண்மையான அலுவலகமாக இருந்தது.

சில குழந்தைகள் இல்லங்களில் வேலையை இவ்வாறு ஒழுங்கமைப்பதில் கவனம் செலுத்தப் படுவதை நான் கண்டேன். ஆனால் திட்டவட்டமான ஒழுங்கமைப்பிலும் கண்டிப்பான பொறுப்பிலும் கவனம் செலுத்தப்படுவதில்லை. பொறுப்பு இல்லாமல் உண்மையான வேலை இருக்க முடியாது. அதே சமயம், உற்பத்தியிலும் வகுப்பிலும் பள்ளியிலும் இணைவுக் குழுவிலும் பொறுப்பு கோரப்படுவது மிக அவசியமானது. குளியல் போன்றவற்றில் கூட. இன்று குளியலுக்கு இன்னார் பொறுப்பாளியாக இருக்க வேண்டும் என்று திட்டப் படுத்துவது அவசியம். சமுதாயம் அனைத்தினதும் பொறுப்பின் ஒன்றிப்பில் இந்தப் பொறுப்பு சேர வேண்டும். பொறுப்புக்களின் இந்த ஒன்றிப்பு இல்லாவிட்டால், பொறுப்புள்ள நபர்களின் முழுமையான ஒருங்கிசைவு இல்லாவிட்டால், நடப்பது விளையாட்டாக இருக்குமே தவிர ஆழ்ந்த காரியமாக இருக்காது.

இவ்வாறு ஒப்படைக்கப்படும் எல்லாப் பொறுப்புக்களும் இந்த எல்லா உத்திகளும் சேர்ந்துதான் வேலைப் பாங்கு, சமுதாயத்தின் பாங்கு உருவாகியது. இந்தப் பாங்கு பற்றித் தனி நூல் எழுதப்பட வேண்டும் என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன்.

சோவியத் குழந்தைகள் சமுதாயத்தின் பாங்கைக் காட்டும் சிறப்பு அடையாளங்கள் பின்வருவன என்று நான் நினைக்கிறேன்.

முதலாவது, உவகைப் பெருக்கு. இந்தப் பண்புக்கு நான் தலைமை இடம் அளிக்கிறேன். இடையறாத உற்சாகம்,

ஏங்கிய முகங்களே இல்லாமை, புளித்துப் போன பாவத்தைக் காட்டும் முகத்தோற்றம் இல்லாமை, செயல் புரிவதற்கு எப்போதும் ஆயத்தமாய் இருப்பது, மகிழ்ச்சி நிறைந்த மனநிலே, உவகை பெருக்கெடுக்கும், குதூகலமும் உற்சாக மும் பொங்கும் மனநிலே, ஆனல் வெறி அல்ல. உபயோக மான செயல்களுக்கு, சுவையுள்ள, பொருள்நிறைந்த, அர்த்தம் உள்ள செயல்களுக்கு ஆயத்தமாய் இருப்பது, ஆனல் மடத்தனத்திலும், வீரிடுவதிலும் கூச்சலிலும், பொரு ளற்ற விலங்குச் செயல்களிலும் ஒரு போதும் ஈடுபடாமை.

கூச்சல், வீரிடல், ஓட்ட சாட்டம் போன்ற விலங்குச் செயல்களே நான் கண்டிப்பாக எதிர்க்கிறேன். த்ஸெர்ஜீன்ஸ்கி கம்யூனில் ஐந்நூறு சிறுவர் சிறுமியர் இருந்தார்கள், ஆனல் வீரிடலேயும் கூச்சலேயும் நீங்கள் அங்கே ஒரு போதும் கேட்டி ருக்க மாட்டீர்கள். அதே சமயம் இடையருத உற்சாகத்தை யும் தங்கள் வாழ்க்கையிலும் மனநிலேயிலும் நம்பிக்கையை யும் நீங்கள் கண்டிருப்பீர்கள்.

இந்த உவகைப் பெருக்கு விசேஷ முறைகளால் உண்டாக் கப்பட முடியாது. சமுதாயத்தின் வேலே அனைத்தினதும், நான் கூறியவை எல்லாவற்றினுடையவும் விளேவு ஆகும் இது.

பாங்கின் அடுத்த அடையாளம் தன் மதிப்பு பற்றிய உணர்வு. இதை ஒரு நாளில் ஏற்படுத்திவிட முடியாது. தனது சமுதாயத்தின் மதிப்பு பற்றிய எண்ணத்தால், தனது சமுதா யத்தின் மேல் ஏற்படும் பெருமையால் தோன்றுகிறது இந்தத் தன்னம்பிக்கை.

நீங்கள் கம்யூனுக்கு வந்தால், பையன்கள் உங்களே மிகவும் மரியாதையுடன், மிகவும் இன்முகத்துடன் வரவேற்பார்கள். உங்களேக் கவனிக்காமல் ஒருபோதும் கடந்து செல்ல மாட் டார்கள். நீங்கள் சந்திக்கும் முதல் பையன் கட்டாயமாக உங்களுக்குத் தலே வணங்கி, ''வணக்கம்! உங்களுக்கு என்ன வேண்டும், தயை செய்து சொல்லுங்கள்'' என்பான்.

ஒவ்வொருவனும் எச்சரிப்பு அடைவான்.

''நீங்கள் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?''

உங்களிடம் எவனும் கம்யூனேப் பற்றிக் குறை சொல்ல மாட்டான். கம்யூன் உறுப்பினர்களிடம் வியப்பூட்டும் ஒரு தன்மையை நான் கண்டேன். ஒருவன் அப்போதுதான்

கண்டனத்துக்கு உள்ளாகி இருப்பான். ஒரேயடியாக உளம் சோர்ந்து போயிருப்பான். திடீரென்று அவன் வெளியிலிருந்து வந்த வேற்று மனிதருக்கு எதிர்ப்படுவான். அவ்வளவுதான், அவன் முழுமையாக மாறிவிடுவான். இன்முகத்துடன், மகிழ்ச்சி பொங்க உங்களை முடிந்த இடத்துக்கு அழைத்துச் செல்வான். எங்கேனும் வெளியாரை அழைத்துச் செல்லத் தடை இருந்தால், ''வாருங்கள், அனுமதி கேட்டுப் பெறுவோம்'' என்பான்.

உள்ளுக்குள் தனது துன்பத்தால், தனது தவற்றை நினைத்துக் குமைந்து கொண்டிருப்பான். ஆனால், சற்று முன் தான் தனக்குக் கடும் துன்பம் நேர்ந்தது என்பதைக் காட்டிக் கொள்ள மாட்டான்.

''வாழ்க்கை எப்படி இருக்கிறது?'' என்று வந்தவர் கேட்டால், ''அருமையாக இருக்கிறது'' என்று பதில் அளிப்பான்.

அவன் இவ்வாறு செய்வது வந்தவர் தன்னை விரும்ப வேண்டும் என்பதற்காக அல்ல, சமுதாயத்தின்பால் தனக்கு உள்ள பொறுப்பை அவன் உணர்வதால், தண்டனை பெற்ற போதிலும் தன் சமுதாயத்தைக் குறித்து அவன் பெருமைப் படுவதால்.

ஒரு பையன் தீய செயலுக்காக இப்போதுதான் கண்டிக்கப் பட்டிருப்பான், அதற்குள் பார்வையாளர் குழு வந்து விடும்.

''எவ்வளவு நல்ல பையன்! இவன் எப்படி இருக்கிறான்?''

அவன் குற்றம் செய்து தண்டனை பெற்றது பற்றி ஒருவரும் ஒரு வார்த்தை கூடச் சொல்ல மாட்டார்கள். இது கெட்ட வழக்கமாகக் கருதப்பட்டது. அவன் குற்றம் செய்ததும் தண்டனை பெற்றதும் எங்கள் விவகாரம். மற்றவர்களிடம் நாங்கள் அவனைக் காட்டிக் கொடுக்க மாட்டோம்.

தன்மதிப்பு நிறைந்த இந்த தோரணையை போதித்து ஏற்படுத்துவது மிகக் கடினம். இதற்குப் பல ஆண்டுகள் வேண்டும். ஒவ்வொரு விருந்தாளிக்கும் ஒவ்வொரு தோழனுக்கும் மரியாதை காட்டும் பழக்கம் நுட்பமாகச் செவ்வைப்படுத்தப்பட வேண்டும். ஆனால் இந்த மரியாதையோடு கூடவே, ஒரு வேலையும் இல்லாமல் சோம்பேறித்தனமாக அலையும் வெளியார்களும், இன்னும் முக்கியமாகப் பகைவர்

களும் கம்யூனில், சமுதாயத்தில் புகாதபடி தடுக்கும் நிலை யான எச்சரிப்பு உணர்ச்சியும் வளர்க்கப்பட வேண்டும். அதனால்தான் கம்யூனில் பையன்கள் வெளியாரை மிக மரியா தையாக வரவேற்று அழைத்துச் செல்வார்கள், ஆனால் முதல் கடமையாக, ''நீங்கள் யார்? எதற்காக வந்தீர்கள்?'' என்று கேட்பார்கள்.

வந்தவர்களுக்கு உண்மையாகவே ஒரு வேலையும் இல்லை என்பதைக் கண்டால், மிகவும் மரியாதையாகப் பின்வரு மாறு சொல்லிவிடுவார்கள்:

''உங்களை உள்ளே விட எங்களால் முடியாது. உங்களுக்கு ஏதாவது வேலை இருந்தால், தாராளமாக வரலாம்.''

வெட்டியாகச் சுற்றவும் ஒரு நோக்கமும் இன்றிப் பார்க் கவும் வருபவர்கள் எப்போதும் ஏராளமாக இருந்தார்கள். கம்யூன் பையன்களின் இந்த மரியாதை மிக முக்கியமான ஒரு திறமையிலிருந்து தோன்றியது. இந்தத் திறமை ஒவ் வொரு குடிமகனுக்கும் ஏற்படுத்தப்பட வேண்டும். சூழலை அறியும் திறமை இது. குழந்தைகள் சமுதாயத்தில் அல்லது கும்பலில் சூழலை அறியும் இந்தத் திறமை மிக அடிக்கடி இல்லாதிருப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். கண் முன் இருப்பதை மனிதன் காண்கிறான். ஆனால் தலைக்குப் பின்னே இருப்பதைக் கவனிப்பதில்லை.

சுற்றிலும் இருப்பது என்ன, சூழ்ந்து இருப்பவர்கள் யார் என்பதை உணரும் இந்தத் திறமை, நம் கண்ணுக்குத் தெரி யாதவற்றை, பிற அறைகளில் நடப்பவற்றை எல்லாம் உண ரும் திறமை, வாழ்க்கைப் போக்கை, நாளின் போக்கை உணரும் இந்தத் திறமை—சூழலை அறியும் இந்தத் திறமை— மிகுந்த சிரமத்துடனேயே ஏற்படுத்தப்படுகிறது.

சூழலை அறியும் இந்தத் திறமையை ஏற்படுத்துவதற்கு மிகுந்த பிரயாசை எடுத்துக் கொள்வதும் எப்போதும் நினை வில் வைத்திருப்பதும் அவசியம். குழந்தைகள் சமுதாயத்தில் அடிக்கடி கேட்கும் வீரிடலும் கூச்சலும் முதன்மையாகச் சூழலை அறியும் திறன் இன்மையால், தன்னையும் தன் இயக் கத்தையும் மட்டுமே உணர்வதால் நிகழ்கின்றன. சுற்றி உள்ளவை பற்றிய உணர்வு இல்லை. உண்மையான சோவியத் குடிமகனே, சுற்றிலும் நடப்பவற்றைத் தன் எல்லா நரம்பு களாலும், அனேகமாகத் தன் இச்சை இன்றியே, உணர

வேண்டும். நண்பர்களின் நடுவே இருக்கும் போது உள்ள நிலைமை ஒரு வகையானது. அப்போது நாம் ஒரு குறித்த விதத்தில் நடந்து கொள்ளலாம். ஆனல் புதிதாக வந்த கம்யூன் உறுப்பினர்களுக்கு நடுவே இருக்கும் போது, நேற்று தான் வந்த பையன்களும் இருப்பதைக் காணும் போது இருக்கும் நிலைமை வேறு. கம்யூன் உறுப்பினன் இதைக் காணும் போது, புதிய பையன் கேட்கக் கூடாதவற்றைச் சொல்ல மாட்டான். ஒரு மாது அல்லது சிறுமி அருகாகச் செல்வதைக் காணும் போது அவன் நடந்து கொள்ளும் விதம் வேறு. அவள் அவனுக்குத் தேவை இல்லை, ஆயினும் அவன் தன் நடத்தையை மாற்றிக்கொள்ள வேண்டும். நான் அருகாமையில் இருந்தால், சமுதாயத்தின் மையமான நான் அருகே இருப்பதை அறிவதும் உணர்வதும் அவனுடைய கட்டாயக் கடமை. வேறு ஆசிரியர், பயிற்சி ஆசிரியர், பொறியாளர், போன்ற மையத்தின் பிரதிநிதி ஒருவர் அருகே இருந்தால் அதற்கு ஏற்ப நடத்தையில் மாறுதல் ஏற்பட வேண்டும்.

சந்தர்ப்பத்துக்கு ஏற்ப நடந்து கொள்வது, நடிப்பது என்று இதற்கு அர்த்தம் அல்ல. சமுதாயத்தின் எந்த இடத்தில் நாம் இருக்கிறோம், இதிலிருந்து நம் நடத்தை சம்பந்தமான என்ன கடமைகள் விளைகின்றன என்று உணர்வதே இதன் அர்த்தம்.

குழந்தைகள் இல்லங்களிலும் குடியேற்றங்களிலும் பெரும்பாலான மாணவர்கள் தங்களிடம் வருபவர்கள் விஷயத்தில் மிகவும் அழகற்ற முறையில் நடந்து கொள்வதை நான் காண நேர்ந்தது. வந்தவர் யாராயினும் அவர்கள் தங்கள் ஆசிரியர்களையும் நிர்வாகத் தலைவரையும் சகபாடிகளையும் பற்றிக் குறை சொல்லத் தொடங்குகிறார்கள். கம்யூன் உறுப்பினர்கள் வெளியாரிடம் இவ்வாறு குறை சொல்லாதிருக்கும் படி நான் பயிற்றினேன். சுய விமரிசனம் ஒரு விஷயம், யாரைக் கண்டாலும் கண்ணீர் விடுவதும் நச்சரிப்பதும் கீச்சிடுவதும் அனுமதிக்கத் தகாதவை.

கம்யூன் உறுப்பினர்கள் அடிக்கடி எதனலாவது அதிருப்தி கொண்டார்கள். இதைப் பற்றிக் கமாண்டர்கள் சபையில் அவர்கள் பேசினர்கள். ஆனல் பிறர் முன்னிலையில் குறை சொல்லவோ ''கீச்சிடவோ'' ஒருபோதும் முற்படவில்லை. பிறர் முன் சமுதாயம் ஒன்றித்த முழுமையாக விளங்கியது.

குறை சொல்ல முன்வருவது சுய விமரிசனம் அல்ல. சமுதாயத்தில் தன்னைத் துன்பப்பட்டவனாக எண்ணும் தனி மனிதனின் நிலைமை இது. சமுதாயத்தினதும் தனி நபர்களதும் அழுமூஞ்சித்தனம் இது. காப்பு உடைமை பற்றிய எண்ணம் சமுதாயத்தில் சிறப்பாக நிலவவும் அதன் வேலைப் பாங்குக்கு அணி செய்யவும் வேண்டும். சமுதாயத்தின் பெருமை நிலவும் இடத்தில், ஒவ்வொரு தனி நபருக்கும் கோரிக்கை விடப்படும் இடத்தில், அதாவது, ஒவ்வொரு நபரும் பலாத்காரத்திலும் தான்தோன்றித்தனத்திலும் இகழ்ச்சியிலும் இருந்து தான் காக்கப்பட்டிருப்பதை உணரும் இடத்தில் காப்பு உணர்வு உருவாக வேண்டும்.

இந்தக் காப்பு உணர்வு அனுபவத்திலிருந்து ஏற்படுகிறது. எல்லோரிலும் சிறியவர்களும் மென்மையானவர்களுமான பத்து, பன்னிரண்டு வயதுச் சிறுவர், சிறுமியர் தாங்கள் சமுதாயத்தின் இளைய உறுப்பினர் என்று எண்ணுதிருக்கும்படி நான் ஏற்பாடு செய்தேன். வேலையில்—ஆம், ஆனால் உணர்வில், நம்பிக்கையில், நன்கு காக்கப் பட்டிருக்கிறோம் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். யாரும் தங்களுக்குக் கேடு செய்ய முடியாது, ஏனெனில் கேட்டுக்கு உள்ளாகுபவன் ஒவ்வொருவனும் தன் பிரிவாலும் குழுவாலும் என்னுலும் மட்டும் இன்றி, எதிர்ப்படும் எந்தத் தோழனாலும் காக்கப் படுவான் என்று அவர்கள் உணர்ந்திருந்தார்கள்.

இந்தக் காப்பு உணர்வு தானாகவே வந்து விடாது, அதையும் உருவாக்க வேண்டும், அதற்காகப் பாடுபட வேண்டும் என்பது தெளிவு. இந்தப் பாங்கில் நிலையான உவகைப் பெருக்கை, இயக்கத்திற்கும் ஊக்கத்திற்கும் செயலுக்கும் வேண்டிய திறனை ஏற்படுத்தியதும் நிறுத்துவதற்கு உரிய திறனையும் அதே சமயம் ஏற்படுத்த வேண்டும். வழக்கமாக, சாதாரண போதனை ஆசிரியனுக்கு ஒப்புநோக்கில் அரிதாகவே வாய்ப்பது இது. தன்னை நிறுத்துவது மிகவும் கடினமான காரியம், சிறப்பாகக் குழந்தைப் பருவத்தில். அது வெறும் உயிரியலிலிருந்து வருவதில்லை, அதற்குப் பயிற்றுவது தான் முடியும். போதனை ஆசிரியன் நிறுத்துவதற்குப் பயிற்ற முயற்சி செய்யாவிட்டால் அந்தத் திறன் ஏற்படாது. ஒவ்வோர் அடியிலும் தன்னைத் தடுத்து நிறுத்திக் கொள்ள வேண்டும். இது பழக்கம் ஆகி விட வேண்டும். நிறுத்த விசை இல்லாத

மனிதன் பழுதடைந்த இயந்திரம் என்பதைக் கம்யூன் உறுப் பினர்கள் நன்ருக அறிவார்கள். இந்த நிறுத்தம் ஒவ்வொரு உடல் அசைவிலும் உள இயக்கத்திலும் வெளிப்படுகிறது. சிறப்பாக அது விவாதங்களிலும் சச்சரவுகளிலும் வெளிப் படுகிறது. குழந்தைகள் மிக அடிக்கடி சச்சரவிடுவதற்குக் காரணம் அவர்களிடம் நிறுத்தத் திறன் இல்லாதது தான்.

தோழனுக்கு விட்டுக் கொடுக்கும் பழக்கத்தை ஏற்படுத்து வது மிகவும் கடினமான வேலே. சமுதாய நலனேக் கருத்தில் கொண்டே இவ்வாறு விட்டுக்கொடுக்கும் பழக்கத்தை நான் முயன்று ஏற்படுத்தினேன். குழந்தைகள் சச்சரவு தொடங்கு வதற்கு முன்பே, நிறுத்த விசை செயல்படும்படி செய்தேன். விளேவாகச் சச்சரவு நேராது. இவ்வாறு நான் முயன்றதன் பயனுக, கம்யூனில் தோழர்களுக்கு இடையே சச்சரவுகள் மாதக் கணக்கில் நிகழவே இல்லே. அடிதடியும் வம்புப் பேச்சுக்களும் ஒருவருக்கு எதிராக மாற்றவர் சூழ்ச்சி செய்வதுமோ, அறவே நின்றுவிட்டன. யார் செய்தது சரி, யார் செய்தது தப்பு என்பதில் கவனம் செலுத்தியதால் அல்ல, தன்னேத் தடுத்து நிறுத்தும் திறமை ஒன்றின் வாயிலாகவே நான் இந்த விளேவைப் பெற்றேன்.

இது வாழ்க்கையின் எந்த சந்தர்ப்பங்களுக்கும் பொருந்து கிறது, இதனுல் என்ன பயன் ஏற்படக் கூடும் என்பதை உங் களில் ஒவ்வொருவரும் நன்கு புரிந்து கொண்டிருப்பீர்கள். பாங்கின் இந்த எல்லா அடையாளங்களும் அதன் சிறப்பு இயல்புகளும் சமுதாயத்தினது வாழ்க்கையின் எல்லாப் பகு திகளிலும் போதனே வாயிலாக ஏற்படுத்தப் படுகின்றன என்பதில் சந்தேகம் இல்லே. இவ்வாறே வெளிப் பழகுமுறை யின் விதிகளிலும் நியமங்களிலும்கூட இவற்றுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. எனது வேலேயை ஆராய்ந்து பார்த்த பலர் இந்த விதிகளேயும் நியமங்களேயும் எள்ளி நகையாடி ஞர்கள். இவை பழகு முறையின் வெளி நியமங்கள் என்பதை ஏற்றுக்கொள்ள அவர்களால் முடியவில்லே.

கம்யூன் உறுப்பினன் படிக்கட்டின் அழியைப் பிடித்துக் கொள்ளக் கூடாது, சுவற்றில் சாயக் கூடாது, என்னுடனும் மற்றவர்களுடனும் இப்படிப் பேச வேண்டும் (காட்டுகிருர்), அவன் தனது இடுப்பையே எப்போதும் நம்ப வேண்டும், அதற்காகவே இடுப்பு வாரினுல் இறுக்கப்பட்டிருக்கிறது;

கமாண்டராகிய நான் இடும் ஒவ்வொரு கட்டளைக்கும் அவன் ''உத்தரவு'' என்று பதில் சொல்ல வேண்டும், அப்படி அவன் சொல்லாதவரை அவன் கட்டளையைப் புரிந்து கொள்ளவில்லை என்று எண்ணப்படும் என்பவை போன்ற நியமங்கள் மிக முக்கியமான நிபந்தனைகள் என்று நான் இன்றளவும் கருது கிறேன்.

இவை எல்லாம் மிகப் பெருத்த முக்கியத்துவம் உள்ள வை. அவ்வாறு எங்கள் கம்யூனில் ஏற்கப்பட்டது. இன்று ஸெம்ளியான்ஸ்கி வீட்டு வேலைக் கமாண்டராக நியமிக்கப் பட்டிருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம்.

''நிக்கலாய், போய் எனக்குக் காகிதமும் பென்சிலும் கொண்டு வா'' என்று அவன் சொல்வான்.

அந்தப் பையன் ஒன்றும் சொல்லாமல் ஓடினால், ''நீ எப்படிப் போகிறாய்?'' என்று கேட்பான் ஸெம்ளியான்ஸ்கி.

''உத்தரவு, காகிதம் கொண்டு வருகிறேன்!'' என்பான் நிக்கலாய்.

இந்த வெளிச் சுறுசுறுப்பு, சடங்குமுறை உணர்வு, பழகுமுறையின் உள்ளடக்கத்தையும் தீர்மானிக்கிறது. அதே ஸெம்ளியான்ஸ்கியும் நிக்கலாயும் அப்புறம் நாள் பூராவும் பிள்ளையார் பந்தோ கால் பந்தோ ஆடலாம். ஆனால் இப்போது அவன் தன் தோழனுக்குக் கமாண்டர். அவர் களுடைய உறவுக்குத் திட்டமான வெளி வடிவம் இருக்க வேண்டும்.

நான் தண்டனை விதித்தால், ''உத்தரவு!'' என்று கூறப் பட்டால்தான் அது ஏற்றுக் கொள்ளப்பட்டதாகக் கருது வேன்.

காரிய உறவுகளில் மரியாதைச் சடங்கு முறை இவ்வாறு ஏற்படுத்தப்படுவது மிகவும் உபயோகமானது. அது சித்த உறுதியைத் திரட்டுகிறது, மனிதன் தான் நிதானம் உள்ள வன் என்று உணர வைக்கிறது. காரிய உறவுகளின் வகையை அது வலியுறுத்துகிறது. இது நட்பு, இது அண்டை வீட்டு உறவு, இது காதல், இது நேசம், ஆனால் இது காரியம் என்று பகுத்தறிய மனிதனுக்குக் கற்பிக்கிறது. இதனால் காரியத்தின் மீது தனிப்பட்ட மரியாதை ஏற்படுகிறது.

இது இல்லாமலே ஒருவேளை சமாளித்து விடலாம்தான். ஆனால் இது காரியப் பயிற்சிக்குரிய மிகச் சிக்கனமான வடி

வம், காரிய உறவுகளின் வெளி வடிவம் என்று நான் எண்ணு கிறேன். வெளி வடிவம் அடிக்கடி சாராம்சத்தை நிர்ணயிக் கிறது.

பின்னுல் கம்யூனில் இது முற்றிலும் இயல்பான அன்ருட நிகழ்ச்சி ஆகிவிட்டபடியால் வேறு விதமாக இருக்கவே முடியவில்லை. சின்னஞ் சிறுவர்களிடம் சல்யூட் அடிக்கும் இந்த மறிவினை துல்லியமாக ஏற்பட்டு விட்டது. எனவே, நீங்கள் வேடிக்கை செய்கிறீர்கள், விளையாடுகிறீர்கள் என்று ஒருவரும் சொல்ல முடிந்திராது. சிறுவன் காரிய உறவுகளில் சேர்ந்து கொண்டதும் இந்தக் காரிய மறிவினை அவனிடம் இயல்பாகவே ஏற்பட்டு விடுகிறது.

ஒரு சிறுவன் மைதானத்தில் உற்சாகமாக, மனம் ஒன்றி விளையாடிக் கொண்டிருப்பான். தற்செயலாக, தன் முறை வேலைக் கமாண்டரின் அருகாகச் செல்கையில் ஒரு சிறு உத்தரவு அவன் காதில் படும். உடனே அவன் கட்டாயமாக விரைப்பாக நிற்பான். இந்தப் பழக்கம் மிக முக்கியமானது, பயனுள்ளது என்று நான் எண்ணுகிறேன்.

திட்டவட்டமான பொதுப் பாங்கு போதனை மூலம் ஏற் படுத்தப்படாவிட்டால் வெளிப் பழகுமுறையின் இந்த வடி வங்களுக்கு அர்த்தம் இருக்காது. சூழலை அறியும் திறனையோ, நிறுத்தத் திறனையோ, பொறுப்பையோ, வேலையில் கச்சிதத் தையோ, ஒரு நபர் பொறுப்பையோ, காப்பு உணர்வையோ பயிற்ருத இடத்தில், இத்தகைய வெளி வடிவத்தை ஏற் படுத்த விரும்பினுலும் இத்தகைய வெளி வடிவம் இருக்காது. வேறு வார்த்தைகளில் சொன்னுல் அது பயனற்றதாகவே இருக்கும். எங்கே பொதுப் பாங்கு, இடையருத சமுதாய இயக்கத்தையும் உள்ளடக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமைந்த பொதுப் பாங்கு இருக்கிறதோ, அங்கே வெளி மரியாதை வடிவம் இன்றியமையாதது, பயனுள்ளது, சமுதாயத்தை வெகுவாக அழகுபடுத்துகிறது. இந்த வடிவம் இராணுவப் பாங்கை ஓரளவு ஒத்திருக்கலாம், ஆனுல் மொத் தத்தில் முன்னேடிச் சிறுவர் இயக்கக் கோட்பாடுகளிலிருந்து கூட இது விலகுவதில்லை. இந்த வடிவம் சமுதாயத்தை அழகுபடுத்துவதுடன் எதிர் விளைவையும் ஏற்படுத்துகிறது. சமுதாயத்தை அழகியல் நோக்கிலும் கவர்ச்சி உள்ளது ஆக் குகிறது இது.

சிறுவன் வாழ விரும்புகிற, அவன் பெருமைப்படக் கூடிய சமுதாயம் வெளிப் புறத்தில் அழகு அற்றதாக இருக்கும் என்று என்னால் கற்பனை செய்ய முடியவில்லை. வாழ்க்கையின் அழகியல் அம்சத்தை அசட்டை செய்வது கூடாது. போதனை இயலாராகிய நாம் அழகியல் விஷயத்தில் ஓரளவு எதிர்மறைப் போக்கை மிக அடிக்கடி கடைப்பிடிக்கிறோம்.

உடை, அறை, படிக்கட்டு, கடைச்சல் இயந்திரம் ஆகியவற்றின் அழகியல், பழகுமுறையின் அழகியலைவிட முக்கியத்துவத்தில் சற்றும் குறைந்தது அல்ல. பழகுமுறையின் அழகியல் என்பது என்ன? முறைப்படுத்தப்பட்ட, ஒரு குறித்த வடிவம் பெற்றுவிட்ட பழகுமுறையே இது. வடிவமே மேம்பட்ட பண்பாட்டின் அடையாளமாக விளங்குகிறது.

எனவேதான் இங்கே பொறுப்பின் இன்னொரு பிரிவு எதிர்ப்படுகிறது: பாங்கின் விளைவாக ஏற்பட்ட, பாங்கின் அறிகுறியாக விளங்குகிற அழகியலை அணுகியதும் இந்த அழகியலைத் தானாகவே ஏற்படுவது என்று நாம் எண்ணத் தலைப்படுகிறோம்.

அழகிய வாழ்க்கையின் எல்லா அளவுமானங்களையும் உங்களுக்கு விவரிக்க என்னால் முடியாது. ஆனால் இந்த அழகிய வாழ்வு கட்டாயமாக இருக்க வேண்டும். குழந்தைகளின் அழகிய வாழ்வு வயது வந்தவர்களின் அழகிய வாழ்வு அல்ல. குழந்தைகளுக்குத் தனி வகை உணர்ச்சிப் பெருக்கு உண்டு. உள இயக்கங்களை வெளிப்படுத்தும் தனிப்பட்ட அளவு உண்டு. எனவே குழந்தைகள் சமுதாயத்தில் உள்ள அழகு, வயது வந்தவர்கள் சமுதாயத்தின் அழகை அப்படியே பிரதிபலிக்க முடியாது.

உதரணமாக, விளையாட்டை எடுத்துக்கொள்வோம். குழந்தைகள் சமுதாயத்தில் விளையாட்டு கட்டாயமாக இருக்க வேண்டும். விளையாடாத குழந்தைகள் சமுதாயம் உண்மையான குழந்தைகள் சமுதாயமாக இருக்காது. விளையாட்டு என்பது, பையன் திடலில் ஓடுவதும் கால் பந்து விளையாடுவதுமாக மட்டும் இருக்கக் கூடாது. பையன் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் ஓரளவு விளையாடுகிறான். அவன் கற்பனையின் ஏதோ ஒரு கட்டத்தை மட்டுமே நெருங்குகிறான். அவன் தன்னை ஏதோ ஒரு விதமாகக் கற்பனை செய்து கொள்கிறான். விளையாடுகையில், இருப்பதைவிட

இன்னும் மேலாகத் தன்னைப் பற்றி எண்ணிக்கொள்கிருன். கட்டாயமாக விளையாடும் சமுதாயத்தில்தான் கற்பனை வளர்ச்சி அடைகிறது. ஆசிரியன் என்ற முறையில் நானும் அவனோடு கொஞ்சம் விளையாட வேண்டும். நான் வெறுமே கற்றுக்கொடுப்பதும் கோருவதும் வற்பறுத்துவதுமாக மட்டும் இருந்தால் நான் வெளிச் சக்தியாகவே இருப்பேன். பயனுள்ள சக்தியாக இருக்கலாம், ஆனால் நெருங்கியதாக இருக்க முடியாது. நான் கட்டாயம் கொஞ்சம் விளையாட வேண்டும். எனது சக ஆசிரியர்கள் எல்லோரிடமும் நான் இவ்வாறு கோரினேன்.

இப்போது உங்களோடு பேசும்போது நான் முற்றிலும் வேறு ஆள். ஆனால் சிறுவர்களோடு இருக்கையில் நான் இந்த உவகைப் பெருக்கையும் கேலிப் பேச்சையும் புன்னகையை யும் கொஞ்சம் சேர்த்துக்கொள்ள வேண்டும். நடிப்புப் புன்னகையை அல்ல, இன்முகம் காட்டும் புன்னகையை, போதிய அளவு கற்பனை நிறைந்த புன்னகையைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். சமுதாயத்தின் மீது ஆதிக்கம் செலுத் துவதோடு சமுதாயத்துக்கு மகிழ்வும் ஊட்டும் உறுப்பினனாக நான் இருக்க வேண்டும். நான் அழகியல் நோக்கில் கவர்ச்சி கொண்டிருக்க வேண்டும். அதனால்தான் துப்புரவு செய்யப் படாத சோடுகள் அணிந்தோ, இடைவார் இல்லாமலோ நான் ஒரு போதும் வெளியே வரவில்லை. முடிந்தவரை ஒருவகை ஒளியும் என்னிடம் இருக்க வேண்டும். சமுதாயம் போன்றே நானும் களிப்புடன் இருக்க வேண்டும். துயர் ததும்பும் முகத் தோற்றமும் ஏங்கிய வதனமும் உள்ளவனாக நான் ஒரு போதும் இருந்ததில்லை. எனக்குத் துன்பங்கள் நேர்ந்தி ருந்தாலும் உடல் நலம் கெட்டிருந்தாலும்கூட, இவற்றை எல்லாம் குழந்தைகளுக்குக் காட்டாதிருக்க நான் திறன் பெற்றிருக்க வேண்டும்.

மறுபுறம், திடீரென்று சீறவும் நான் வல்லவனாய் இருக்க வேண்டும். மாணவர்களுடன் எந்த முறையில் பேச வேண் டும் என்பது பற்றிச் சென்ற ஆண்டு உங்கள் போதனை இயல் சஞ்சிகையில் கட்டுரை படித்தேன். ''ஆசிரியன் மாணவனி டம் ஒரு சீரான குரலில் பேச வேண்டும்'' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. எதற்காக? ஒரு சீரான குரலில் ஏன் பேச வேண்டும்? அப்படிப் பேசும் ஆசிரியன் அலுப்பு ஊட்டுபவனாக

இருப்பான், அவனை எல்லோரும் வெறுப்பார்கள் என்று நான் எண்ணுகிறேன். இல்லை, என் கருத்துப்படி ஆசிரியன் குதூகலமும் உற்சாகமும் உள்ளவனாக இருக்க வேண்டும். ஏதாவது தவறு நடந்தால் இரைந்து அதட்ட வேண்டும். நான் கோபம் கொண்டால் உண்மையாகவே சீறி விழுவேன் என்பதை மாணவர்கள் அப்போதுதான் உணர்வார்கள். கோபப்படுகிறாரா, போதனை ஒழுக்க நெறியைப் பரப்புகிறாரா என்று தெரியாத இரண்டுங் கெட்டான் போக்கை மேற்கொள்ள மாட்டேன்.

இந்தக் கோரிக்கை போதனை ஊழியர்கள் அனைவருக்கும் பொருந்தும். அருமையான போதனை ஊழியர்களை, அவர்கள் எப்போதும் ஏக்கத்தைப் பரப்பி வந்த ஒரே காரணத்துக்காக நான் இரக்கம் இன்றி வேலையிலிருந்து நீக்கிவிட்டேன். குழந்தைகள் சமுதாயத்தில் நிறுத்த விசையைப் போட, தன் வருத்தங்களை மறைக்க, வயது வந்தவன் திறமை பெற்றிருக்க வேண்டும்.

சமுதாயத்தை வெளித் தோற்றத்திலும் அழகுபடுத்த வேண்டும். ஆகவேதான், எங்கள் சமுதாயம் மிக ஏழையாக இருந்த காலத்தில் கூட, மூடு தோட்டம் போடுவதை முதல் கடமையாகக் கருதினேன். வெறும் ஒப்புக்காக அல்ல. இரண்டு ஏக்கர் நிலத்தில் பூச்செடிகள் வளர்த்தேன். என்ன செலவானாலும் பொருட்படுத்தவில்லை. ரோஜாச் செடிகள் கட்டாயமாக. எவையேனும் உதவாக்கரைப் பூச்செடிகள் அல்ல, அலங்காரப் பூச்செடிகள், ரோஜாச் செடிகள் முதலியவற்றை நட்டு வளர்த்தேன். நானும் மாணவர்களும் ´இவற்றை அன்புடன் பேணிப் பாதுகாத்தோம். உறங்கறைகளிலும், சாப்பாட்டு அறைகளிலும் வகுப்பு அறைகளிலும் அலுவல் அறைகளிலும் மட்டும் இன்றி, படிக்கட்டுகளிலும் தொட்டிகளில் பூச்செடிகள் வைக்கப்பட்டிருந்தன. தகரத்தால் தனிப்பட்ட பூக் கூடைகள் செய்து, படிக்கட்டு விளிம்புகள் எல்லாவற்றிலும் மலர்ச் செடிகள் வைத்தோம். இது மிக அவசியம். தவிர, ஒவ்வொரு பிரிவுக்கும் ஏதேனும் முறைப்படி மலர்ச் செடிகள் கொடுக்கப்படவில்லை. ஒரு பூச்செடி வாடிவிட்டால் பையன்கள் மூடு தோட்டத்துக்குப் போய், ஓரிரு செடித் தொட்டிகளை எடுத்து, வந்தார்கள்.

இந்தப் பூச்செடிகளும் நல்லுடைகளும் அறைகளில்

துப்புரவும் காலணிகளில் துப்புரவும் குழந்தைகள் சமுதாயத்தில் கட்டாயமாக இருக்க வேண்டும். பூட்சுகள் எப்போதும் துப்புரவாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் என்ன போதனை இருக்க முடியும்? பற்கள் மட்டும் அல்ல, பூட்சுகளும் சுத்தமாய் இருக்க வேண்டும். உடையில் புழுதி இருக்கக்கூடாது. தலை வாரிக்கொள்வதும் வற்புறுத்தப்பட வேண்டும். முடியை எப்படிச் சிங்காரித்துக் கொண்டாலும் பரவாயில்லை, ஆனால் சிகை அலங்காரம் உண்மையான சிகை அலங்காரமாக இருக்க வேண்டும். அதனால்தான் முறைவேலைக் கமாண்டர் மாதம் ஒரு முறை முடி வெட்டும் கருவியுடன் ஒவ்வொரு உறங்கறைக்கும் போவான். முடி கொஞ்சம் அலங்கோலமாய் இருந்தாலும் போதும், கருவியால் முடியை ஒரு புறம் வெட்டி, நாவிதன் கடைக்குப் போகச் சொல்லி விடுவான். ஆகவே எல்லோரும் எப்போதும் தலையை நன்கு வாரிக் கொண்டிருப்பார்கள்.

துப்புரவு பற்றிய இந்தக் கோரிக்கை மிகக் கண்டிப்பாக நிறைவேற்றப்பட வேண்டும். த்ஸெர்ழீன்ஸ்கி கம்யூனை விட்டு விலகிய பின் சுமார் ஆறு மாதங்கள் கழித்து நான் அதைப் பார்வையிடுவதற்காகக் கீவ் நகரிலிருந்து சென்றேன். எல்லோரும் என்னை ஓடிவந்து வரவேற்றார்கள், என்னுடன் கை குலுக்கினார்கள், இனிமையான உறவு நிலவியது. நான் உறங்கறைகளைப் பார்வையிட்டேன். ஏதோ சரியாய் இல்லை என்பதைக் கண்டேன்: என் சிறந்த கமாண்டராய் இருந்த யனேவ்ஸ்கியின் அறையில் புழுதி, கைக்குட்டை தரையில் கிடந்தது. அலமாரியைத் திறந்தேன்—ஒரு குவியல் அழுக்கை வெளியேற்றலாம் போல் இருந்தது. அப்போது நான் ஒரு சீரான குரலில் ஒன்றும் சொல்லவில்லை. உண்மையான குரலில் சொன்னேன்: ''பத்து மணி நேரக் காவல் தண்டனை. வேறு எங்கும் நான் போக மாட்டேன். நாளை துப்புரவை நானே சரி பார்ப்பேன்.'' காலை நாலரை மணிக்கு என்னை அழைத்து வருவதற்காக ஹார்க்கவ் நகருக்குக் கம்யூனிலிருந்து கார் அனுப்பப்பட்டது. கம்யூனை அடைந்ததும் எங்கும் சிறு தூசி கூட இல்லை. ''எப்போது துப்புரவு செய்தீர்கள்?'' என்று கேட்டேன். ''நாங்கள் தூங்கவில்லை'' என்றார்கள் பையன்கள். எனக்குப் புரிந்தது, என் கோரிக்கைகள் இத்தகையவை, மற்றவரின் கோரிக்கைகள் வேறானவை.

கோரிக்கைகளை அவர் சற்றுக் குறைத்தார், அவ்வளவுதான், ஒழுங்கு இல்லை, பாங்கு இல்லை. இவை எல்லாவற்றையும் நினைவு வைத்துக்கொள்ள வேண்டும். வகுப்பில் பாடம் நடக்கும் போது முறைவேலைக் கமாண்டர் ஆசிரியரிடம், ''எங்கள் வகுப்பறையின் துப்புரவு உங்களுக்குத் திருப்தி அளிக்கிறதா?'' என்று முதலில் கேட்பான்.

ஆசிரியரின் நிலைமை கடினமானது. ''திருப்தி அளிக்கிறது'' என்று அவர் சொன்னால் முறைவேலைக் கமாண்டர் ஆயிரம் குறைகள் கண்டுபிடிப்பான். ஆசிரியருக்குத் திருப்தியாம், ஆனால் அங்கே அழுக்கு, ஒரு மாணவன் நகங்களைக் கத்தரித்துக் கொள்ளவில்லை, சாய்வு மேஜைமேல் கீறல்கள். எனவே ஒவ்வோர் ஆசிரியரும் வகுப்பறை துப்புரவாய் இருக்க வேண்டும் என்று விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் கோரினார்.

கச்சிதமாக உடை அணியாத ஆசிரியரை நான் வகுப்புக்குள் விடுவதில்லை. எனவே நல்லுடை அணிந்து வேலைக்கு வருவது எங்கள் கம்யூனில் வழக்கம் ஆகிவிட்டது. நானும் என்னிடம் இருந்த சிறந்த உடையை அணிந்து கொண்டு வேலைக்குப் போவேன். எனவே எங்கள் எல்லா ஆசிரியர்களும் பொறியாளரும் கட்டிடக் கலைஞரும் பகட்டாக உடை அணிந்திருந்தார்கள்.

இவை எல்லாம் மிக அவசியமானவை. உதாரணமாக, உணவு மேஜையை எடுத்துக்கொள்வோம். இதன்மேல் மெழுகுச் சீலையை விரிக்கலாம்—நல்லது, சுகாதாரத்துக்கு ஏற்றது. அதன் மேல் எதை வேண்டுமானாலும் வைக்கலாம். அப்புறம் கழுவினால் துப்புரவு ஆகிவிடும். இல்லை. வெள்ளை மேஜை விரிப்பு தான் மாணவர்களுக்குக் கச்சிதமாகச் சாப்பிடக் கற்பிக்கும். மெழுகுச் சீலையோ, சீர் கெடுக்கும். மேஜை விரிப்பு ஆரம்ப நாட்களில் எப்போதும் அழுக்காய் இருக்கும். எங்கும் கறைகள் படிந்திருக்கும். ஆறு மாதங்களில் அது துப்புரவாக இருக்கத் தொடங்கும். வெள்ளை மேஜை விரிப்பு கொடுக்காவிட்டால், சிந்தாமல் சிதறாமல் துப்புரவாகச் சாப்பிடும் திறமையை மாணவர்களுக்கு ஏற்படுத்த உங்களால் முடியாது.

ஆகவே ஒவ்வோர் அற்ப விஷயத்திலும், ஒவ்வோர் அடியிலும் ஆழ்ந்த கோரிக்கைகள் விடப்பட வேண்டும். பாடப்

புத்தகம், பேஞ, பென்சில் எல்லாம் ஒழுங்காய் இருக்க வேண்டும். கடித்துக் குதறிய பென்சில்—என்ன இது? பென்சில் நேர்த்தியாகச் சீவப்பட்டிருக்க வேண்டும். துருப் பிடித்து, எழுதாமல் இருக்கும் நிப் எதற்கு? மைக்கூட்டில் ஈ ஏன் விழுந்திருக்கிறது? இப்படி எல்லா விஷயங்களிலும் கவனம் செலுத்த வேண்டும். போதனை ஆர்வம் உங்களிடம் இருக்கிறது. அதோடு இந்தக் கோடானு கோடிச் சில்லறை விஷயங்களையும் சேர்த்துக்கொள்ளுங்கள். தனி ஆசிரியனுல் இவற்றைக் கவனிக்க முடியாது. ஆனுல் சமுதாயம் இவற் றைக் கவனித்து இந்த அற்ப விஷயங்களின் மதிப்பை அறி யும்போது இந்த வேலையை நன்கு சமாளிக்க முடியும்.

வாயிலில் துப்பாக்கி பிடித்த மனிதன் நிற்கிறுன். பகட் டான உடை அணிந்திருக்கிறுன். ஒவ்வொருவனும் கால் களைத் தேய்த்துத் துடைக்கும்படி பார்த்துக் கொள்வது அவனுடைய வேலை. வெளியே தரை உலர்ந்திருந்தாலும் சரி, சேருய் இருந்தாலும் சரி, கால்களைத் தேய்த்துத் துடைக் காமல் ஒருவனும் அறைக்குள் வர முடியாது. பாராக்கொடுத் தவாறு நின்று இதைக் கவனிக்கும் கம்யூன் உறுப்பினன் இதை ஏன் கண்காணிக்க வேண்டும் என்று நன்கு அறிவான், ஏனென்ருல் ஒவ்வொரு நாளும் அவன் புழுதியைத் துடைக் கிறுன். வருபவர்கள் கால்களைத் தேய்த்துத் துடைத்த பின் அறைக்குள் போனுல் கம்யூனில் புழுதியே இருக்காது. எனவே, கம்யூன் உறுப்பினர்களுக்கு இதை நினைவுபடுத்தத் தேவையே இல்லை. வெளியாரோ, அடிக்கடி வியப்பு தெரிவிப்பார்கள்.

''நான் துப்புரவான நடை பாதையில் தானே வந்தேன்! நான் எதற்காகக் கால்களைத் தேய்த்துத் துடைக்க வேண் டும்?'' என்பார்கள்.

''ஆனுல் நீங்கள் இரண்டு கிராம் புழுதியை எங்கள் அறைகளுக்குள் கொண்டு வருவீர்களே'' என்று. சிறுவன் விளக்க வேண்டும்.

அல்லது, கைக்குட்டை போன்ற அற்ப விஷயத்தை எடுத்துக் கொள்வோம். மனிதனுக்குத் துப்புரவான கைக் குட்டையைக் கொடுக்காமலும் தினந்தோறும் அதை மாற்ரு மலும் எப்படி இருக்கலாம்? சில குழந்தைகள் விடுதிகளில் கைக்குட்டைகள் மாதம் ஒரு முறையே மாற்றப்படுவதைக் கண்டேன். அதாவது, அழுக்குத் துணியால் மூக்கைத்

துடைத்துக் கொள்ளச் சிறுவர்களுக்கு விசேஷமாகக் கற்பிக்கிறார்கள். பார்க்கப் போனாலோ, இது அற்ப விஷயம், சில காசுகள் பெறுமானம் உள்ளது.

படிக்கத்தை எடுத்துக் கொள்வோம். ஒவ்வொரு மூலையிலும் படிக்கங்கள் வைப்பது துப்புரவுக் கலையின் பெருத்த சாதனையாகத் தோன்றும். ஆனால் மனிதர்கள் எதற்காகத் துப்ப வேண்டும்? பையன்கள் அப்படித்தான் சொல்லுவார்கள்.

''உனக்குத் துப்ப வேண்டும் போல் இருக்கிறதா? மருத்துவ மனைக்குப் போ. நீ நோயாளி. உனக்கு ஒட்டக நோய் பிடித்திருக்கிறது. உடல்நலம் உள்ளவன் ஒருபோதும் துப்ப மாட்டான்'' என்பார்கள்.

''நான் புகை பிடிக்கிறேன்.''

''நீ என்ன பிரமாதமாகப் புகை பிடிக்கிறாய்! புகைப் பழக்கத்தை விடு. நல்ல புகை பிடிப்பவன் ஒருபோதும் துப்ப மாட்டான்.''

அந்த ஆள் மேற்கொண்டும் துப்பிக்கொண்டிருந்தால் பையன்கள் அவனை மருத்துவரிடம் இழுத்துப் போவார்கள்.

''என்ன விஷயம்?''

''ஓயாமல் துப்புகிறான்.''

வழக்கமாக மருத்துவர் உதவுவார், இது வெறும் மறிவினைதான் என்று துப்புபவனுக்கு விளக்குவார்.

குழந்தைகள் இல்லங்களில் துப்புவதற்கான படிக்கங்கள் வைத்திருப்பதைக் கண்டேன். இவை துப்பக் கூடிய இடங்களைக் குறிக்கின்றனவே தவிர வேறு இல்லை. படிக்கத்தின் பக்கத்தில் உள்ள சுவர் முழுவதும் ஒரே எச்சில்.

சமுதாயத்தின் வாழ்க்கையில் இந்த மாதிரிச் சில்லறை விஷயங்கள் ஏராளம். சமுதாயத்தில் இருக்க வேண்டிய பழகுமுறை அழகியல் இவற்றாலேயே அமைகிறது. துப்பாத பையன், இரு விரல்களால் மூக்கைச் சுத்தப்படுத்தும் பழக்கம் இல்லாத பையன், போதனையால் பண்பட்டவன். கோட்பாடு வகைப்பட்ட இந்தச் சில்லறை விஷயங்கள் முடிவுவரை இட்டுச் செல்லப்பட வேண்டும். அதோடு, இவற்றைப் பற்றி முன்கூட்டிக் கண்டிப்பாக யோசனை செய்து இவற்றை எவையேனும் பொதுக் கோட்பாடுகளுடன் ஒருங்கிசைப்பதும் அவசியம். மிகப் பல சில்லறை விஷயங்கள் இத்தகையவை.

அவை எல்லாவற்றையும் இங்கே விவரிக்க முடியாது. ஆனால் இவை யாவும் அழகாகவும் செவ்வையாகவும் சமுதாயத்தின் பொது இயக்கத்துடன் இணைந்தும் நிறைவேற்றப்பட முடியும்.

இத்துடன் நான் முடித்துக் கொள்கிறேன். நானும் என் சக ஊழியர்களும் செய்ததை சோவியத் யூனியனில் மிக நிறையப் பெயர் செய்திருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன். எல்லோரும் இவ்வாறு செய்ய வேண்டும் என்று கோருவதன் அவசியத்தை நான் உணர்கிறேன். அதாவது, இத்தகைய அடிப்படைக் கருத்துக்களைப் பரப்புவது அவசியம் என்று உணர்கிறேன். மற்றவர்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம் இது ஒன்றுதான். நான் பரப்ப விரும்பும் கருத்துக்கள் என் சொந்தக் கருத்துக்கள் அல்ல. சோவியத் யூனியனின் மிகப் பல போதனை இயல் அறிஞர்கள் கொண்டிருக்கும் கருத்துக்கள் இவை.

இவற்றை முறையாகத் தொகுப்பதும் அவசியம் என்று நான் கருதுகிறேன். நம்முடைய பல பள்ளிகளில் மிக அழகான சோதனைகள் நடப்பதை நானே கண்டேன். நம் நாட்டில் நேர்த்தியான சமுதாயங்கள் உள்ளன. இவை மிக நன்றாக ஒழுங்கமைந்தவை, மையமும் பாங்கும் எழிலும் கொண்டவை. இந்த அனுபவத்தை முறையாகத் தொகுப்பது அவசியம் என்று நான் எண்ணுகிறேன். இந்த அனுபவம், சோவியத் போதனை இயலின் இருபது ஆண்டுக் காலப் பெரிய அனுபவம், வீணாகிவிட்டால் அது வருந்தத் தக்கது ஆகும். அதனால்தான் முடிந்தவரை அதிகமாக எழுதுவது என் கடமை என்று நினைக்கிறேன். மிக அடிக்கடி நான் குழப்புகிறேன், தவறு செய்கிறேன் போலும். ஆயினும் இந்தக் காரியத்தை மேல் நடத்த வேண்டும். சோவியத் போதனை இயல் அனுபவத்தை மேலும் மேலும் பரப்ப வேண்டும்.

கல்வித்துறை மக்கள் கமிஸாரக ஊழியர்களே, இந்த அனுபவத்தைத் திரட்டித் தொகுக்கவும் சிறந்த சோவியத் போதனை நிலையங்கள் பற்றிப் பிரசாரம் செய்யவும் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்வது சிறப்பாக உங்கள் கடமை என்று நான் கருதுகிறேன்.

# சோவியத் பள்ளியில் போதனை குறித்த பிரச்சினைகள்

வழக்கமாக, யாரேனும் பள்ளிச் சிறுவன் குடும்பத்தையோ, ஆசிரியர்களையோ, மிலீஷியா உறுப்புக்களையோ ஏதேனும் தவறான செயலால் வருத்தத்துக்கு உள்ளாக்கி விட்டால், ஒரே மாதிரியான வாதப் பிரதிவாதங்கள் தொடங்கி விடும்:

''அட, பள்ளிக்கூடத்தில் இளங் கம்யூனிஸ்டுகள் நிறுவனம் ஒழுங்காக வேலை செய்யவில்லை என்கிறேன்.''

''முன்னோடிச் சிறுவர் நிறுவனமோ? அதுவும் வேலை செய்யத் திறன் இல்லாதது...''

''அது சரி, பள்ளி இயக்குநர் என்ன செய்கிறார்? அவர் வெறுமே தலைமை நிர்வாகியாகவே வேலை செய்கிறார். நிதி வரவு செலவு, வெப்ப அமைப்பு, செப்பனிடுதல் போன்ற நிர்வாக வேலைகளிலேயே அவருடைய நாள் முழுவதும் கழிந்து விடுகிறது. கட்டுப்பாட்டுக்கு யார் பொறுப்பு ஏற்பது?''

''தாயார் தகப்பனும் ரொம்ப நல்லவர்கள் தாம்! அவர்களால் எதற்கும் பயன் இல்லை.''

''கேளுங்கள், ஆசிரியர்கள் மட்டும் பயன் உள்ளவர்களோ? பாட நோட்டுப் புத்தகங்களிலேயே மூழ்கிக் கிடக்கிறார்களே தவிர, போதனையில் கவனம் செலுத்துவதே இல்லை.''

சோவியத் பள்ளிக்கு மீண்டும் மதிப்பு ஏற்படுத்துவதும் கையலாகாதது என்ற நியாயமற்ற குற்றச் சாட்டிலிருந்து அதை விடுவிப்பதும் அவசியம்.

ஒரு விஷயத்தை எவ்வித மிகைக் கூற்றும் இல்லாமல் சொல்ல முடியும். ஏதாவது வருந்தத்தக்க நிகழ்ச்சி நடந்து, குற்றச் சட்டத் தொகுப்பின் ''உதவியை'' நாட வேண்டி

வரும்போதுதான் போதனை பற்றிய பிரச்சினைகள் வழக்க மாக மேல் மட்டத்தில் மிதக்கின்றன. கெட்ட நிகழ்ச்சிகள் இல்லாவிட்டால், பள்ளி மாணவன் டிராம் வண்டியின் படிப் பலகையிலிருந்து விழுந்து சக்கரங்களுக்கு அடியில் மாட்டிக் கொள்ளாவிட்டால், கவணிலிருந்து கிளம்பிய கல் தோழ னின் கண்ணைக் காயப்படுத்தவில்லை என்றால், போதனை பற்றிய பிரச்சினைகளை ஒருவரும். நினைப்பதில்லை. ஒழுங்கான நடத்தைப் பயிற்சி வேலையின் முறை இயல், பள்ளிக் கல்வி போதனை இயலின் மற்ற எந்தப் பிரிவையும் விடக் குறை வாக ஆராய்ந்து வகுக்கப்பட்டிருக்கிறது. நடத்தைப் பயிற்சி வேலை, பள்ளிக் கல்வித் தேர்ச்சியை மேம்படுத்துவதற்கான துணைக்கருவி மட்டுமே என்று சித்தாந்தகர்த்தர்கள் எண் ணுகிறார்கள்.

நடைமுறை போதனை ஆசிரியர்கள், நன்கு இசைந்த போதனை முறையாக இணையாத ஏராளமான அனுபவ உத்தி களில் சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். சோவியத் சிறுவனின் சித்த சக்தியை போதனை வாயிலாக வளர்ப்பது, அவனுடைய பழகுமுறை பற்றிய உள்ளார்ந்த விதித் தொகுப்பை உருவாக்குவது ஆகியவற்றுக்கான அருமையான உத்திகளை நம் சிறந்த ஆசிரியர்கள் அறிவார்கள். இந்தத் துறையில் தனிவகைக் கண்டுபிடிப்புக்களையும் அக்கறைக்குரிய ஆரம்ப முயற்சிகளையும் அவர்கள் செய்திருக்கிறார்கள். ஆனால் இவ் வாறு சோதனைகள் செய்யும் முயற்சிகளை மக்கள் கல்வித் துறை அலுவலகங்கள் அவ்வளவாக ஊக்கப்படுத்துவது இல்லை. இவற்றை அவை மிக மிகக் குறைவாகவே ஆராய்ந் திருக்கின்றன.

பள்ளியில் போதனைச் செயல் முறை திட்டவட்டமாக வரையறுக்கப் படாமை, ஆசிரியர்களின் சக்திகள் சிதறுவது, துணிவாக முன்முயற்சி செய்வதில் அச்சம் ஆகியவை, இயல் பான திறமை வாய்ந்த ஆசிரியர்களின் உழைப்பைக் கூடப் பயன் குறைந்தவை ஆக்கி விடுகின்றன. அசாதாரண போதனைத் தேர்ச்சி அற்றவர்களும் தனிமையில் வேலை செய்ப வர்களும்ஆனவகுப்புஆசிரியர்களின்—நம் நாட்டில் இவர்கள் லட்சக் கணக்கில் இருக்கிறார்கள்—நிலைமையோ, இன்னும் மோசமானது. இவர்கள் தேவையான போதனை முறையை அறிய மாட்டாமல், தங்கள் மாணவர்கள் மீது செல்வாக்கு

அற்றவர்களாக இருக்கிறார்கள். மார்க்ஸீய-லெனினீயத்தின் பொதுவான போதனைக் கருத்துக்களும் லெனினுடைய உரைகளும் போதனைத் துறையில் முற்றிலும் தெளிவான கொள்கைப் போக்கைக் காட்டியுள்ளன. போதனை இயலில் படைப்புக்கு அவை விரிவாக இடம் அளிக்கின்றன. ஆயினும், சுறுசுறுப்பற்ற பேசாமடந்தைகளான நம் சித்தாந்தகர்த்தர்கள், போதனை இயல் தவறுகளை சாத்துவிக முகத் தோற்றத்துடன் ''அசை போடுவதும்'' போதனை இயல் இலக்கியத்திலிருந்து போலி விஞ்ஞானக் குப்பையைக் கழிவிரக்கத்துடன் கிளறுவதுமாக இருக்கிறார்களே தவிர, பள்ளி நடைமுறைக்குப் பயன் அளிக்கும் உபயோகமான கருத்துக்களை இது வரை வெளியிடவில்லை. ஒன்றித்த முறை இயலைப் பின்பற்றுவதும், ''தன்'' வகுப்புக்கு மட்டும் இன்றி, மொத்தத்தில் பள்ளி முழுவதற்கும் பொறுப்பு ஏற்பதுமான ஒற்றுமையுள்ள ஆசிரியர் சமுதாயம் இல்லாவிட்டால் பள்ளியின் முறையான வேலை நடக்க முடியாது என்பதைப் புரிந்து கொள்ள ஆசிரியர்களுக்கு இந்தச் சித்தாந்தகர்த்தர்கள் இது வரை உதவவில்லை.

நம்முடைய பள்ளிகளின் வலைப்பின்னல் குறித்து நாடு நியாயமாகவே பெருமைப் படலாம். ஆனால் போதனைத்துறையில் இது தனித்த ஆசிரியர்களின் திரளாகவும் மாணவர் துறையில் தனித் தனியே பிரிந்த வகுப்புக்களின் தொகுப்பாகவும் விளங்குகிறது. பொதுவான பள்ளிக் கட்டிடத்தில் அருகருகே இருப்பதால் இயந்திரரீதியாக மட்டுமே இணைந்தவை இவை. ஒன்றித்த சமுதாயமாக, முழுமையான நிலையமாக விளங்கும் பள்ளி, நம் நாட்டில் ஆசிரியர்களோ, குழந்தைகளோ, குடும்பங்களோ சோவியத் சமூகப் பிரதிநிதிகளோ அறியாத ஒன்று.

உதாரணமாக, மாஸ்கோவில் உள்ள 575ம் எண் பள்ளியில் ஒரு பையன் படித்தால், தனிப்பட்ட பெயர் இல்லாத இந்த எண் அவன் உள்ளத்தில் எவ்விதக் கிளர்ச்சியையும் ஏற்படுத்துவது இல்லை. சம வயதினரின் மிகப் பெரிய கூட்டத்தில் (பள்ளியில் உடன் படிப்பவர்களின் எண்ணிக்கை அடிக்கடி இரண்டாயிரத்தை எட்டுகிறது, அல்லவா?) மாணவன் அமிழ்ந்து விடுகிறான். மாணவன் அறிந்தது அவன் வகுப்பு ஒன்றுதான். வகுப்பு சமுதாயத்துக்கும் சோவியத் சமூகத்

துக்கும் இடையே இணைப்புக் கணுவாக—அதிக விசாலமான சமுதாயமாக—இல்லை. பள்ளியே ஒன்றித்த சமூக உறுப்பாக இருப்பதில்லை.

சில்லறை விஷயங்களில் சிதறி இருக்கும் போதனை இயல் சித்தாந்தத்துக்கு இந்த அடிப்படைப் பிரச்சினைகளில் ஈடுபட நேரம் இல்லை. ஒவ்வொரு மாணவனும் தனது வகுப்பின் சிறு வட்டத்தின் அக்கறைகளிலேயே ஆழ்ந்திருக்காமல் பள்ளி அனைத்தின் குறிக்கோள்களிலும் உற்சாகம் காட்ட வேண்டும், பள்ளி அனைத்தின் மகிழ்ச்சியை அனுபவிக்க வேண்டும் என்பதோ கண்கூடு.

ஒரு பள்ளியில் படிப்பவர்களின் எண்ணிக்கை வழக்கமாக ஆயிரத்துக்கு மேல் போகக் கூடாது. பிரமாண்டமான பள்ளிகளைச் சிறு பகுதிகளாகப் பிரிக்க வேண்டும். அப்போதுதான் ஒவ்வொரு பள்ளிக்கும் தனிப் பண்பு இருக்கும், குழந்தைகள் ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்வார்கள். அப்போதுதான் ஆசிரியர்கள் மாணவர்களைத் தாழ்வாரத்தில் அடையாளம் கண்டு கொள்வார்கள். பள்ளி மாணவர்கள் சமுதாயம் அனைத்தும் பள்ளிக் கொண்டாட்டங்களிலும் இலக்கிய-கலை நிகழ்ச்சிகளிலும் வட்டங்களிலும் நட்புடன் கலந்து பழகும். சமுதாயம் அனைத்தினதும் கூட்டான படைப்பு வேலையில் பரஸ்பர நட்பும் மரியாதையும் வலுவடையும். ஒன்றித்த பள்ளி சமுதாயத்தை அமைத்தால்தான், ஒழுங்கும் கட்டுப்பாடும் ஏற்படுத்தும் போதனைக் காரணி என்ற முறையில் பொது அபிப்பிராயத்தின் பெரு விறலைக் குழந்தைகளின் உணர்வில் பதிய வைக்க முடியும்.

குழந்தைகளைத் தனித் தனியே அணுகுவது என்றால், முரண்டு பண்ணுகிற தனித்த குழந்தையுடன் பாடுபடுவது என்று அர்த்தம் ஆகாது. தனித் தனியே அணுகுவது என்ற கோஷத்துடன் கட்டுப்பெட்டித்தனமான, தனிநபர் போதனையை வலிந்து திணிப்பது சரி அல்ல. மாணவனின் குறைகளுக்கு இடம் கொடுத்து அவனது முரண்டுகளுக்கெல்லாம் கண்மூடித் தனமாக விட்டுக் கொடுப்பவன், மாணவனின் சுபாவத்தைச் சீர்படுத்தி மாற்றுவதற்குப் பதிலாக, அவனுக்கு ஒத்துப்பாடுவதும் அவனைக் கொஞ்சிச் சீராட்டுவதுமாக இருப்பவன், கையாலாகாத ஆசிரியன். பையன் சமூகத்துக்குக் குறித்த வகையில் கடமைப்பட்டவன், தன் செயல்

களுக்குப் பொறுப்பு உள்ளவன். அவனுடைய தனித்தன்மை இந்தத் தேவைகளை நிறைவேற்றக் கூடியது ஆகும்படிக் கண்டிப்பாகக் கோருவது அவசியம். ஒரு சிறுவனைத் தனிப் பட்ட முறையில் அணுகுவதன் அர்த்தம், தன்னுடைய தனிப்பட்ட சிறப்பு இயல்புகளுக்கு ஏற்ப, தனது சமுதாயத் தின் விசுவாசமுள்ள, தகுதி வாய்ந்த உறுப்பினனாகவும் சோவியத் அரசின் குடிமகனாகவும் அவன் விளங்குமாறு செய்வது தான்.

நல்ல கட்டுப்பாட்டை நினைத்துப் பெருமூச்சு விடும் அதே சமயத்தில், கட்டுப்பாடு ஏற்படுத்தும் செயல்முறையை மேற்கொள்ள நாம் தயங்குகிறோம். உள்ளதைச் சொன்னால், அபகீர்த்தி வாய்ந்த சுயகட்டுப்பாடு என்பதன்மேல் நம்மு டைய நம்பிக்கை இன்னும் முற்றிலும் அகன்றுவிடவில்லை. பள்ளி, முதல் நாளிலிருந்தே சோவியத் சமூகத்தின் கண்டிப் பான, விவாதத்துக்கு இடம் அற்ற கோரிக்கைகளை மாண வனுக்குத் தெரிவித்துவிட வேண்டும். பழகுமுறை விதிகளை மாணவனுக்குப் புரிய வைக்க வேண்டும். என்ன செய்யலாம், என்ன செய்யக் கூடாது, எது பாராட்டுக்கு உரியது, எது தண்டனைக்கு உரியது என்பதை அப்போதுதான் அவன் தெரிந்து கொள்வான்.

பெரு மதிப்புக்கும் அன்புக்கும் உரிய பள்ளி சமுதாயத் தினது பொது அபிப்பிராயத்தின் கண்காணிப்பு, மாணவ னுடைய சுபாவத்திற்கு உரம் ஊட்டும், சித்த சக்தியை வளர்க்கும், சொந்த நடத்தையில் சமூகத்துக்குப் பயன் உள்ள பழக்கங்களைப் புகுத்தும். மாணவன் பள்ளியின் மீதும் அந்த நல்ல நண்பர்கள் சமுதாயத்தின் உறுப்பினன் என்ற முறையில் தன் மீதும் பெருமை கொள்வான். அப்போது சிறுவன் வெளிச் சூழலுக்கு ஏற்றவாறு—நல்ல சிறுவர்களுடன் இருக் கையில் நல்லவனாகவும் சண்டை போடும் பையன்களுடன் இருக்கையில் போக்கிரியாகவும்—நடந்து கொள்ள மாட் டான். எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை அவன் அறிந்திருப்பான். தன் மரியாதைக்கு உரிய சமுதாயம் தன் எந்தச் செயலை ஆதரிக்கும், எதைக் கண்டிக்கும் என்பது அவனுக்குத் தெரிந்திருக்கும். சிறுவனிடம் உறுதியும் உரம் பெற்ற, வளையாத சுபாவமும் இவ்வாறு உருவாகின்றன. குடிமகனுக்கு உரிய கௌரவத்தையும் கடமையையும் பற்றிய

உணர்வும் மற்றவர்கள் விஷயத்தில் தனக்கு உள்ள பொறுப்பு பற்றிய அறிவும் அவனுக்கு ஏற்படுகின்றன.

குழந்தைகள் சமுதாயத்தில் பொது அபிப்பிராயத்தின் சக்தி முற்றிலும் ஸ்தூலமான, தொட்டு உணரக்கூடிய போதனைக் கருவி ஆகும். உதாரணமாக, உள்துறை மக்கள் கமிஸாரகத்தைச் சேர்ந்த கம்யூனுக்கு நான் தலைவனாக இருந்த போது, முன்னர் திருடர்களாகவும் அகதிகளாகவும் இருந்த ஐம்பது மாணவர்களைக் கிரமாத்தோர்ஸ்க் தொழிற்சாலைத் திறப்பு விழாவுக்குத் தயங்காமல் அனுப்பினேன். தங்கள்மீது நம்பிக்கையும் மரியாதையும் வைத்திருக்கும் கம்யூனுடைய மதிப்பை அவர்கள் குலைக்க மாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். எங்கள் கம்யூன் உறுப்பினர்கள் வழக்கமாக டிராம் வண்டியில் உட்காருவதில்லை. ஏனென்றால் வண்டியில் இருக்கை அளிக்கத் தகுந்தவர் யாராவது கட்டாயம் இருப்பார்கள். முதியவர்களுக்கு மரியாதை காட்ட வேண்டும், பலவீனர்களுக்கு உதவ வேண்டும் என்பது கம்யூனின் ஒழுக்க நெறி போதனையின் ஒரு விதி. இந்த விதியை ஒரு கம்யூன் உறுப்பினன் மீறிவிட்டதாக யாரேனும் சான்று காட்டினால் அவன் வெட்கத்தால் தவித்துப் போவான்.

பள்ளியில் ஒழுங்கமைந்த பொது அபிப்பிராயம் இல்லாததுதான் கீழ்ப்படியாத மாணவர்கள் பற்றிப் பின்வருவது போன்ற தன்மைச் சித்திரிப்பைத் தந்து தங்களை அவமதித்துக் கொள்ளும் ஆசிரியர்களின் ஏலாமைக்குக் காரணமாய் இருக்க வேண்டும்:

''இடைஞ்சல் செய்கிறான், குப்பை போடுகிறான், கண்ணாடியை உடைக்கிறான், திட்டுகிறான், தோழர்களின் முகங்களில் வண்ணம் தீற்றுகிறான், தன் போக்கிரி நடத்தையால் மாணவர்களை மட்டும் அல்ல, ஆசிரியர்களையும் கெடுக்கிறான்...''

இத்தகைய சான்றிதழ்கள் அவதூறுகள் போன்று தொனிக்கின்றன. நாடக வில்லன் போல வருணிக்கப்பட்டிருக்கும் பள்ளி மாணவன், ஆசிரியர்களைக் கூடக் கெடுக்கிறானும்.

தாங்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள் என்று எழுதிக் கையொப்பம் இடும் போதகர்கள் உண்மையில் தங்கள் தண்டனைத் தீர்ப்பை எழுதுகிறார்கள். போதனை இயல் சித்தாந்த கர்த்தர்களோ, பள்ளியின் அன்றாட நடப்பில் போதனை

நடவடிக்கைகளுக்கும் அடக்குமுறைக்கும் உள்ள பரஸ்பரப் பாதிப்பு பற்றிய பிரச்சினையை ஆராய்ந்து முறைப்படுத்தத் துணிவதில்லை. தேவையான போது மேற்கொள்ளப்படும் அடக்குமுறை, போதிப்பு போன்றே முக்கியமானது.

விந்தையான சேதி என்னவென்றால், போதனை இயலார் ''தண்டனை'' என்ற சொல்லையே அஞ்சுகிறார்கள். நம் பள்ளி களில் கண்டனம் கூட வழக்கில் இல்லை. ''எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாமலே கட்டுப்பாட்டை மேம்படுத்த முடிந்தால் அற்புதமாய் இருக்கும்!'' என்பதே போதனை இயல் மனீலொவ்கள்* கனவு காணும் ஆதர்ச நிலைமை.

இம்மாதிரிப் போலி மனிதாபிமானம் நல்லது என்று சித்தாந்தகர்த்தர்களால் இன்றளவும் எண்ணப்பட்டு வரு கிறது. பள்ளியிலோ கோட்பாடு அற்ற இந்தக் கொஞ்சல் பெருத்த தீங்கு விளைக்கிறது. தண்டனையின்பால் போதனை இயலார் காட்டும் அச்சத்துக்குக் காரணம், ஜார்காலப் பள்ளியின் வழக்கங்கள் மறுபடி தளிர்த்துவிடுமோ என்ற பயம் தான். ஆனால், அறிவார்ந்த தண்டனையை அறிவார்ந்த முறையில் மேற்கொள்வதால் ஜார் காலப் பள்ளியின் கோரங் கள் மீண்டும் தலைதூக்கும் அபாயம் ஏற்படும் என்று யார் சொன்னது? ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் இடையே, பள்ளிச் சிறுவர்களுக்கும் பள்ளி நிர்வாகிகளுக்கும் இடையே சமுதாய அகாதமும் முரண்பாடும் நம் காலத்தில் இல்லையே. பழங்காலப் பள்ளியில் தண்டனை பலாத்காரமாக மாறிற்று. பிணக்கைத் தீர்ப்பதற்குப் பதில் புண்ணை உள்ளே செலுத்தி அதை இன்னும் தீவிரப்படுத்திற்று. மனிதன் என்ற முறையில் மாணவனுடைய தன்மதிப்பைக் கொடுமையாக இழித்து அவமானப்படுத்துவதே பழங்காலத் தண்டனையின் தன்மையாக இருந்தது. நம் காலத்திலோ தண்டனை முறை இதற்கு மாறானது. எனவே அது சந்தேகமின்றிப் பயனுள்ள போதனைப் பணி ஆற்ற வல்லது.

---

* **மனீலொவ்**—ருஷ்ய எழுத்தாளர் கோகலின் ''இறந்த ஆன்மாக்கள்'' என்னும் நவீனத்தில் வரும் ஒரு பாத்திரம். வெறும் கனவு காண்பதையும் செயலற்ற நல்ல உள்ளத்தை யும் குறிக்கும் சின்னம்.

அறிவுக்கிசைந்த தண்டனை முறை சட்டபூர்வமானது மட்டும் இன்றி அவசியமானதுங்கூட. உறுதியான மனித சுபாவத்தை உருவாக்க அது உதவும். பொறுப்பு உணர்ச்சியை ஊட்டும். சித்த சக்திக்கும் மனிதனது தன்மதிப்புக்கும் பகட்டு ஆசைகளை எதிர்த்துப் போராடி வெல்லும் திறமைக்கும் அது பயிற்சி அளிக்கும்.

பள்ளி சமுதாயத்தின் சமூக அடிப்படையைச் செயலில் ஈடுபடுத்துவதற்கும் போதனை நடவடிக்கைகளையும் தண்டனை முறைகளையும் பொருத்தமாக இணைப்பதற்கும் பள்ளியில் போதனை மையத்தைக் கட்டாயமாக வலுப்படுத்துவது அவசியம். பள்ளியில் யாவரிலும் பொறுப்பு வாய்ந்த மனிதர், அரசு அதிகாரம் பெற்ற தலைவர் என்ற முறையில் இயக்குநரே இத்தகைய மையமாக விளங்க முடியும். நம் பள்ளி இயக்குநர்கள் நிர்வாக வேலைகளில் மட்டு மீறிய கவனம் செலுத்துகிறார்கள். உண்மையிலோ, இயக்குநர் முதன்மையாகப் பள்ளியின் முழு அதிகாரம் பெற்ற தனிப் போதனைத் தலைவராக இருக்க வேண்டும். மற்றப் பள்ளி ஊழியர்கள் அனைவரும் அவருடைய நேரடியான தலைமையில், அவருடைய நேர்முக உத்தரவுப்படி செயலாற்ற வேண்டும்.

ஆனால் பள்ளி இயக்குநரின் போதனை இயல் நிபுணத்துவம் வெறும் நிர்வாகத் திறமையில் அடங்கி விடாது. கண்டிப்பான மேலாண்மையையும் பொறுப்பையும் வகிக்கும் அதே சமயத்தில் பள்ளியின் சமூக சக்திகளுக்கும் பொது அபிப்பிராயத்துக்கும் ஆசிரியர் சமுதாயத்துக்கும் பள்ளிச் செய்தித் தாளுக்கும் தனி நபர்களின் முன்முயற்சிக்கும் விரிவான பள்ளிச் சுய நிர்வாக அமைப்புக்கும் நிறைய இடம் அளிப்பதில்தான் இயக்குநரின் நிபுணத்துவம் அடங்கி இருக்கிறது.

இப்பொழுது—அதுவும் மேல் வகுப்புக்களில் மட்டுமே—நடப்பில் இருக்கும் சட்டாம்பிள்ளை முறை, பள்ளியின் அன்றாட வாழ்க்கையை ஒழுங்கமைப்பதில் மாணவர்கள் பயனுள்ள பங்காற்ற வகை செய்ய முடியாது. சுய நிர்வாகத்தை மிகுந்த பயன் விளைக்கும் போதனைக் கருவியாகச் செய்ய முடியும்.

பள்ளிப் பொது அபிப்பிராயமும் பள்ளி அனைத்தின் சுயநிர்வாக உறுப்புக்களாலும் ஆதரிக்கப்படும் பள்ளி

அனைத்தினதும் கட்டுப்பாடும் இருந்தால் ஆசிரியர்களின் போதனை வேலை கணிசமாக எளிதாகும்.

பள்ளிச் சுய நிர்வாக உறுப்புக்களை வழிகாட்டி நடத்துவது இயக்குநரின் முக்கியப் பொறுப்பாக இருக்க வேண்டும். எப்போதும் முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொள்வது, ''பெரிய மனிதத் தனம்'' உள்ள ஆழ்ந்த போக்கைக் கடைப்பிடிப்பது என்ற பழைய ஆசிரியத் தோரணையை விட்டு ஒழிக்க வேண்டும். இவ்வாறு செய்வது இப்போது முன்னைக் காட்டிலும் எளிது. ஏனென்றால் நம்முடைய முன்னோடிச் சிறுவர் நிறுவனங்கள் சமூகக் குறிக்கோளுக்குப் பொருத்தமான எத்தனையோ நல்ல விஷயங்களைத் திட்டமிட்டு நடப்புக்குக் கொண்டு வந்திருக்கின்றன. விளையாட்டுக்களாலும் அடையாளச் சின்னங்கள், கொடிகள், இசை போன்ற வெளிப் பகட்டுக்களாலும் வாழ்க்கையை அழகுபடுத்தக் குழந்தைகளுக்கு இயல்பாய் எழும் தேவையை இவை நிறைவேற்றுகின்றன. புனைவு ஆற்றல் உள்ள போதனை ஆசிரியனுக்குச் சால்பு வாய்ந்த பெரிய செயற்களம் இங்கே இருக்கிறது.

கோடிக்கணக்கான மாணவர்களிடையே உணர்வுபூர்வமான கட்டுப்பாட்டை வலுப்படுத்தப் பெருத்த முயற்சிகள் எடுத்துக் கொள்ளும்படி சோவியத் பள்ளியிடம் கோருவதற்கு நம் தாய்நாட்டுக்கு உரிமை உண்டு.

# பள்ளியில் சுபாவத்தை உருவாக்குதல்*

''சோவியத் பள்ளியில் போதனை குறித்த பிரச்சினைகள்'' என்ற கட்டுரை, ''பிராவ்தா,'' மார்ச்சு 23ந் தேதி இதழில் விவாதத்துக்கு உரிய விஷயமாக வெளியிடப்பட்டது. அது பற்றி மிகப் பலர் கருத்து தெரிவித்திருக்கிறார்கள். கடிதங்களும் கட்டுரைகளும் இன்னும் வந்த வண்ணமாய் இருக்கின்றன. முதன்மையாகப் பெற்றோர்களும் ஆசிரியர்களும் கட்சி ஊழியர்களும் பள்ளி இயக்குநர்களும் எழுதுகிறார்கள். போதனைப் பிரச்சினைகளில் முதன்மையாக அக்கறை கொள்ள வேண்டியவர்களான போதனை இயல் பேராசிரியர்கள் மட்டும் ஒரு கருத்தையும் வெளியிடவில்லை. மிக வியப்புக்கு உரிய இந்த மௌனத்தின் காரணம் யாதாய் இருக்க முடியும்?

நமது பள்ளியினதும் நம் குழந்தைகளுடையவும் மேம்பாட்டை விரும்புபவர்கள் மேற்குறித்த கட்டுரை பற்றிக் கருத்து தெரிவித்திருப்பதற்கு நாம் மகிழ வேண்டும். போதனைப் பிரச்சினைகள் பற்றிய ஆழ்ந்த புரிவும் நம் பள்ளியின் எதார்த்த நிலை பற்றிய அறிவும் அதைத் தெளிவாகப் பகுத்து ஆராயும் திறனும் இந்தக் கருத்துக்களில் காணப்படுவதை முதன்மையாகக் குறிப்பிட வேண்டும். பெருந்தொகையான கடிதங்களில் உள்ள குறிப்புக்களில், போதனை இயல் சஞ்சிகைகளின் பற்பல இலக்கியப் பயிற்சிகளில் உள்ளவற்றை விட அதிகப் பயனுள்ள சிந்தனையும் சோவியத் மூதறிவும் புலப்படுகின்றன.

---

* கட்டுரை ஓரளவு சுருக்கத்துடன் வெளியிடப்படுகிறது.

பள்ளி போதனை குறித்த பிரச்சினைகள் மீது நமது சமூகத்தில் கருத்து வேற்றுமை இல்லை என்று இந்தக் கடிதங்களைக் கொண்டு தயக்கம் இன்றிக் கூறலாம். நம்முடைய பள்ளியில் சிறந்த வேலைக்கு வேண்டிய எல்லா வாய்ப்புக்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்பதையும் நம் குழந்தைகள் ஆசிரியர்களுக்குச் சிறந்த மாணவர்களாக விளங்குகிறார்கள் என்பதையும் எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால், இவ்வளவு நல்ல நிலைமைகள் இருந்தும்கூட நமது பள்ளியில் போதனை வேலை அடிக்கடி மோசமாகச் செய்யப்படுகிறது என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

நிலைமையை மதிப்பிடுவதில் இத்தகைய ஒருமனப்பாட்டைக் காட்டும் அன்பர்கள் பள்ளி போதனைக்கு வேண்டியவை என்று தாங்கள் எண்ணும் கோரிக்கைகளிலும் மன ஒற்றுமை கொண்டிருக்கிறார்கள். இந்தக் கோரிக்கைகளாவன: ஆசிரியர்களும் மாணவர்களும் அடங்கிய ஒன்றித்த பள்ளி சமுதாயம் அமைய வேண்டும். பிரமாண்டமான பள்ளிகள் சிறு பள்ளிகளாகப் பகுக்கப்பட வேண்டும். போதனை மையம் வலுவாக்கப்பட வேண்டும். மாணவனிடம் கண்டிப்பான கோரிக்கைகள் விடப்பட வேண்டும். சித்த உறுதியும் பொறுப்பும் உருவாக்கப்பட வேண்டும். கண்டிப்பான ஒழுங்கும் கட்டுப்பாடும் தண்டனை முறையும் ஏற்படுத்தப்பட வேண்டும். பள்ளியில் பொது அபிப்பிராயம் ஊக்கப்பட வேண்டும். நாட்டின் சமூக வாழ்வுடன் பள்ளி பெருத்த தொடர்பு கொண்டிருக்க வேண்டும்.

பள்ளி வேலையின் தனித் தனி விவரங்கள் பற்றி மதிப்புயர்ந்த மிகப் பல கருத்துக்கள் இந்தக் கடிதங்களில் வெளியிடப்பட்டுள்ளன. அவை எல்லாவற்றையும் இந்தக் கட்டுரையில் குறிப்பிடுவது நமக்கு இயலாது. உதாரணமாக, படிப்பு முன்னேற்றப் போராட்டத்தில் வெளிப்படையாக மிதமிஞ்சிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுவதாகச் சில அன்பர்கள் எழுதியிருந்தார்கள். போட்டி மனப்பான்மை அலுவலகச் சடங்கு முறையால் உணர்ச்சி அற்றது ஆக்கப் படுவது, தேர்வு முடிவுகள் பற்றிய புள்ளி விவரங்களிலும் அறிக்கைகளிலும் ஈடுபாடு ஆகியவை இந்த மிதமிஞ்சிய நடவடிக்கைகளில் அடங்கும். இவை, கண்ணில் மண் தூவுவதற்கும் தனி மாணவனையும் முழு முழு

வகுப்புக் குழுக்களையும் சீர்கெடுப்பதற்கும் வழி வகுக்கின்றன.

''குழந்தை இயல்'' சித்தாந்தத்தின் அச்சம் சில வேளைகளில் அபத்தமான வடிவத்தை மேற்கொள்வதை வேறு சில அன்பர்கள் சுட்டிக்காட்டி இருந்தார்கள். பையன் சோம்பேறியாய் இருக்கலாம் என்பதை ஆசிரியர்கள் மறுக்கிறார்களாம். பையனை ஆராய்வது பற்றிப் பேச அஞ்சுகிறார்களாம். ஒரு பையனிடம் உண்மையாகவே மட்டமான அல்லது குறைந்த திறமைகள் இருப்பதைப் புறக்கணிக்கிறார்களாம். பையனை வகுப்பில் இரண்டாவது ஆண்டு இருத்தி வைப்பது சில சந்தர்ப்பங்களில் பயனுள்ளதும் இன்றியமையாததும் ஆகும் என்ற எண்ணத்துக்கே இடம் கொடுக்க மறுக்கிறார்களாம்.

இந்தக் குறிப்புக்கள் முற்றிலும் நியாயமானவை. செயலில் சமயோசித சாமர்த்தியம் ஆசிரியனது வேலைக்குத் தேவைப்படுவது போல வேறு எந்த வேலைக்கும் தேவைப்படுவது இல்லை. தனி மாணவர்கள் விஷயத்தில் ஒரே மாதிரியான நடவடிக்கை அனுமதிக்கத் தகாதது. பள்ளி, தற்போது அடிக்கடி காணப்படுவது போன்று, எதனாலும் ஒன்றுபடுத்தப் படாத ''தனிநபர் அணுகுமுறைகளின்'' சிதறிய கும்பலாக மாறி விட வேண்டும் என்பது இதன் அர்த்தம் அல்ல. ஆதர்ச சோவியத் பள்ளிக்கான போராட்டம், ஒரே அச்சில் வார்த்த ''கண்டிப்பான முறைக்கான'' போராட்டம் ஆகிவிடக்கூடாது, நம் பள்ளிகளில் உண்மையான சோவியத் பாங்கு கடைப்பிடிக்கப்படுவதற்கான போராட்டமாக இருக்க வேண்டும்.

தனி மனிதன்பால் நம்முடைய போக்கு, போதனை வேலை தனக்கு முன் வைத்துக் கொள்ளக் கடமைப்பட்ட மாபெரும் குறிக்கோள்கள், சோஷலிஸ மனிதாபிமானம், சோஷலிஸ சமூகத்தின் செயலூக்கமுள்ள ஊழியர்கள் பயிற்றி உருவாக்கப்படுவது, உரம் பெற்றவர்களும் புரட்சிக்கு விசுவாசம் உள்ளவர்களும் மகிழ்வும் கண்டிப்பும் ஒங்கே வாய்ந்தவர்களுமான ஊழியர்களின் முழு முழுத் தலைமுறைகள் பயிற்றி உருவாக்கப்படுவது, இவை எல்லாவற்றையும் புரட்சி வீச்சு இல்லாமல் சாதிப்பது முடியுமா?

போதனை வேலையில் ஆழ்ந்த ஈடுபாடும் ஒருமைப்பாடும் விஞ்ஞான அடிப்படைத் தன்மையும் குறிக்கோளை நோக்கி

நேராக, துடியாக முன்னேறும் போக்கும், சில்லறை விவரங்களில் தர்க்கப் பொருத்தமும் போதிய அளவு இல்லை. அதனுல்தான், ''கற்பனைப் புனைவு'' என்ற வகையில், ''தண்டனை அடிமையை உருவாக்குகிறது'' என்ற பொருளற்ற, தீங்கு விளைக்கும் சூத்திரம் ஒரு காலத்தில் இயற்றப்பட்டது. இதை நடப்பில் சோதித்துச் சரி பார்க்கும் சிரமத்தை ஒருவரும் மேற்கொள்ளவில்லை. அடிமைகளை உருவாக்குவது தண்டனை அல்ல, தான்தோன்றித்தனமும் வரம்பற்ற முரட்டுத்தனமும் தாம். இந்த முரட்டுத்தனந்தான் நம் நாட்டில் சில ஆசிரியர்களுக்குப் போக்கிரிகளை உருவாக்க உதவுகிறது.

தண்டனை பற்றிய பிரச்சினை, பல பள்ளி ஆசிரியர்களின் எண்ணப்படி எல்லாவற்றிலும் கடினமான பிரச்சினை. பழைய பள்ளி நினைவுக்கு வருவதால் இந்தப் பிரச்சினை கடினமாகத் தோன்றுகிறது. போதனைத் துறையில் அடக்குமுறை பற்றிய புதிய அனுபவம் நமக்கு இன்னும் ஏற்படவில்லை.

ஒரு புறம், தண்டனைப் பிரச்சினையில் கோழைத்தனத்தையும் மறு புறம், ஜார் காலப் பள்ளியின் பழைய பாங்கை ஏதேனும் ஒரு வடிவில் கொண்டு வருவதற்கான முயற்சியையும் அறவே விட்டு ஒழிக்க வேண்டும். தண்டனை பற்றிப் பேசத் தொடங்கியதுமே கேட்பவர்களுக்குப் புல்லரிக்கிறது, இரத்தம் குளிர்ந்து உறைந்து போகிறது.

அதிகமாய்ப் போனுல், பள்ளியில் தண்டனை பொருத்தமானதே என்று இவர்கள் ஒப்புக்கொள்வார்கள், ஆனுல், விதி விலக்கான சந்தர்ப்பங்களில்தான் தண்டிக்க வேண்டும் என்றும், தொண்ணூற்றென்பது சத விகிதம் மாணவர்களைத் தண்டிக்கக் கூடாது, அவர்கள் அவ்வளவு நல்லவர்கள் என்றும், முடிவில், நம் நாட்டில் இப்போதும் தண்டிக்கத்தான் செய்கிருர்கள் என்றும், கடிந்துரை, கண்டனம், பெற்ருேருக்கு அழைப்பு முதலியவை இதற்கு எடுத்துக்காட்டுகள் என்றும் இன்னும் பலவாருகவும் சொல்லுவார்கள். விளைவாக, நிலைமை முன் போன்றே இருக்கும்...

பாதிப்பு விளைக்கும் பல நடவடிக்கைகளைக் குறிப்பிடலாம். இவையே தண்டனை ஆகும். தனிமையில் கடிந்து கொள்வது, வகுப்புக்கு முன் கடிந்து கொள்வது, பள்ளிப் பொதுக் கூட்டத்தின் முன் கடிந்து கொள்வது, பள்ளி ஆணைப் பத்திரத்தில் கண்டனம் தெரிவிப்பது, பள்ளிச்

சீட்டைப் பறித்துக் கொள்வது ஆகியவை இத்தகைய நடவடிக்கைகள்.

தண்டனை அளிப்பது மிக நுட்பமான காரியம். அதை ஒவ்வொரு ஆசிரியர் பொறுப்பிலும் விடக் கூடாது. எனவே தண்டிக்கும் உரிமை பள்ளி இயக்குநருக்கு மட்டுமே இருக்க வேண்டும். இது மிகப் பெரிய சுமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் இந்த உரிமை உயர்ந்த அதிகாரியின் கையில் இருப்பதே பெருத்த பயன் உள்ளது. தண்டிப்பதற்கு முன், தனிமையில் உரையாடுவது, தோழர்கள் முன்னிலையில் உரையாடுவது, பொதுக் கூட்டத்தில் விளக்கம் கோருவது முதலிய அடக்குமுறை அற்ற பாதிப்பு நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட வேண்டும். பொதுக் கூட்டம், குறித்த தோழன் குற்றவாளியா அல்லவா என்று தீர்மானிப்பதுடன் நின்று கொள்ளலாம்.

தனி மனிதனுக்கு முடிந்த அளவு அதிக மரியாதை காட்டுவது, தனி மனிதனிடம் முடிந்த அளவு அதிகமாகக் கோருவது என்ற அடிப்படைக் கோட்பாடு, தண்டனை முறை அனைத்தையும் திட்டப்படுத்த வேண்டும்.

சமுதாயத்தைச் சரியாக ஒழுங்கமைக்க ஏற்பாடு செய்யப்பட்டிராவிட்டால் எந்தத் தண்டனை முறையும் பயன் விளைக்காது. சமுதாயத்தின் பகுதிகளது துல்லியமான பரஸ்பர உறவு, இயக்குநரின் சித்த சக்தி, பொது அபிப்பிராயம், சுய நிர்வாக உறுப்புக்களின் ஊக்கமுள்ள வேலை, பள்ளிப் பாடத்திட்டத்தில் சேராத வேலை ஆகியவை சரியாக ஒழுங்கமைக்கப்படாவிட்டால், மாணவர்கள் தங்கள் பள்ளி பற்றிப் பெருமை கொண்டு அதன் நற்பெயரை உயர்வாக மதிக்காவிட்டால், தண்டனை முறை பயன் தராது. இதைச் சான்று காட்டி நிரூபிப்பது தேவை இல்லை. வெற்றியின் இரகசியம் தண்டனையில் அல்ல, இதில்தான் அடங்கி இருக்கிறது. ஆனால் கோரிக்கையின் பாங்கு தண்டனையில் வெளிப்படுகிறது.

இந்த நிபந்தனைகள் அனைத்தும் கடைப்பிடிக்கப் பட்டால் தான் நமது வேலையின் உள் நோக்கம் ஈடேற வாய்ப்பு கிடைக்கும். சுபாவத்தை ஊக்கத்துடன், லட்சியத் தெளிவுடன் உருவாக்குவதே அந்த நோக்கம்.

# சித்த உறுதி, ஆண்மை, ஒருமுனைப்பாடு

உழைப்பாளிகளின் கம்யூனிஸ போதனை பற்றிய பிரச்சினை நிர்ணயகரமான முக்கியத்துவம் உள்ள பிரச்சினை ஆகி இருக்கிறது. இந்தப் பிரச்சினை மீது மிக மிக விரிவான அக்கறை, இப்போது நமது சமூகத்தில் பேரலையாக எழுந்துள்ளது. இதைக் காண மகிழ்ச்சி உண்டாகிறது. கம்யூனிஸ போதனை பற்றிய பிரச்சினை, நம் நாட்டின் அரசியல் வளர்ச்சியின் தொடர்பாக முக்கியத்துவம் பெற்று விட்டது. அது மட்டும் அல்ல, அன்றாட வாழ்விலும், ஒவ்வொரு சோவியத் குடிமகனதும் வழக்கமான, தினப்படி மனப்பாங்கிலும் அது முக்கியம் ஆகி விட்டது.

நமது சமூகத்தின் ஒழுக்க நெறி உறவுகளின் துறையிலும் இயந்திரத் தொழில் துறையிலும் நமது செல்வ வளம், வளர்ச்சி, உலகப் புரட்சியில் நம் வெற்றிகள், முடிவாக, நமது இன்பம், மனித குலம் அனைத்தினதும் இன்பம் ஆகியவைகுறித்த பிரச்சினைகளிலும் இது நிர்ணயகரமாக விளங்குவதை நாம் நன்கு அறிவோம்.

இவை எல்லாவற்றையும் நாம் அறிந்திருப்பது, நாம் சிந்திக்கிறோம், கோருகிறோம், விரும்புகிறோம் என்பதால் மட்டும் அல்ல. நாம் இவற்றை, அறிந்திருப்பதற்குக் காரணம், கம்யூனிஸ போதனை நகல் திட்டமோ வருங்கால நோக்கோ அல்ல, இப்போதே நிலவும் எதார்த்தம் என்பதை நாம் காண்பதுந்தான். 1939ம் ஆண்டு சோவியத் மனிதன், நம் காலத்திய சோவியத் வெகுஜனங்கள், ஏகாதிபத்தியப் போருக்கு முந்திய மனிதர்களை மிகக் குறைந்த அளவே

ஒத்திருக்கிறார்கள். நமது மக்கள் பொதுச் செல்வ வளத்தி லும் அறிவியல்களிலும் உள வளர்ச்சியிலும் செயலுக்கும் போராட்டத்துக்கும் ஆயத்தமாய் இருக்கும் மனப்பான்மை யிலும் மேம்பட்டிருப்பதோடு ஒழுக்க நெறியிலும் மேம்பட் டிருக்கிறார்கள். இந்த மேம்பாடு மிகப் பெரிது. ''புதிய பண்புக்கு'' நமது ஒழுக்க நெறிப் பரிணமிப்பு இதனால் வெகு காலத்துக்கு முன்பே திட்டப்பட்டுவிட்டது.

மனிதனுக்கு முற்றிலும் புதிய கோரிக்கைகள் விடப்படு வதையும் மனிதனுடைய செயல்களுக்கும் நடத்தைக்கும் முற்றிலும் புதிய அளவுமானங்கள் ஏற்பட்டிருப்பதையும் நமது சமூகத்தில் ஒவ்வோர் அடியிலும் நாம் காண்கிறோம். சோஷலிஸ வீரம், நிலையுறுதி, புரட்சிக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் விசுவாசம் ஆகியவற்றின் சிறந்த ஆதர்சங்களாக விளங்கும் பெரியோர் பலரின் பெயர்கள் நம் நாட்டின் ஒவ்வொரு சிறுவனுக்கும் சிறுமிக்கும் தெரிந்தவை. நடை முறை சோவியத் ஒழுக்க நெறியின் இந்த உயர் முடிகளி லிருந்து மனிதனது நடத்தையையும் அவனிடம் கோரப்படும் பண்புகளையும் பற்றிய புதிய விதிகளின் அறிவு மக்களி டையே விரிவாகவும் ஆழமாகவும் பரவுகின்றது. இதனால் நம் சிந்தனையின் புதிய வகைப்பிரிவுகளும் செயலுக்குப் புதிய மரபுகளும் ஏற்படுகின்றன.

பல கோடி சோவியத் மக்களின் கம்யூனிஸ போதனை புரட்சியின் முதல் நாளிலிருந்து, லெனினது முதல் சொல்லி லிருந்து, உள்நாட்டுப் போர் முனைகளில் நடந்த முதல் சண்டைகளிலிருந்து தொடங்கிவிட்டது. அதன் பின்னர், இந்த இருபத்தோர் ஆண்டுகளாக, சோஷலிஸக் கட்டுமானத் தின் மாண்பு மிக்க சோதனைக் காலம் முழுவதும், கம்யூனிஸ போதனை இடையறாது நடந்து வருகிறது. இந்த போதனை, கவனத்தைக் கவராத, உணர்ச்சியில் படாத வகையில், போகிற போக்கில் போல, முதன்மையற்ற துணைச் செயல் முறைகளில் போல, ஆனால் உண்மையில் உணர்வுபூர்வமாக வும் ஒருமுனைப்பாட்டுடனும் செய்யப்பட்டு வருகிறது. தங்களது நேரான பொருளாதார, இராணுவ, அல்லது அரசியல் உட்கருத்தோடு கூடவே போதனை உட்கருத்தும் கொண்டிராத, புதிய ஒழுக்க நெறிக்கு வளம் கூட்டுபவையாக வும் புதிய ஒழுக்க நெறி அனுபவத்தை உயர்த்துபவையாக

வும் இல்லாத எந்த ஒரு செயலும் எந்த ஒரு சொல்லும் எந்த ஒரு மெய் விவரமும் நமது வரலாற்றில் இல்லை என்று நேரான அர்த்தத்தில் கூறலாம்.

இந்த ஒழுக்க நெறி அனுபவமும் ஏற்கனவே தோன்றி விட்ட செயல்பற்றிய அளவுமானங்களும் கண்டிப்பாக முறை யாக்கப்படவில்லை, திட்டவட்டமான அடிப்படைக் கருத்துக் களாகவும் குறிச் சொற்களாகவும் இன்னும் அமைக்கப்பட வில்லை. இன்னும் முக்கியமானது, இவை அனைத்து மக்களின் அனுபவ மரபுகளாக விரிவடையவில்லை என்பதாகும். பழைய ஒழுக்க நெறிக்கும் புதிய ஒழுக்க நெறிக்கும் இடையே ஓரளவு போராட்டத்தை நாம் இப்போதும் மிக அடிக்கடி காண் கிறோம். நடத்தையின் பல்வேறு விவரங்கள் பற்றிய விவா தங்களையும் விளங்காமையைக் காட்டும் சொற்களையும் இன்னும் கேட்க நேரிடுகிறது. காதல், நட்பு, பொறுமை, விசுவாசம், கௌரவம் ஆகியவை குறித்த பல அடிப்படைக் கருத்துக்கள் இன்னும் சமநிலைப்படுத்தி முறையாக்கப் பட வில்லை. இந்த விஷயங்கள் தற்போது நம் இளைஞர்களின் சிந்தனையை ஆட்கொண்டிருக்கின்றன. அவர்கள் இவற்றுக்குச் சரியான விளக்கங்களை ஆர்வத்துடன் தேடிக்கொண்டி ருக்கிறார்கள். ஏனென்றால் பழகுமுறைகளில் கம்யூனிஸச் செவ்வைப்பாட்டை அவர்கள் கோருகிறார்கள், விரும்பு கிறார்கள்.

முதன்மை முக்கியத்துவம் உள்ள பிரச்சினைகளில் ஒன்று, சித்த உறுதியையும் ஆண்மையையும் ஒருமுனைப்பாட்டை யும் வளர்க்கும் பிரச்சினை ஆகும். நடத்தையின் இந்தப் பண்புகளை மக்கள் அனைவரும் காட்டிய வேறு காலகட் டத்தை உலக வரலாறு முழுவதிலும் தேடினாலும் காண்பது கடினம். நாம் அடைந்த எல்லா வெற்றிகளும் நம்முடைய விறல்மிக்க சித்த உறுதி, நமது தன்னலமற்ற ஆண்மை, உணர்வுபூர்வமாகவும் விடாப்பிடியான ஒருமுனைப்பாட்டுட னும் குறிக்கோளை நோக்கி நாம் செய்த முன்னேற்றம் ஆகிய வற்றின் விளைவே ஆகும். இவ்வாறு இருப்பினும், ஒருவேளை இந்தக் காரணத்தினாலேயே போலும், சித்த உறுதியை வளர்க்கும் பிரச்சினைகள் நமது அன்றாட வாழ்வின் மிக முக்கியமான உடனடிப் பிரச்சினைகள் ஆகிவிட்டன. நமது நாடு புதிய ஏற்றம் அடைந்துவரும் இந்தச் சமயத்தில்,

கம்யூனிஸத்துக்குச் செல்லும் திட்டமான பாதைகளில் அது அடிவைத்திருக்கும் இந்தச் சமயத்தில், இந்தப் பிரச்சினைகள் முன்னிலும் அதிக முக்கியம் ஆகிவிட்டன.

நம் நாட்டில் சித்த உறுதியையும் ஆண்மையையும் வளர்க்கும் செயல்கள் இன்றும் ஒவ்வோர் அடியிலும் நிகழ்ந்து வருகின்றன என்பது உண்மையே. ஒவ்வொரு நாளும் இந்தத் துறையில் இன்னும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படாத வெற்றிகள் கிடைத்து வருவதிலும் சந்தேகம் இல்லை. ஆயினும், இன்னொன்றும் மிகத் தெளிவாய் இருக்கிறது. சித்த உறுதியையும் ஆண்மையையும் ஒருமுனைப் பாட்டையும் வளர்க்கும் செயல் சில வேளைகளில் தன் போக்கில் நிகழ்கிறதே தவிர, இந்த வேலை உணர்வுபூர்வமாக, ஒழுங்கமைந்த முறையில், திட்டவட்டமாகப் போதிய அளவு செய்யப்பட இன்னும் தொடங்கவில்லை. இந்த உண்மையைத் தூய போல்ஷிவிக் நேர்மையுடனும் வெளிப்படையாகவும் சொல்லிவிட நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

சிறப்பாக, நம் பள்ளிகளின் விஷயத்தில் இதைச் சொல்வது அவசியம். இந்தப் பிரச்சினையின் முக்கியத்துவத்தை மிகையாக மதிப்பிடுவது கடினம். நம்முடைய பள்ளிகளில் மூன்று கோடிக்கும் மேல் சிறுவர் சிறுமியரும் குழந்தைகளும் பயில்கிறார்கள். எந்த அரசின் எந்தச் சைனியத்தையும் விடப் பல மடங்கு அதிகமானது இந்த எண்ணிக்கை. பல அரசுகளின் மொத்த மக்கள் தொகைகளை விடக் கூட இது அதிகம். மிக மிக முக்கியமான இந்த போதனை வேலையில் பத்து சத விகிதம் மட்டமானது என்று வைத்துக்கொண்டாலும்கூட, மோசமான போதனை பெற்றவர்களும், ஒருவேளை தீங்கான முறையில் போதனை பெற்றவர்களுமான முப்பது லட்சம் இளைஞர்கள் நமது சமூகத்தில் சேர்ந்து விடுவார்கள். பொதுக் கல்வியும் போதனையும் நமது அரசில் மிகப் பெருத்த எண்ணிக்கையுள்ள மக்களுக்கு அளிக்கப்படுவதால் இந்த வேலையில் ஒரு சத விகிதம் பழுதடைந்தாலும் பெரிய பள்ளங்கள் விழுந்துவிடும் அபாயம் நமது நாட்டுக்கு எதிர்ப்பட்டு விடுகிறது.

நிலையான இந்த அரசியல் பிரச்சினை எதிர் நிற்கையில் பின்வரும் கேள்வியைக் கேட்பது பொருத்தமானதே: பள்ளி போதனையை ஒழுங்கமைக்கும் துறையில் என்ன செய்யப்பட்

டிருக்கிறது, என்ன செய்யப்படுகிறது? இதற்குப் பதில் துயர் மிகுந்த சொற்களில் அளிக்க வேண்டி இருக்கும். சோவியத் வாழ்க்கையில் வேறு எந்தத் துறையிலும் நமது சோவியத் காரியம் இவ்வளவு உறுதியின்றி, தெளிவின்றி, நிச்சய மின்றிச் செய்யப்படவில்லை...

நம்முடைய போதனை இயல் துறையின் நலமின்மையைக் கட்சி பல முறை சுட்டிக் காட்டி விட்டது. எனினும் நம் மக்கள் கல்வித்துறை மாவீரன் ''சற்றும் அசைந்து கொடுக்கக் காணோம்...''

''நாங்கள் யாரைப் போதித்து உருவாக்க விரும்புகிறோம் என்பது எங்களுக்குத் தெரியாது... ஆண்மையை வளர்க்க வேண்டுமா என்பது எங்களுக்குத் தெரியாது. இவ்வாறு செய்வது 'போதனை இயலுக்கு ஏற்றதல்லவோ' என்னவோ? ஒருவேளை இது உடல் நலத்துக்கு அபாயமாய் இருந்தாலோ? தாய்மார் கோபித்துக் கொண்டுவிட்டாலோ?'' இப்படி வெளிப்படையாக ஒப்புக்கொள்வதற்கு முதன்மையாக ஆண்மை வேண்டும்.

இந்தக் குழப்ப நிலைக்கு யார் பொறுப்பாளி? மன்னியுங்கள், போதனை இயல் அறிஞர்கள் எங்கே போய்விட்டார்கள்? கம்யூனிஸ போதனை பற்றிய பிரச்சினைகளைத் தயாரித்து, அவற்றைக் குறித்துச் சிந்தனை செய்து தீர்ப்பதற்குக் கடமைப்பட்ட, வெகு காலமாகவே கடமைப்பட்ட, நூற்றுக் கணக்கான போதனை இயல் பொறியாளர்கள் எங்கே? கம்யூனிஸ போதனை என்னும் இரண்டு சொற்களும் போதனை இயல் கட்டுரைகளில் போல அத்தனை அடிக்கடி வேறு எங்கும் முழங்கவில்லையே! சித்த உறுதியையும் ஆண்மையையும் ஒருமுனைப்பாட்டையும் உருவாக்கி வளர்ப்பது பற்றி இந்தக் கட்டுரைகளில் என்ன சொல்லி இருக்கிறது?

வேறு பல போதனைப் பிரச்சினைகள் போன்றே இந்தப் பிரச்சினைகளும் வரிசையிலிருந்து எதார்த்தத்தில் அகற்றப் பட்டு விட்டன. இந்தப் பிரச்சினைகள் போலி விஞ்ஞானப் பிதற்றல்கள் நிறைந்த நூல்களின் அட்டைக் கட்டடத்துக்குள் மறைக்கப்பட்டுள்ளன. போதனை பற்றிய தனிப் பிரச்சினைகள் எவையும் இல்லை, போதனை கல்வி கற்பிக்கும் செயல் முறையுடன் பிரிக்க முடியாதபடி இணைந்தது என்ற, வழக்கொழிந்ததும் நமக்கு முற்றிலும் அயலானதும் ஆகிய

வலிந்துரையால் போர்க்கப்பட்டுள்ளன இந்தப் பிரச்சினைகள். இவ்வளவு எளிய, பேதைமை வாய்ந்த செப்படி வித்தை செய்யப்படுகிறது என்பதை நம்புவதுமெய்யாகவேகடினமாய் இருக்கிறது... கம்யூனிஸ போதனை குறித்த பிரச்சினைகளை நேர்மையுடன் ஆழ்ந்து ஆராய்வதற்குப் பதில், அறிவாளிகள் போன்று முகத்தை வைத்துக் கொண்டு இவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்:

''போதனையா? எதற்காக? ஆசிரியன் கற்பிக்கிறான், அதே சமயம் போதனையும் அளிக்கிறான். வரலாறு! வரலாறு ஒன்று மட்டும் எவ்வளவு போதனை அளிக்கும் தெரியுமா? உங்களால் எண்ணிப் பார்க்கவே முடியாது!...''

வரலாறு சந்தேகமின்றி போதனை அளிக்கிறது. இலக்கியமும் கணிதமும் கூடத்தான் போதனை நல்குகின்றன. ஆனால், போதனைச் செயல்முறையை வகுப்புப் பாடத்துக்குள் வரையறுக்கும் உரிமை ஒருவருக்கும் கிடையாது. கட்டிடம் கட்டும் போது மைய வெப்ப அமைப்பையும் கூரை வேய்வதையும் பற்றிய பிரச்சினைகளில் கவனம் செலுத்தினால் போதும் என்று கூறுவதற்குக் கட்டிடப் பொறி இயலாளனுக்கு எப்படி உரிமை கிடையாதோ அப்படியே தான் இதுவும்.

பள்ளி போதனை ஒழுங்கமைப்பாளர்கள் ஏன் இவ்வளவு வெகுளித்தனமாக நடந்துகொள்கிறார்கள்? குறிக்கோளில் ஒருமுனைப்பாட்டுடன்... அவர்களுக்கே எவ்விதத் தொடர்பும் கிடையாது என்பதால் தான். எந்தக் குறிக்கோள்களிலும் அவர்களுக்கு விசேஷ அக்கறை கிடையாது. கம்யூனிஸ போதனை என்ற குறிக்கோளிலும்தான். இது தவிர, வேறொரு விதமான மனப்போக்கும் அவர்களிடம் காணப்படுகிறது: அட, எப்படியாவது காரியம் சரிப்பட்டு விடும். நாம் என்ன, பாலமா கட்டுகிறோம், அது ஒரு மாதத்தில் இடிந்து விழக் கூடுமே என்று சஞ்சலப்படுவதற்கு! நாம் மாணவனைக் கற்பித்துப் பயிற்றுகிறோம். அவன் எப்பேர்ப்பட்ட மனிதன் என்பதை யார் கண்டார்கள்? இளங் கம்யூனிஸ்டுகள் சங்கம், குடும்பம், முன்னோடிச் சிறுவர்கள் நிறுவனம் முதலியவை தாம் இருக்கின்றனவே... எப்படியாவது சரிப்படுத்தி விடும்.''

எதார்த்தத்தில் நடப்பது என்ன? போதனை வேலை போன்ற மிகப் பெரிய அரசு முக்கியத்துவம் உள்ள காரியம் முழுவதும் தனித் தனியே பிரிந்த ஆசிரியர்களிடமும் முன்னோடிச்

சிறுவர் நிறுவனத் தலைவர்களிடமும் ஒப்படைக்கப்படுகிறது. இந்த ஆசிரியர்களில் இளைஞர்களும் அனுபவம் அற்றவர்களும் மிகப் பலர். முன்னோடிச் சிறுவர் நிறுவனத் தலைவர்களிலோ, அனுபவசாலி ஒருவர்கூடக் கிடையாது....

நம் போதனை இயல் வழக்கைப் பின்வருவது போன்ற கேலித்துணுக்குகள் சித்திரித்துக் காட்டுகின்றன என்றால் வியப்பில்லை: ''இது போதனைச் சாதனம்'', ''இது போதனைச் சாதனம் அல்ல'' என்ற சொற்கள் நம்மிடையே மிக அடிக்கடி கூறப்படுகின்றன. போதனைச் சாதனம் என்பது திட்டமான போதனை இயல் குறிக்கோளை அடைய உதவுவது என்று விஷயம் தெரியாத மனிதன் நினைக்கலாம். தவறு! அப்படி ஒன்றும் கிடையாது! போதனைச் சாதனம் என்பது அடைய உதவும் குறிக்கோள் ஒன்றுதான்: ''எல்லாம் நலமே நடந்தேற வேண்டும். ஆடுகளுக்கும் வயிறு நிரம்ப வேண்டும், புல்லும் குறையாமல் அப்படியே இருக்க வேண்டும். ஒருவருக்கும் மனத்தாங்கல் ஏற்படக் கூடாது, மொத்தத்தில் ஒரு தொந்தரவும் இருக்கக் கூடாது.''

அன்பு நிறைந்து பொங்கும் சில தாய்மார்கள் உண்டு. இவர்களுடைய போதனை முறை, ''குழந்தைக்கு வயிறு நிறைந்திருக்க வேண்டும், குழந்தைக்குத் தடிமல் பிடிக்கக் கூடாது'' என்ற ஒரே சூத்திரத்தில் அடங்கி விடும். நம்முடைய சில பள்ளிகள் இந்தத் தாய்மாரை ஒத்திருக்கின்றன. வெளிப்பகட்டான ''நூற்றுக்கு நூறு'' படிப்பு முன்னேற்றத்தை அவை குழந்தைகளின் வயிறுகள் புடைக்க ஊட்டுகின்றன. ஆண்மை, அல்லது குறிக்கோளில் ஒருமுனைப்பாடு ஆகியவற்றால் குழந்தைகளுக்குத் தடிமல் பிடித்துவிடாதபடி அவை பார்த்துக் கொள்கின்றன. தொலைநோக்கு இல்லாத பரிவு காரணமாக குழந்தைகளின் படிப்பு முன்னேற்றமும் உடல் நலமும் எவ்வளவு பாதிக்கப்படுகின்றன என்பதைப் பற்றிச் சிந்திக்க, அந்தத் தாய்மாரைப் போலவே, இந்தப் பள்ளிகளுக்கும் நேரம் இல்லை.,

ஆனால் நிம்மதியாக வாழ முடிகிறது. செய்த வேலையைச் சத விகிதங்களில் எடுத்துக் கூற முடிகிறது. மற்ற சோவியத் துறைகள் எல்லாவற்றிலும் மக்கள் தேட்டங்கள் நடத்துகிறார்கள், துணிவுடன் முன் செல்கிறார்கள், கண்டுபிடிக்கிறார்கள், சில வேளைகளில் ஆபத்தை மேற்கொள்கிறார்கள், ஆனால்

எப்போதும் புதியதைப் படைக்கிறார்கள் என்பதை மறந்து விட முடிகிறது.

ஆண்மை! ஆண்மையுள்ள மனிதனைப் போதித்து உருவாக்கும் குறிக்கோளை நிறைவேற்றுவது என்று ஆழ்ந்த முறையில், நேர்மையுடன், தீவிரமாக சங்கற்பம் செய்து கொண்டு பாருங்கள். அப்போது வெறுமே ஆன்மாவைக் கடைத்தேற்றும் உரையாடல்களுடன் நிறுத்திக் கொள்வது முடியாது. வெளிக் காற்று வராதபடி பலகணித் திறப்புக்களை அடைப்பது முடியாது. குழந்தையைப் பஞ்சு வைத்த போர்வையால் இறுகப் போர்த்துவிட்டு, பப்பானினுடைய* வீரச் செயல்களைப்பற்றி அவனுக்குக் கதை சொல்வது முடியாது. ஏன் என்றால் இவ்வாறு செய்வதால் விளையும் பயன் என்ன என்பது நுண் உணர்வுள்ள உங்கள் மனச்சான்றுக்குத் தெளிவாகப் புரியும்: மற்றவர்களுடைய அருஞ் செயல்களை வெறுமே வேடிக்கை நிகழ்ச்சிகளாக, பொழுது போக்குச் சாதனங்களாகக் கருதும் உணர்ச்சி வரண்ட பார்வையாளனையே நீங்கள் உருவாக்குவீர்கள்.

ஆண்மையைக் காட்டுவதற்கு ஏற்ற நிலைமைகளில் ஒருவனை வைக்காமல் ஆண்மையாளன் ஆக்க முடியாது. இத்தகைய ஆண்மை தன்னடக்கத்திலோ, ஒளிவு மறைவற்ற, உளந்திறந்த பேச்சிலோ, சில இன்மைகளைத் தாங்கிக் கொள்வதிலோ, பொறுமையிலோ, துணிவிலோ—எதில் வேண்டுமானாலும்—வெளிப்படலாம். சோவியத் சித்த உறுதி பூர்ஷ்வா சமூகத்தில் உள்ள சித்த உறுதியிலிருந்து எதில் வேறுபடுகிறது என்று முன்கூட்டி முடிவு செய்து கொள்ளாமல் சித்த உறுதியை வளர்க்கும் பணியைத் தொடங்குவது கூடாது. பூர்ஷ்வா சமூகத்தில் மற்ற மனிதனை நசுக்குவதற்கு ஏற்ற சித்த உறுதி தேவை. அங்கே குறிக்கோளில் ஒருமுனைப்பாடு சமூகச் செல்வத்தில் சிறந்த பகுதியைக் கைப்பற்றிக் கொள்வதில் ஈடுபடுத்தப்படுகிறது. போதனை இயல் அனைத்தையும் ''தனிநபர்'' அணுகுமுறை எனப்படுவதாகக் குறுக்கி விடும்போது நாம் நம்முடைய வகைப் பிரிவுகளுக்குப் பதில் இந்த பூர்ஷ்வா வகைப்பிரிவுகளை வைத்துக் கொள்ளும் ஆபத்தை மேற்கொள்கிறோம், அல்லவா?

---

* 82ம் பக்கத்தில் உள்ள அடிக்குறிப்பைப் பார்க்க.

கம்யூனிஸச் சித்த உறுதி, கம்யூனிஸ ஆண்மை, கம்யூனிஸ ஒருமுனைப்பாடு ஆகியவற்றை சமுதாயத்தில் தனிப்பட்ட பயிற்சிகள் இல்லாமல் உருவாக்கி வளர்க்க முடியாது. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தனியே பேசிச் செல்வாக்கு விளைக்கும் முறையோ, நிம்மதியான எதிர்ப்பின்மை முறையோ, நிதானமும் நிசப்தமும் கடைப்பிடிக்கும் முறையோ நமது போதனை வேலையின் உள்ளடக்கமாக இருக்கக் கூடாது. சமுதாயத்தை ஒழுங்கமைப்பதும் தனி மனிதனிடம் கோரப் படும் நிபந்தனைகளை ஒழுங்கமைப்பதும் சமுதாயத்துடன் சேர்ந்து தனி மனிதன் குறிக்கோளை நோக்கி முன்னேறு வதற்கான, நிறைவேறக் கூடிய, உயிரோட்டமுள்ள முயற்சிகளை ஒழுங்கமைப்பதுமே நமது போதனை வேலையின் உள்ளடக்கமாக இருக்க வேண்டும்....

எதார்த்தத்தில் நாம் மாணவனுக்கு போதனை அளிப்பதில்லை. நமது சௌகரியத்துக்கு இன்றியமையாத சில முதற்படித் தடைகளைத் தவிர வேறு எதையும் நாம் மாணவனிடம் கோருவதில்லை. மாணவன் வகுப்பில் சந்தடி செய்யாமல் உட்கார்ந்து இருக்கும்படி (எப்போதும் அல்ல) நாம் பார்த்துக் கொள்கிறோம். உபயோகமான கட்டுப்பாட்டை ஏற்படுத்தும் லட்சியத்தை நாம் வைத்துக் கொள்வதே இல்லை. நம்முடைய பள்ளி மாணவர்களிடம் ஒழுங்குக் கட்டுப்பாடு இப்போதும் சில வேளைகளில் காணப்படுகிறது, ஆனால் போராட்டக் கட்டுப்பாடு, வெற்றி கொள்ளும் கட்டுப்பாடு இருப்பதில்லை. மாணவன் ஏதேனும் ஒரு தவறு செய்யும் வரை நாம் காத்திருக்கிறோம், அப்புறம் அவனை "போதனை மூலம் சீர்படுத்தத்" தொடங்குகிறோம். தவறுகள் செய்யாத மாணவனிடம் நமக்கு அக்கறை ஏற்படுவதில்லை. அவன் எந்தத் திசையில் செல்கிறான், பார்வைக்குப் புலப்படும் அவனது வெளி ஒழுங்குக்குப் பின் எத்தகைய சுபாவம் மலர்கிறது என்பதை நாம் அறியோம், அறியும் திறனும் நமக்கு இல்லை. "கமுக்கமானவன்", "இயேசு தாசன்" சுக்கஞ் செட்டி, சமயத்துக்குத் தக்க வேஷம் போடுபவன், சுரத்து இல்லாதவன், பராக்குப் பார்ப்பவன், மினுக்கன், அண்டிப் பிழைப்பவன், மாந்தரை வெறுப்பவன், கனவு காண்பவன், பொட்டை உருப் போடுபவன் முதலிய பரவலாகக் காணப் படும் சுபாவ மாதிரிகள் போதனையாளர்களான நம்முடைய

கவனத்தில் படாமல் இருந்துவிடுகிருர்கள். அவர்கள் நிலவு வதைச் சில வேளைகளில் நாம் கவனிக்கிறேம். ஆனல், முதலாவதாக, அவர்கள் நமக்கு இடைஞ்சல் செய்வதில்லை, இரண்டாவதாக, அவர்களை என்ன செய்வதென்று நமக்குத் தெரிவதில்லை. குறும்புக்காரர்களும் ஒழுங்கைக் குலைப்பவர்களும் அல்ல, இந்த மாதிரிக் குழந்தைகள்தாம் உண்மையில் கேடு செய்யும் மனிதர்களாக வளர்கிருர்கள்.

நம் நாட்டில் மூன்று கோடிக்கும் மேற்பட்ட குழந்தைகள் போதனை பெற்று வரும் இந்தக் காலத்தில், இந்த மாபெரும் பணியின் வெற்றி, பத்து லட்சம் ஆசிரியர்களின் தனித் தனி முயற்சிகளை அல்ல, பள்ளியை முழுமையாக ஒழுங்கமைப் பதையே சார்ந்திருக்கிறது. குழந்தைகளிடம் நாம் கோரும் நிபந்தனைகளின் பாங்கு, தோரணை, குழந்தைகள் சமுதாயத்தில் நிலவும் கட்டுப்பாடு, விளையாட்டு ஆகியவற்றின் பாங்கு, சித்த உறுதியை வலுப்படுத்துவதற்கும் ஆண்மையை வளர்ப் பதற்கும் தெளிவான, விரும்பத்தக்க பெரிய லட்சியங்களை நோக்கி இடையருது முன்னேறுவதற்கும் விரிவாக ஒழுங்கமைக்கப்பட்ட முறையான பயிற்சிகள் ஆகியவற்றையே இந்தப் பெரும் பணியின் வெற்றி முழுமையாகச் சார்ந்திருக் கிறது.

இத்தகைய போதனை வேலை அதிகப் பயன் விளைப்பதோடு ஆசிரியர்களுக்கும் எவ்வளவோ உவப்பாக இருக்கும். நமது ஆசிரியர் குழாம், தனது உத்திகளின் பக்குவமின்மையாலும் வரட்சியாலும் போலியான நற்பண்பாலும் தற்போது பெரிதும் இடர்ப்படுகிறது. எங்கிருந்தோ நம்மிடம் வந்துவிட்ட கணக் கற்ற அநாகரிக மூட நம்பிக்கைகளாலும் அது தொல்லைப் படுகிறது. உதாரணமாக, வெட்டியான, பொருளற்ற, நோக்கப் பொருத்தம் இல்லாத இயக்கம் குழந்தைகளின் இயல்புக்கு இன்றியமையாதது என்ற கருத்து இன்றளவும் நிலைத்த உண்மையாக மதிக்கப்படுகிறது. வகுப்பில் எதிர்ப் பின்மை, அதனல் பாடம் முழுவதும் இடை முறிந்தாலும், ''போதனைச் சாதனமாகக்'' கருதப்படுகிறது. இன்றளவும் நமது சிறுவன் ஓர் ஆண்டுக் காலத்தில் கூட ஒரு சமுதாயத் திலிருந்து மற்றென்றுக்குப் பந்தாடப்படுகிறுன். ''சமுதாயப் புறம்பான'' நபரை இவ்வாறு விடாப்பிடியாகப் போதித்து

வளர்ப்பதைக் காட்டிலும் கேடு விளைப்பது உண்மையில் வேறு எதுவும் இல்லை.

நம்முடைய பள்ளிகளின், நம் குழந்தைகள் சமுதாயங்களின் வாழ்க்கை இன்னும் அதிக உற்சாகமும் அதிக மேம்பாடும் அதிகக் குதூகலமும் அதிகக் கண்டிப்பும் உள்ளதாக இருக்க வேண்டும். அப்போதுதான் நம்முடைய பள்ளிகள் போலி நிம்மதி அளிக்கும் தன் போக்கான ஒழுக்கநெறி முயற்சிகளுக்குத் தலை முழுகிவிட்டு, கம்யூனிஸ போதனையில் தங்கள் பணிகளை நிறைவேற்றத் தொடங்கும்.

இத்தகைய வேலைக்கு ஆசிரியர்களின் அதிக ஆற்றலும் அதிக உள வலிமையும் அதிக நேர்மையும் அதிகத் துணிவும் தேவைப்படும். ஆனால் இதில் கஷ்டத்தோடு கூடவே மனநிறைவும் இருக்கிறது. நம்முடைய பத்துலட்சம் இளம் ஆசிரியர்களுக்கு அலுவலறைகளுக்குள் நடக்கும் தெளிவற்ற, கோழைத்தனமான யோசனைகள் என்ற சத்தற்ற உணவையே ஊட்டிக்கொண்டிருப்பது கூடாது. நமது குழந்தைகள் சமூகம் சோவியத் நாடு அனைத்தினதும் வாழ்க்கையைப் பிரதிபலிக்க வேண்டும். நமது சமூகம் அனைத்தையும் போன்றே பள்ளிகளும் சித்த உறுதியுடனும் ஆண்மையுடனும் ஒருமுனைப்பாட்டுடனும் கம்யூனிஸத்துக்காகப் போராட வேண்டும். அது போன்றே மகிழ்ச்சியுடன் போராட வேண்டும்!

அ.செ. மக்காரென்கோவின் முக்கியமான
போதனை இயல் நூல்கள்:

**போதனை இயல் காவியம்,** *இரண்டாம் பதிப்பு, பாகம் 1. ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் போதனை இயல் அக்காதமி வெளியீடு, 1957 (இந்த நூல் தனிப் புத்தகமாக வெளியிடப்பட்டிருக்கிறது).*

**30ம் ஆண்டு அணிநடை, உவமைப் பெருக்கு,** *பாகம் 2, ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் போதனை இயல் அக்காதமி வெளியீடு, 1957.*

**கோபுரங்கள் மேல் கொடிகள்,** *பாகம் 3, ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் போதனை இயல் அக்காதமி வெளியீடு, 1957.*

**பெற்றோர்களுக்கு.** *குழந்தைகளைப் போதித்து வளர்ப்பது பற்றிய விரிவுரைகள். பாகம் 4, ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் போதனை இயல் அக்காதமி வெளியீடு, 1957.*

**போதனை இயல் சித்தாந்தத்தின் பொதுப் பிரச்சினைகள்.** *சோவியத் பள்ளியில் போதனை (பள்ளிகளில் சோவியத் போதனை—சில பிரச்சினைகள், ''என் போதனை அனுபவத்திலிருந்து பெற்ற சில முடிவுகள்''), பாகம் 5, ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் போதனை இயல் அக்காதமி வெளியீடு, 1958.*

**கதைகளும் கட்டுரைகளும்; மக்ஸீம் கோர்க்கிக்கு எழுதிய கடிதங்கள்.** *பாகம் 7, ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசின் போதனை இயல் அக்காதமி வெளியீடு, 1958.*

**தெரிந்தெடுத்த போதனை இயல் கட்டுரைகளின் திரட்டு.** *தொகுத்தவர் இ. ஃப. கஸ்லோவ், மாஸ்கோ, போதனை இயல் பாட நூல் பதிப்பகம், 1946.*

**கம்யூனிஸ போதனை.** *தெரிந்தெடுத்த போதனை இயல் கட்டுரைகள். மாஸ்கோ, போதனை இயல் பாட நூல் பதிப்பகம், 1956.*

**குழந்தை இலக்கியமும் குழந்தைகள் புத்தகப் படிப்பும்.** *கட்டுரைகள், மதிப்புரைகள், கடிதங்கள், மாஸ்கோ, குழந்தை இலக்கியப் பதிப்பகம், 1955.*

**இளைஞர்கள் போதனை.** *தெரிந்தெடுத்த போதனை இயல் கட்டுரைகளின் தொகுப்பு, இரண்டாம் பதிப்பு, மாஸ்கோ, 1951.*

## வாசக நேயர்களுக்கு

*இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் யோசனைகளை வரவேற்கவும்* **முன்னேற்றப் பதிப்பகம்** *மகிழ்வுடன் காத்திருக்கிறது.*

*கடிதங்களைத் தயைசெய்து* "Progress Publishers, 21, Zubovsky Boulevard, Moscow, USSR" *என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.*

**விற்பனையாளர்கள்**

---

## நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம்
*6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை-2*

ஷோ-ரூம்
*6/30, மவுண்ட் ரோடு, சென்னை-2*

கிளைகள்
*80, மேலக் கோபுர வீதி, மதுரை-1*
*87/89, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர்-1*
*சிங்காரத்தோப்பு, திருச்சிராப்பள்ளி-8*
*பஸ் நிலையம், தஞ்சாவூர்*

## "முன்னேற்றப் பதிப்பகம்"
## தமிழ் மொழியில் வெளியிடும் நூல்கள்

### வஸீலியெவ், ப. அதிகாலேயின் அமைதியில்.

*சோவியத் மக்கள் தாய்நாட்டைக் காக்கும் பொருட்டு பாசிஸத்தை எதிர்த்துப் போர் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். ஹிட்லர்படையின்விசேஷ ஆணைப் படி சோவியத் பின்புலத்தில் விமான மூலம் இறக்கப்பட்டார்கள் அழிவு வேலையினர். அவர்கள் இருப்புப் பாதைப் பாலத்தை வெடி வைத்துத் தகர்ப்பதற்காக அடர் காடுகள் வழியே போய்க் கொண்டிருக்கையில் சோவியத் விமானத்தாக்குப் பாதுகாப்புப் படை அணியைச் சேர்ந்த சார்ஜண்டு ரீதா அஸ்யானினு அவர்களைப் பார்த்துவிட்டாள். இந்தத் தகவல் சோவியத் இராணுவ அதிகாரிகளுக்கு உடனே கொடுக்கப்பட்டது. விமானத் தாக்குப் பாதுகாப்புப் படை அணியைச் சேர்ந்த ஐந்து படைவீரப் பெண்களும் சார்ஜண்டு மேஜர் வஸ்கோவும் பகைவர்களைத் தடுத்துச் சிறை பிடிக்க முடிவு செய்தார்கள். இந்த முயற்சியில் அவர்கள் எவ்வாறு, என்ன விலே செலுத்தி வெற்றி பெற்றுர்கள் என்பதை விவரிக்கிறது பரீஸ் வஸீலியெவ் எழுதிய ''அதிகாலேயின் அமைதியில்'' என்னும் குறு நாவல்.*

*இந்த நவீனம் சோவியத் மக்களால் பெரிதும் விரும்பப்பட்டது, நாடகம் ஆக்கப்பட்டது, திரைப்படமாகவும் உலகப் புகழ் பெற்று விட்டது.*

*பக்கங்கள் 160. 13×20 செ.மீ. காகித மேலுறை. படங்களுடன்.*

**பருஸ்தீன், செ. வாருங்கள், சுற்றிப் பார்ப்போம் சோவியத் நாட்டை.**

இந்த நூலைப் படிக்கும் போது சிறுவர் சிறுமியர் சோவியத் நாட்டின் ஆறுகளிலும் கடல்களிலும் மலைகளிலும் சுற்றுலா வருவார்கள், அதன் இயற்கை வளங்களைத் தெரிந்து கொள்வார்கள். நகரங்களைக் கட்டுபவர்களும் விண்வெளிக் கப்பல்களை நிறுவுபவர்களும் வேளாண்மை செய்பவர்களுமான மனிதர்களை அவர்கள் அறிமுகம் செய்து கொள்வார்கள். நட்பார்ந்த ஒரே குடும்பமாக வாழும் வெவ்வேறு சோவியத் நாட்டினக் குடியரசுகளை அவர்கள் சுற்றிப் பார்ப்பார்கள்.

நூலாசிரியர் செர்கேய் பருஸ்தீன் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் பல புத்தகங்கள் வாயிலாக நன்கு தெரிந்தவர்.

புத்தகம் கவர்ச்சியான முறையில் அச்சிடப்பட்டுள்ளது. யூ. கரோவின் தீட்டியுள்ள பல வண்ணப் படங்கள் நூலுக்கு அணி செய்கின்றன.

பக்கங்கள் 22. 22.5$\times$29 செ.மீ. அட்டைக் கட்டடம்.